

• காதரீன்

# பார்க்கில் ஆடிய தம்பதி!

"நீங்க சென்னையிலே டிசம்பர் மாதம் கலைவிழா நடத்துகிற மாதிரி நாங்க இங்க ஜூலை மாதம் நடத்தறோம்" என்கிறார்கள் காதரீன் – குன்னிராமன் தம்பதி. 'இங்கே' என்று அவர்கள் குறிப்பிடுவது அமெரிக்காவிலுள்ள 'பெர்க்லி'.

காதரீன் அமெரிக்கப் பெண்மணி. இளமையில் கல்கத்தாவில் வசித்தபோது பார்த்து ரசித்த பரதநாட்டிய நிகழ்ச்சி மிகவும் பாதித்து விட, முதலில் கல்கத்தா ரவீந்த்ர பாரதியிலும் பின்னர் சென்னை கலாக்ஷேத்ராவிலும் முறையாக அக்கலையைப் பயின்றார். கலாக்ஷேத்ரா கலைஞரான குன்னிராமனைக் காதலித்து மணந்து அமெரிக்க அபார்ட்மெண்டில் குடியேறியபோது ஆரம்பித்தது பிரச்னை!

தரை அதிர அங்கு நாட்டியம் செய்ய முடியாதே...!

"ஐந்து ஆண்டுகள் நாங்கள் மிகவும் சிரமப்பட்டோம். யாரும் இல்லாத நேரத்தில் பார்க்குகளில் ஆடி பயிற்சி செய்வோம். அபார்ட்மெண்டில் எல்லோரும் காரை எடுத்துக் கொண்டு வேலைக்குப் போன பிறகு கார் ஷெட்டில் நாட்டியம் ஆடுவோம். குளிர் காலத்தில் கனமான கம்பளி ஆடைகள் அணிய வேண்டியிருக்கும். ஆட முடியாது. அதனால் துணிகளை உலர வைக்கும் 'டிரையர்' இயந்திரத்தின் கணப்புக்கு முன்னால் ஆடுவோம்



• வித்யா ஸ்ரீதர் (படம் : வி.கே.ராஜாமணி)



**"அந்தப் பையனோட அப்பா ஜவுளிக் கடை வச்சுருக்காரோ?"**
**"ஆமாம். அதெப்படி அவ்வளவு கரெக்டா கேட்கறீங்க?"**
**"பின்ன, உனக்குத் தெரிந்த இரு கடல்களின் பெயரைச் சொல்லுங்கன்னா அரபிக்கடல், ஜவுளிப் பெருங்கடல்னு பதில் சொல்றானே!"**

**- சொக்கம்பட்டி தேவதாசன்**

---

அப்போது கம்பளி தேவைப்படாது...)" என்று கடந்து வந்த கஷ்டங்களை விவரித்தார் காதரீன்.

பெர்க்லியில் இந்த தம்பதி நடத்தும் நாட்டிய வகுப்புகளில் நூறு மாணவர்கள் சேர்ந்துள்ளார்கள். "எல்லோருமே இந்தியக் குழந்தைகள்தாம்."

"நாற்பது பேருக்கு அரங்கேற்றம் செய்து வைத்திருக்கிறோம். பாடுவதற்குக் கலைஞர்களை சென்னையிலிருந்து வரவழைத்துக் கொள்கிறோம். செலவை சம்பந்தப்பட்ட மாணவிகளின் பெற்றோர் ஏற்கிறார்கள்..."

ஜூலை மாத கலைவிழா நிகழ்ச்சிகளில் வரவுக்கும் செலவுக்கும் சரிகட்டிப் போகிறதாம். "ஆசைக்காகத்தான் நடத்துகிறோம்" என்கிறார்கள்.

அமெரிக்க பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் தாங்களே முன்சென்று நாட்டியம் பற்றிய செயல்முறை விளக்கம் அளித்து ஆர்வம் பரப்ப முயன்றிருக்கிறார்கள் காதரீன் - குன்னிராமன்.

காதரீன் தமிழ்ப் பெண்ணாகவே வாழ்க்கை நடத்துகிறார். பெர்க்லியில் அவர்கள் வீட்டு வாசலில் போய் நின்றால் ஜதியோசை கேட்பதுடன் தோட்டத்தில் ஜாதி மல்லியும் மணக்கிறது. சமையலறையிலிருந்து தோசை வாசனை தவழ்ந்து வருகிறது!

## வித்யா: வித்தியாச வகுப்புகள்!

"என்னிடம் கற்றுக்கொள்ளும் மாணவர்களுள் வட இந்தியர்களும் நிறைய இருக்கிறார்கள்" என்கிறார் வித்யா (சுப்ரமண்யம்) ஸ்ரீதர் - இன்னொரு அமெரிக்கா வாழ் பரதக் கலைஞர். சான்ஃபிரான்ஸிஸ்கோவில் சன்னிவேல் நகரம் இவர் ஊர். சுற்றுப்பட்டியில் இன்னும் மூன்று பேர் பரத வகுப்புகள் எடுக்கிறார்களாம். எல்லோருக்குமே கிளாஸ் கொள்ளாமல் சிஷ்யர்கள்!

வாரத்தில் ஆறு நாட்கள் வகுப்பு. ஒரு மணி நேரம் பாடம் - அப்புறம் புல்வெளியில் வித்யாவுடன் விளையாடுகிறார்கள் சிஷ்யர்கள்!

"இரண்டு - மூன்று வருடங்கள் வரை அடவுகள் சொல்லித் தருகிறேன். அலாரிப்பு, ஜதிஸ்வரம், சப்தம், தில்லானா என்று படிப்படியாக மேலே போய், நட்டுவாங்கம் செய்யக்கூட சிலருக்குக் கற்றுத் தந்திருக்கிறேன். வருடாந்திர பரீட்சை, அதற்கு மார்க் எல்லாம் உண்டு. கற்பனையைத் தூண்டி விடுவதற்காக, சின்ன கதையைச் சொல்லி அதை நாட்டியமாக அமைக்கச் சொல்லுவேன். ரொம்ப ஆர்வத்துடன் செய்வார்கள்."

மாணவர்களைக் கொண்டு ஒரு சிறப்பு நிகழ்ச்சி ஏற்பாடு செய்த தினத்தில் வித்யாவின் கணவருக்கு சின்ன விபத்து நேர்ந்து நீக்காயம் ஆகிவிட்டது. குரு என்கிற முறையில் நிகழ்ச்சியில் இருந்தே ஆகவேண்டிய கட்டாயம் வித்யாவுக்கு. வீட்டுப் பிரச்னையை மாணவர்களின் அம்மாக்கள் ஒன்று சேர்ந்து சமாளிக்க, நிகழ்ச்சியை நடத்திக் கொடுத்திருக்கிறார் வித்யா.

"இப்படி ஒத்துழைப்பும் கலபமான வாழ்க்கை முறையும் இருக்கிறதாலே பரத நாட்டியத்திலே இன்னும் அதிகமாக ஈடுபாடு கொள்ள முடிகிறது" என்று சொல்லும் வித்யா, இந்தியாவில் எஸ்.கே. ராஜரத்தினம், கலாநிதி நாராயணன் ஆகியோரிடம் பயின்றவர். இப்போது அமெரிக்காவில் 'தியேட்டர் ஆர்ட்ஸ்' பட்ட மேல்படிப்பு படித்து வருகிறார்.

**— ஆனந்தி, சித்தார்த்**



**● நீங்கள் டீவி பார்த்துக் கொண்டிருக்கும் போது உங்கள் கணவர் ரீமோட் கண்ட்ரோல் பயன்படுத்தி சானலை மாற்றி எரிச்சலூட்டுகிறாரா? கவலை வேண்டாம். STOP IT என்ற கருவி அமெரிக்காவில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. இதைக் கையில் வைத்திருந்தால் ரிமோட்டைச் செயலற்ற தாக்கி விடலாம்!**

**— ஆனந்தராஜ்**

# நிகழ் மற்றும் எதிர்காலத்திற்குமாய்...

ஓஸோன் கூரை
பிய்த்துக் கொண்டது.

அடிக்கடி
அடித்துப் பெய்கிறது
அமில மழை.
நதிக்கரையோரத்
தூண்டிலில்
சிக்குவதெல்லாம்
உயிரற்ற மீன்கள்.
மியூசியத்தில்
மட்டுமே மரங்கள்.

கவிதையில் தான்
தாலாட்டும்
தென்றல்.
கனவில் கூட
சாத்தியமில்லாப்
பூக்கள்.
இது
நிகழ்கால கற்பனை
அல்ல.
எதிர்கால நிஜம்.

பெட்ரோல் தாகம் கொண்ட
வாகனங்களின்
கரிய பெருமூச்சு
சலவை நிலாவையும்
கறை படுத்தும்.

ராட்சச ஆலைகளின்
வியர்வை எச்சங்கள்
தண்ணீரை எல்லாம்
கண்ணீராக்கும்.

மரங்கள் -
மழையின் தாய்.
அதன்
ஆணி வேரில் விழும்
கோடாரிப் பாய்ச்சலால்
மழையும் மரித்துப் போகும்.

விஞ்ஞானம் -
இருபுறம் கூர் தீட்டப்பட்ட
விந்தை ஆயுதம்.
கையாளுபவரையும்
காயப்படுத்தி விடும்.
இது புரியவில்லையெனில்
நிகழ்ந்தே தீரும்
கல்கி அவதாரம்.
மீண்டும்
ஆதாம் ஏவாளிலிருந்து
வாழ்வின் பாடலை
ஆரம்பிக்க வேண்டும்.

வேண்டாம்.
யோசிப்போம்.
யோசிக்க வைப்போம்.

- மதுமிதா

கல்கி - அனுபவ் குரூப் இணைந்து நடத்திய
கவிதைப் போட்டியில் ஆறுதல் பரிசு ரூ.1,000
பெறும் கவிதை



# தி.நகரில் ஒரு 'திடீர்'க் கச்சேரி!

இசை என்றால் கல்லும் கரையும்; சரி, கடைக்கு வருகிறவர்கள்? அதுவும் புடைவைக் கடைக்கு?

விபரீதமாக ஒரு விளையாட்டு செய்ய ஆசைப்பட்டோம். கூட்டம் அலைமோதும் தி.நகர் குமரன் சில்க்ஸ் வளாகத்தில் முன்னறிவிப்பின்றி ஒரு கச்சேரி ஏற்பாடு செய்தால் என்ன என்று தோன்றியது.

தோதாக, குமரன் வளாகத்திலுள்ள முரளி மியூசிக்கல்ஸ் (இசைக் கருவிகள் விற்பனை செய்யும் கடை) அதிபர் கோவிந்த், "எங்கள் கடைக்கு உள்ளேயே உங்கள் கச்சேரியை நடத்திக் கொள்ளுங்கள்" என்று அனுமதி கொடுத்துவிட, யாரைக் கூப்பிடுவது என்பது அடுத்த யோசனை.



• வாசித்தபடியே விளக்கம்

பொதுவாக இதுமாதிரி அதிரடி சமாசாரங்களுக்கெல்லாம் பரம சாதுக்களான நம் வித்வான்கள் ஒப்புக் கொள்வார்களா என்று சந்தேகப்பட்டோம்.

ஆனால், நாம் தயங்கித் தயங்கி அணுகிய போதும் எவ்வித மறுப்போ, தயக்கமோ காட்டாமல் "நான் ரெடி! எப்போது வைத்துக் கொள்ளலாம்?" என்று உற்சாகமாகக் கேட்டார் பிரசன்னா. கிடாரில் கர்நாடக சங்கீதம் வாசிக்கிற தமிழர், இந்தியர், உலகர்.

இசை ரசிகர்களுக்குப் பிரசன்னாவை அறிமுகம் செய்யத் தேவையில்லை. அடுத்த பேரா, பிறருக்கு!



• பிரசன்னா

பிரசன்னா ஒரு பொறியியல் வல்லுநர். பி.டெக் முடித்திருக்கும் இளைஞர். ஆனால் தமது இசை ஆர்வத்துக்குப் படிப்பு தடையாக இருக்கலாகாது என்று படித்த (ஐஐடி) நேவல் ஆர்கிடெக்சர் படிப்பையும் அந்தத் துறையையுமே விடுத்து, முழு நேர இசைக்கு வந்து விட்டவர். கர்நாடக இசையை திருவாரூர் பாலசுப்பிரமணியத்திடமும் வயலின் கன்யாகுமரியிடமும் பயிலுபவர், மேற்கத்திய ஜாஸ் இசையைத் தற்சமயம் அமெரிக்காவில் உள்ள பெர்க்லி பல்கலைக்

கழகத்தில் பயின்று கொண்டிருக்கிறார். டிசம்பர் சீஸன் கச்சேரிகளுக்காக வந்திருக்கும் பிரசன்னா, நமக்காக மிஞ்சிப் போனால் இருபதடி கூட இருக்காத, இசைக் கருவிகள் கொட்டிக் கிடக்கும் முரளி மியூசிக்கல்ஸ் கடையில் ஒரு ஸ்டூலைப் போட்டுக் கொண்டு தமது திடீர்க் கச்சேரியை சென்ற சனிக்கிழமை பிற்பகல் 1.30க்குத் தொடங்கினார்.

"பொதுவா இங்க இன்ஸ்ட்ருமெண்ட்ஸ் வாங்க வர்றவங்க, கொஞ்ச நேரம் வாசிச்சுப் பார்க்கறதுண்டு. ஜனங்க அது மாதிரின்னு நினைச்சுக்கப் போறாங்க" என்று முரளி மியூஸிக்கல்ஸ் அதிபர் சந்தேகப்படவும், பிரசன்னா தன் கையோடு கொண்டு வந்திருந்த காண்டாக்ட் மைக், ஆம்ப்ளிஃபையர், சின்ன ஸ்பீக்கர், டீப் டிலே (Deep delay) என்கிற கையகலக் கருவி இவற்றைக் கொண்டு, சேர்த்துக் கொண்டிருந்த சுருதியின் நாதத்தைப் பெரிது படுத்தினார்.

அவ்வளவுதான். அக்கம்பக்கத்துக் கடைக்காரர்களெல்லாம் ஓடிவந்துவிட்டார்கள்!

"என்னது? என்னது?" என்று அவர்கள் ஒருத்தரை ஒருத்தர் கேட்டுக் கொண்டிருக்க, சிலீரென்று ஷவர் விழுவது போல 'மகா கணபதிம்' என்று ஆரம்பித்தார் பிரசன்னா.

வசிஷ்டரும் வாமதேவரும் 'சிந்து பைரவி'யில் ஜேசுதாஸ் கூப்பிட்ட போது ஓடிவந்தது போல இப்போதும் அந்த வளாகத்தில் ஓடிவந்து நிறைந்து கொள்ள, அக்கம்பக்கத்துக் கடைக்காரர்கள் அலற விட்டுக் கொண்டிருந்த டேப் டையெல்லாம் அணைத்து விட்டார்கள்!

ஜப்பானின் சுரங்க ரயில் வேகத்தில் ஸ்வரம் இட்டு, பக்கவாத்தியங்களே இல்லாமல் அந்த எஃபெக்டைத் தம் திறமையில் கொண்டுவந்து முடித்து நிமிர்ந்தார் பிரசன்னா.

"காலுக்கடியில வெச்சிட்டு, தையல் மிஷின் மாதிரி மிதிக்கறீங்களே, இது என்னது சார்?"

அந்தக் கீர்த்தனை எப்போது முடியும் என்று காத்திருந்து, வந்து கேட்டார் மணிகண்டன் என்கிற அன்பர்.

"இதுக்கு டீப் டிலேன்னு பேரு. ஒரு ஸ்வரத்தைப் பிடிச்சா, அதிலேயே விரும்பற வரைக்கும் நிற்கலாம்! இதோ பாருங்கள்..."

கல்யாணியில் ஒரு பிட் வாசித்து, மேல் ஸட்ஜமம் பிடித்துக் காட்டுகிறார், சாதாரணமாக.

"ஒரு 'டொய்ங்'. அதோடு அணைந்து விடுகிறதல்லவா? இப்போது பாருங்கள்!"

அதே மேல் சட்ஜமத்தை மீட்டிவிட்டு காலால் அந்தக் கருவியை ஒரு 'அழுத்'.

கையிலிருக்கிற கிடாரில் அந்த 'ஸ' நின்று, ஊஞ்சலாடுகிறது! எகிறிக் குதிக்கிறது! துள்ளிப் பாய்கிறது!

"ராக ஆலாபனை, நிரவல், துல்லியமான கமகம் இதுக்கெல்லாம் இந்தக் கருவி ரொம்ப உதவி செய்யும்..." என்றவர் சற்றுத் தயங்கி னார். "ஆனால் கர்நாடக இசைக் கச்சேரிகளில் இதையெல்லாம் உபயோகித்தால் விரும்ப மாட்டார்கள்!"

தன் கருவி - அதன் எல்லா எக்ஸ்ட்ரா ஃபிட்டிங்களுடன் சுமார் இருபதாயிரம் ரூபாய் விலை கொண்டது என்றார் பிரசன்னா.

இதற்குள் கடைவாசலில் பார்சல் கட்டுகிற, பிற சில்லறை வேலைகள் பார்க்கிற பையன்கள் கூடிவிட, அவர்களையும் கட்டிப் போட வேண்டி 'கதனகுதூகலத்தை'த் தொட்டார் பிரசன்னா.

ரகுவம்ஸ சுதா.

"இதை மேண்டலின் ஸ்ரீனிவாஸ் வாசிச்சிக் கேக்கணும்!" என்று முணுமுணுத்தார் கடையில் வீணைத் தந்தி வாங்க வந்த ஒருவர்.

ஆனால் அன்று பிரசன்னா அந்தக் கீர்த்தனையை ஸ்வரம் தப்பாமல் விரட்டிய


• மெய்மறந்து கேட்கிறார்கள்

வேகத்தில் கூடியிருந்த அத்தனை பேரும் மிரண்டு விட்டார்கள்.

குறிப்பாக அனுபல்லவியில். கிட்டத்தட்ட மேற்கத்திய ஃபாஸ்ட்-பீட் பாடல்களுக்குரிய சர்வலட்சணங்களுடனும் அமைந்தது அந்தப் பாடல்.

பிரசன்னா, தமது கிடாரின் நாலாவது தந்தியில் 'க-ப-ஸா-நி-ஸா'வுக்கு மேக்-அப் போட ஆரம்பித்ததும் "அட, மேண்டலின் மாதிரியே இதுலேயும் நல்லா இருக்கே?" என்று புல்லரித்தார் அவர்.

நாம் கேட்டுக் கொண்டதற்கிணங்க, வாசித்த படியே மைக்கின் சப்தத்தைப் பிரசன்னா இன்னும் பெரிதாக்க, இரண்டு மூன்று பெண்கள், அந்தக் குறுகிய நடைபாதையில்



அப்படியே அட்டென்ஷனில் நின்று விட்டார்கள்.

"யார் சார் வாசிக்கறாங்க?"

நாம் பிரசன்னாவைப் பற்றிச் சொன்னதும், "திடீர்க் கச்சேரியா? நீங்க கல்கி பத்திரிகைக் காரங்களா? ஏன் சார், ஏதாவது கிரவுண்டில் - இல்லை, பார்க்கில் வைக்கக் கூடாது? உட்கார்ந்து வசதியாகக் கேட்கலாமே? இங்கே நிற்கக் கூட இடமில்லையே?"

வருத்தத்துடன் குறிப்பிட்ட அந்தப் பெண்மணி, அடுத்ததாகப் பிரசன்னா வாசித்த சாம ஜவர சுமனாவைக் கேட்டுவிட்டு, கிளம்ப மனமில்லாமல் கிளம்பிப் போனார். "வெளியில ஹஸ்பெண்ட் காத்திருக்கார்!"

"அவரையும் கூட்டி வந்துடுங்களேன்!"

"இல்லை... வேணாம்... நான் கிளம்பறேன்!" அரை மனத்துடன் அவர் புறப்பட்டபோது பிரசன்னா ஒரு புதுவித முயற்சியில் இறங்கினார்.

தமது டீப்-டிலே கருவி மூலம் ஒரு மேற்கத்திய 'Base'ஐ செட் பண்ணிக் கொண்டு, பிலஹரி ராகத்தில் கடைந்தெடுத்த கர்நாடக இசைக் கோலம் ஒன்றை வரைய ஆரம்பித்தார்.

"இளையராஜா இதே ட்யூன்ல ஒரு ஃபேமஸ் பாட்டு போட்டிருக்கார் சார்! சட்டுனு ஞாபகம் வர மாட்டேங்குது!" - கடைக்கு வெளியே புடைவை வாங்க வந்த அரசு என்கிற இளைஞர் மண்டையைப் பிய்த்துக் கொண்டிருந்தார்.

அவரைச் சீண்டுவது போல பிரசன்னா வால்யூமை இன்னும் அதிகப்படுத்த, "ஐயோ, வர மாட்டேங்குதே!" என்று கிட்டத்தட்ட குதிக்க ஆரம்பித்து விட்டார்!

இதற்கு மேலும் அவரைத் தவிக்க விடுவது நல்லதல்ல என்று "கூந்தலிலே மேகம் வந்து குடிபுகுந்தாற்போல்..." என்று அந்தப் பாட்டை நாம் அடையாளம் காட்டியவுடன் அவர் முகத்தில் ஆயிரம் வாட்ஸ் பிரகாசம்!

"கரெக்டு சார்! அதேதான்!"

இதற்குள் விஷயம் வெளியே பினாட்பாரம் வரை பரவி, பலர் அங்கு வந்து குழுமி விட, ஏற்கெனவே குகை மாதிரி இருக்கிற அந்த வளாகம் மேலும் இருட்டி விட்டது!

ஸ்ரீராம் என்கிற வயலின் வித்வான் தற்செயலாக வந்திருந்தவர், "அட, பிரசன்னா! நான் இவர் கேஸட்டெல்லாம் கேட்டிருக்கேனே? ஏன் சார், சிந்து பைரவி வாசிங்களேன்!" என்றார்.

"வராளி முடியுமா?" என்றார் ஒரு முதியவர்.

கிட்டத்தட்ட நேயர் விருப்பமாகி விட, எதற்குமே முகம் சுளிக்காமல், மாறாத புன்முறுவலுடன் கேட்டவர்களின் விருப்பப்படி வாசித்துக் கொண்டிருந்தார் பிரசன்னா.

"சார்! நான் உங்ககிட்ட கத்துக்கணும். வரலாமா?"

சுமார் அறுபது வயது மதிக்கத்தக்க ஒருவர் பிரசன்னாவின் காதருகே வந்து கேட்க, "அடடா, நான் இங்கே இல்லையே? அமெரிக்காவில் இருக்கேன். ஒரு மாசம்தானே இங்கே இருப்பேன்?" என்றார் பிரசன்னா.

"பரவாயில்லை சார். சும்மா சங்கீதத்தைப் பற்றி பேசவாவது வரலாமா, உங்கள் வீட்டுக்கு?"

"அவசியம் வாருங்கள்" என்று அவருக்கு விஸிட்டிங் கார்டைக் கொடுத்தார் பிரசன்னா.

கிட்டத்தட்ட இரண்டு மணி நேரம் ஆகிவிட்டது. கச்சேரியும் லெக்சர் - டெமான்ஸ்ட்ரேஷனுமாக நிகழ்ச்சி முழு வெற்றி ஆகிவிட, நாம் பிரசன்னாவுக்கு நன்றி சொன்ன போது, "நானல்லவா உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும்?" என்றார்.

"எதற்கு?"

"இப்படியொரு புது அனுபவம் எனக்குக் கிடைக்கச் செய்ததற்கு."

"மேடைக் கச்சேரிகள் பல வாசித்திருக்கிறீர்கள். அவற்றுக்கும் இதற்கும் ஏதாவது வித்தியாசம் உணருகிறீர்களா?"

"என் வாசிப்பைப் பொறுத்தவரை எந்த வித்தியாசமும் இல்லை. ஆனால் சபா ஆடியன்ஸாக இல்லாமல் இப்படி சாதாரண பொதுமக்கள் முன்னிலையில் எதிர்பாராவிதமாக ஒரு திடீர்க் கச்சேரி செய்கிறோம் என்கிற த்ரில் மிக சுகமாக இருந்தது. இந்த சீசனில் கிட்டத்தட்ட எல்லா சபாக்களிலும் வாசிக்கிறேன்...."

"அப்போது முரளி மியூசிக்கல்ஸ்தான் முதல் சபாவா?"

பளிச்சென்று சிரிக்கிறார் பிரசன்னா. அவர் சிரிப்பும் அவர் இசையைப் போலவே படு துல்லியம்.

- **ஔரங்கசீப்,**

ஏற்பாடு : **சாருகேசி**

வண்ணப்படங்கள் : **ஸ்ரீஹரி**

# “யாருக்கும் இளைத்தவர்களல்ல நாங்கள்!”

“இசை-நிலைய வித்வான்கள்” என்ற அறிவிப்பை வானொலியில் கேட்டதுண்டு. இந்த நிகழ்ச்சிகளில் பாடியவர் அல்லது இசைத்தவருக்கு, தங்கள் பெயர் கூட அறிவிக்கப்படாததில் வருத்தம் இருக்காதா என்ன? தவிர, இவர்களை எப்படித் தேர்வு செய்கிறார்கள்? வெளிக்கச்சேரி செய்ய இவர்களுக்கு அனுமதி உண்டா? அல்லது வானொலிக்கு மட்டும்தான் பாடவோ இசைக்கவோ வேண்டுமா? என்றெல்லாம் தொடர் கேள்விகள். தீர்த்துக் கொள்வதற்காக சென்னை வானொலி நிலையத்தில் நிலைய வித்வான்களாகப் பணிபுரியும் சிலரை சந்தித்தோம்.

“நாற்பத்தைந்து நிமிடங்களுக்கு மேல் நிகழ்ச்சி என்றால் எங்கள் பெயரை அறிவிப்பார்கள். டெல்லி மற்றும் சென்னை வானொலி நிலையங்களில் “நேஷனல் ஆர்கெஸ்ட்ரா” நிகழ்ச்சிகள் உண்டு. சுமார் நாற்பது பேர் பங்கெடுத்துக் கொள்ளும் இந்த “வாத்ய வ்ருந்தா” போன்ற நிகழ்ச்சிகளில் எங்கள் பெயர்கள் அறிவிக்கப்படுவதில்லை- நீளமான பட்டியலாகி விடும் என்பதால்” என்றார் திருச்சூர் நரேந்திரன். 1992லிருந்து நிலையத்தில் பணிபுரியும் மிருதங்க வித்வான் பாலக்காடு ரகு, பரமேஸ்வரன் நம்பூதிரி, தொடுவாயூர் ராதாகிருஷ்ணன் ஆகியோரிடம் மிருதங்கம் பயின்றவர்.

நிலைய வித்வான்களை எப்படித் தேர்வு செய்கிறார்கள்?

“முதலில் வோக்கல் ஆடிஷன். உள்ளூர் வானொலி நிலையத்தில் குரலையோ (பாடகராய் இருந்தால்) அல்லது இசைக் கருவி வாசிப்பையோ பதிவு செய்கிறார்கள். இவற்றைத் தரத்திற்கு ஏற்றமாதிரி B, B High, A, Top Ranking என்று பிரிக்கிறார்கள் (ஆடிஷனில் தேறியவர்களைத்தான் இப்படி ரகம் பிரிப்பார்கள்) பிறகு இந்த ஒலிப்பதிவு நாடாக்கள் டெல்லியில் உள்ள மத்திய வானொலி நிலையத்திற்குச் செல்லும். அதை எந்த நிலையத்தில் பதிவுசெய்யப்பட்டதோ அது அல்லாத வேறொரு வானொலி நிலையத்திற்கு அனுப்பி, அங்கு நடுவர்களைக் கொண்டு, தரம் சரியாக பிரிக்கப்பட்டிருப்பதை உறுதி செய்து கொள்வார்கள். பிறகு நேரடித் தேர்வு. அதில் சங்கீதம் தொடர்பான கேள்விகள் கேட்கப்படும். தேர்வு பெற்ற ஐந்து வருடங்களுக்குப் பிறகு அடுத்த ‘கிரேடு’க்கு விண்ணப்பிக்கலாம்” என்றார் ஜெயந்தி மோகன். பாடகியாகவும், தம்பூரா கலைஞராகவும் பணிபுரிபவர். எம்.எல்.வியிடம் ஆறேழு



• நரேந்திரன்

• வாசன்

வருடங்களும், தஞ்சை கல்யாணராமனிடமும் இசை கற்றிருக்கிறார். டெல்லியிருந்து சென்னை வந்து உறவினர்கள் வீட்டில் தனியாகத் தங்கி இசைக் கல்லூரியில் பயின்றாராம்.

வயலின் கலைஞரான மீரா சிவராமகிருஷ்ணன் 1989லிருந்தே வானொலி நிலையத்தில் இசைக்கிறார். அம்மா ராதா நாராயணனிடம் தான் வயலின் பயிற்சி பெற்றாராம். தேர்வு பற்றி வேறு சில விவரங்களைக் கூறினார் இவர். நிலைய வித்வான் பதவிக்கு விண்ணப்பிக்க குறைந்தபட்ச வயது 18. ஆனால் வயதில் உச்ச வரம்பெல்லாம் கிடையாது. ஆடிஷன் தேர்வுக்காக அமைந்த நடுவர் குழுவில் ஒருவர் நிலைய அதிகாரி. மற்றவர்கள் இசைக் கலைஞர்கள்.

தேர்வுக்கு வரும் பாடகர் தமக்குத் தெரிந்த இருபத்தைந்து பாடல்களைப் பட்டியலாகக் கொடுத்துவிட வேண்டும். அவற்றிலிருந்து எதையாவது ஒன்றை நடுவர்கள் தேர்ந்தெடுத்துப் பாடச் சொல்லுவார்கள். தாள வாத்தியக் கலைஞர் என்றால் ஏதாவதொரு தாளத்தைக் குறிப்பிட்டு வாசிக்கச் சொல்லி ஒலிப்பதிவு செய்வார்களாம்.


• மீரா

• ஜெயந்தி

நிலைய வித்வான்கள் தனிப்பட்ட முறையில் வெளிக்கச்சேரிகளில் பங்கு கொள்ளலாமா?

"இதை அனுமதிக்கிறார்கள்" என்றார் கடம் வித்வானான டி.வி. வாசன். சீனியர் நிலைய வித்வான் இவர். "ஆனால் ஒன்று. வெளியில் கலந்து கொள்ளும் ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் விண்ணப்பித்து, நிலைய அதிகாரியின் எழுத்து மூல அனுமதி பெற வேண்டும்."

பொதுவாக இதில் எந்தச் சிக்கலும் இருப்பதில்லையாம். வருடத்துக்கு இதுபோல் 24 முறை அதிகபட்சமாக அனுமதிக்கப்படுகிறது.

தனியார் கச்சேரிக்காக வெளிநாடு போவதானால் தலைமை நிலையத்திலிருந்து "நோ அப்ஜெக்ஷன்" சான்றிதழ் பெற வேண்டுமாம். இதைப் பெற சில சமயம் இரண்டு மூன்று மாதங்கள் கூட ஆவதால் சில கலைஞர்கள் இதுபோன்ற கச்சேரி வாய்ப்பை இழக்க நேர்ந்திருக்கிறது. மத்திய அரசின் விதிகளை உணர முடிகிறது என்றாலும் இது போன்ற சந்தர்ப்பங்களில் இன்னும் கொஞ்சம் விரைவாகச் செயல்படலாமே என்று சில கலைஞர்கள் ஆதங்கப்பட்டனர்.

"க்ரேடுகளில் மிக உச்சமான "டாப் ராங்கிங்" என்பது நிலைய வித்வான்களுக்கு இது வரை அளிக்கப்படவில்லை. தகுதி உள்ளவர்களுக்கு இதை அளித்திடும் திட்டம் இப்போது தீவிர பரிசீலனையில் இருப்பது மகிழ்ச்சியாக இருக்கிறது" என்றார் பதினாறு வருடங்களாக நிலைய மிருதங்க வித்வானாக இருக்கும் மன்னார்குடி ஈஸ்வரன்.

இசைவிழா சீசனின்போது வானொலிக்காக மற்ற இசை நிகழ்ச்சிகளை ரெகார்ட் செய்யும் பொறுப்பும் நிலைய வித்வான்களுக்கு அளிக்கப்படுவதுண்டு. 'சங்கீத சம்மேளன்' போன்ற சிறப்பு நிகழ்ச்சிகளில் இடம் பெறும் மற்றக் கலைஞர்கள் ஊதியம் பெறும் போது, நிலைய வித்வான்களுக்கும் ஓரளவு ஊதியமாவது கொடுத்தால் அது ஊக்கமளிப்பதாக இருக்கும் என்றார் ஒரு கலைஞர். தொலைக்காட்சி இசை நிகழ்ச்சிகளுக்கு இவர்களை வாசிக்கக் கூப்பிட்டால், வழக்கமாக வெளி இசை கலைஞருக்குத் தரும் ஊதியத்தில் பாதித் தொகை இவர்களுக்கு அளிக்கப்பட்டு வந்ததாம். இப்போது இது நிறுத்தப்பட்டு விட்டது- தகவல் ஒலிபரப்புத் துறையின் இரு அங்கங்கள்தானே வானொலியும் தொலைக்காட்சியும் என்ற அடிப்படையைக் கொண்டு.

"நிலைய வித்வான் என்றால் ஏதோ இரண்டாம்தரம் போலவும், அவர்களிடம் படைப்புத்திறன் ரொம்பக் குறைவு என்றும் சிலர் கருதுகிறார்கள்... மிகக் குறைந்த நேரத்தில், முன்பின் வாசித்துப் பழகாத கலைஞர்களுக்குக்கூட ஈடுகொடுத்து எங்களால் ஒரு நிகழ்ச்சியை சிறப்பாகச் செய்ய முடிகிறது. ஐந்து வயது சிறுமி முதல் தேர்ந்த பாடகர் வரை அத்தனைப் பேருக்கும் தகுந்த' மாதிரி சரளமாக ஈடுகொடுப்பது பெரிய கலை அல்லவா?" என்றார்கள் ஒருமித்த குரலில்.

**- சுப்பிரமணியன்**

படங்கள்: **யோகா**

# 21-ம் நூற்றாண்டு இசை :

விடிய விடியக் கச்சேரி, பிறகு நாலு மணி நேரம், மூன்று மணி நேரம் என்று சுருங்கி, இப்போது ஒன்றரை, இரண்டு மணி நேரத்தில் வித்தை காட்ட வேண்டிய கட்டாயத்துக்கு வித்வான்கள் வந்து விட்டார்கள். டிஜிட்டலில் சிரிக்கிற குரலை ரசித்தால் போதும் என்று ஒரு பெரும்கோஷ்டி, இசையை நாலு அங்குல கேஸட்டிலும் உள்ளங்கை அகல டிஸ்கிலும் காசு கொடுத்து வாங்கிக் கொள்ள, விஸ்தாரமான மேடைக் கச்சேரிகளுக்கு அடுத்த நூற்றாண்டில் வரவேற்பு எப்படி இருக்கும்? சில இளம் கலைஞர்களைக் கேட்க நினைத்தோம்.



• ஹேமலதா

"பெரிதாக என்ன ஆகிவிடப் போகிறது? கம்ப்யூட்டர், மெயின் ஆர்ட்டிஸ்ட் ஆகிவிடும். அதற்குத் தகுந்தவாறு பக்கவாத்தியம் வாசிக்க வேண்டி வரும். எல்லாரும் ஆளுக்கொரு ஹெட்-போன் வைத்துக் கொண்டு கேட்பார்கள். நாய்ஸ் பொல்யூஷன் இருக்காது!" என்று கிண்டலாக ஆரம்பித்தார் கடம் வாசிக்கிற எஸ். கார்த்திக்.

"இளம் வித்வான்கள் தங்களை வயதானவர்களாகக் காட்டிக் கொள்ள, (அப்போது தானே மதிக்கிறார்கள்!) அமெரிக்கா போய் இந்தியன் தாத்தா மாதிரி மேக்-அப் போட்டுக் கொண்டு வந்து பாடலாம். இன்னொவேஷன் என்கிற பெயரில் இதுமாதிரி இன்னும் பல புதுமைகள் வரலாம். ஆனால் அதற்காக ஆதி தாளத்தில் இன்னொரு அட்சரம் சேர்க்கிறேன் பேர்வழி என்று கிளம்பி விட்டால்தான் ஆபத்து!"

• ஜே.வைத்திய நாதன்

கார்த்திக் இப்படித் தமாஷாகச் சொன்னாலும் பிற இளைஞர்களுக்குக் கழுத்து முட்டும் கவலை இருக்கிறது.

"பக்கவாத்தியக்காரர்களின் தனித்தன்மை குறைந்து கொண்டே வருகிறது. கச்சேரிகளை நடத்துபவர்கள், அதன் தரம் பற்றிக் கவலைப்படுவதேயில்லை. செலவு குறைச்சலாக ஆகிறதா என்பதிலேயே அவர்களின் கவனம் இருக்கிறது. பக்கவாத்தியக் கலைஞர்கள் இனி ஒரு குறிப்பிட்ட தொகைக்குக் கீழே கொடுத்தால் வாங்குவதில்லை என்று வைத்துக் கொள்ள வேண்டும்" என்று சீரியஸாகச் சொன்னார் மிருதங்கம் பாம்பே பாலாஜி.



• எஸ். காயத்ரி

"இந்த ரேட் விஷயம் அடுத்த நூற்றாண்டில் நிஜமாகவே ஒரு பெரிய பிரச்னைதான்!" என்று ஆமோதித்தார் பாடகி எஸ். காயத்ரி.

"பாடகர்கள், பக்கவாத்தியக் கலைஞர்களை விடுங்கள். தம்புரா வாசிக்கிறவர்களை சபாக்காரர்கள் நடத்துகிற விதம் படு மோசம்! இரண்டு மணி நேரம்,

மூன்று மணி நேரம் பொறுமையாகத் தம்புரா போடுகிறவர்களுக்கு வெறும் ஐம்பதும் எழுபத்தைந்தும் தருகிற அவல நிலை இன்று இருக்கிறது. சில பேர் அதைக் கூடக் கொடுக்க மாட்டார்கள். பாடகர்கள் தம் பர்ஸிலிருந்தே தர வேண்டிய நிலைமை. கலைஞர்களை கௌரவமாக நடத்த வேண்டியது கடமை



• டி.எம்.கிருஷ்ணா



• பாம்பே பாலாஜி

# எதிர்பார்ப்புகளும் சவால்களும்

அல்லவா?" என்றார் காயத்ரி.

"இதே மாதிரி நிலைமை நீடித்தால் முழு நேர இசைக் கலைஞராக இருப்பது அடுத்த நூற்றாண்டில் சாத்தியமா என்று சந்தேகமாக இருக்கிறது" என்றார் மிருதங்க வித்வான் ஜே. வைத்தியநாதன்.

"இன்றைக்கு நாங்களெல்லாம் இசையையே தொழிலாக, வாழ்க்கையாக வைத்துக் கொண்டிருக்கிறோமென்றால், அது எங்கள் பெற்றோர் தந்த வரம். வசிக்க ஒரு சொந்த வீடு, சாப்பாட்டுப் பிரச்னை இல்லாத குடும்பச் சூழலை அவர்கள் ஏற்படுத்தித் தந்திருப்பதால் இங்கே எதிர்நீச்சல் போட்டுக் கொண்டிருக்க முடிகிறது. இனிவரும் கலைஞர்களுக்கு இது எப்படி சாத்தியமாகும் என்று சந்தேகமாக இருக்கிறது. இதனால் என்ன ஆகுமென்றால், இசையைப் பகுதி நேரத் தொழிலாகக் கொள்கிறவர்களிடம் அத்தனை 'கிளாஸ்' எதிர்பார்க்க முடியாது. இன்றைக்கு நிறையப் பேர் கச்சேரிகளுக்கு வருகிறார்கள். அவர்களைத் தக்கவைத்துக் கொள்ள, தரமான இசையை வழங்கினால் தானே முடியும்?" என்று கேட்டார் வைத்திய நாதன்.

பாடகர் டி.எம். கிருஷ்ணா காட்டமாக ஒரு கேள்வி கேட்டார் : "விளையாட்டுத் துறையினருக்கு எத்தனையோ வசதிகள் செய்து தரும் அரசாங்கம், இசைத் துறையினரை ஏன் கவனிக்க மாட்டேனென்கிறது?"

"நாலு டெஸ்டில் மோசமாக ஆடினாலும் டெண்டுல்கரும் கங்கூலியும் இன்ன பிறரும் வளமாகவே வாழ முடியும். நாலு கச்சேரி சோபிக்கவில்லையென்றால் ஒரு கலைஞரின் வாழ்க்கை பிறகு என்னாகும் என்று யோசித்துப் பாருங்கள்!" என்றார்.

விளையாட்டு வீரர்களை, பெரிய நிறுவனங்கள் 'தத்து' எடுத்துக் கொண்டு, அவர்களின் முயற்சிகளுக்கு ஊக்கமும் உதவியும் அளிப்பது போல, நல்ல சங்கீத வித்வான்களையும் ஸ்பான்ஸர் செய்ய முன்வர வேண்டும் என்றார் டி.எம். கிருஷ்ணா.



• கார்த்திக்

ஆனால், இத்தகைய பிரச்னைகளையெல்லாம் மீறியும் அடுத்த நூற்றாண்டில் இசையுலகம் அமோகமாகவே இருக்கும் என்று நம்பிக்கையுடன் சொல்கிறார் பி. ஹேமலதா. (வயலின்)

"எப்படிச் சொல்கிறேன் என்றால், நம்ப முடியாத அளவுக்கு இளைஞர்கள் இப்போது



"என்னாது இது... கச்சேரி மேடை மேல இத்தனை நாற்காலி...?"

"ஸ்பான்ஸர்களெல்லாம் மேடையிலே சீட் போட்டாத்தான் பணம் குடுப்போம்னு சொல் லிட்டாங்களாம்."

– பூ




"ஆர்ட்டிஸ்டையெல்லாம் மரியாதையா நடத்தறதில்லேன்னு குறை பட்டுக்கிட்டீங் களே..."

–சில்பிஷா



"உங்க பாட்டைக் கேட்ட உடனேதான் எனக்கு ஊக்கம் கிடைச்சது."

"நீங்களும் நல்லா பாடணும்னா?"

"நானாவது நல்லா பாடணும்னு!"

– மலர்

கர்நாடிக் மியூசிக்கை விரும்பிக் கேட்க ஆரம் பித்திருக்கிறார்கள். இதுவே பெரிய 'எங் கரேஜிங் ஸைன்'. 'Build a Rasika' என்று ஒய். ஏ. சி. எம்மில் ஒரு ப்ராஜெக்ட் ஆரம்பித்திருக் கிறார்கள். இதற்கு நல்ல பலன் கிடைக்க ஆரம்பித்திருக்கிறது!"

Youth Association for Classical Music என்கிற இந்த அமைப்பின் தலைவரான டி.எம். கிருஷ்ணா, "பள்ளிகள்தோறும் சென்று, கர் நாடக இசையை பயமுறுத்தாமல் அறிமுகப் படுத்தும் பணியை எங்கள் அமைப்பு செய்து வருகிறது" என்றார்.

"பொதுவாகவே கர்நாடக இசை என்பது கிழவர்களுக்கானது என்கிற எண்ணம் எப் படியோ இளைஞர்கள் மத்தியில் ஆழமாகப் பதிந்து விட்டது. இதை மாற்றியாக வேண்டிய சவால்தான் அடுத்த நூற்றாண்டு எதிர்நோக்கி இருக்கும் மிகப் பெரிய பிரச்னை" என்றார் கிருஷ்ணா.

"இப்போதே பல இளைஞர்கள் மேற்கத்திய இசை மோகம் தணிந்து வரத் தொடங்கி விட்டார்கள்தாம். ஆனால் இது போதாது. இன்னும் போக வேண்டிய தூரம் மிக அதிகம்!" என்றார் எஸ். காயத்ரி.

குளிரூட்டப்பட்ட சபா ஹால்களில் பட்டுப் புடைவைகளுக்கும் சரிகை வேட்டிகளுக்கும் மட்டும் பாடிக் கொண்டிருந்தால் கர்நாடக சங்கீதம் எப்படிப் பரவலாகும்? மைக்கேல் ஜாக் ஸனுக்குக் கூடுகிற கூட்டத்தை கர்நாடக இசைக் கும் கூட்ட இவர்கள் என்ன நடவடிக்கை எடுக்கிறார்கள்?

"ஐயோ, மைக்கேல் ஜாக்ஸனுடன் இதை ஒப்பிடாதீர்கள். கர்நாடக இசை 'மாஸ்'க்கு வந்தால் நிற்காது. நீர்த்துப் போய் விடும். ஐயாயிரம் பேர், ஐம்பதாயிரம் பேர் வேண் டாம். எங்கள் இலக்கு, நூறு, இருநூறு என்றி ருக்கிற இளம் ரசிகர்களின் எண்ணிக்கையை ஐநூறாக்குவதுதான்!" என்றார் டி.எம். கிருஷ்ணா.

ஏன்? மாஸுக்கு வருவதில் என்ன தவறு? சந்தானம் பாடினால் ஆயிரக்கணக்கில் ஜனம் குவியவில்லையா? மதுரை மணியும் மாலியும் கட்டிப் போட்ட மக்கள் வெள்ளம் எத்தனை?

"ஒரு சிலரை மட்டும் உதாரணமாகக் காட்டுவது சரியாக இருக்காது" என்று சொன் னார்கள் வைத்தியநாதனும் காயத்ரியும் கிருஷ் ணாவும்.

"ஜனங்களை ஈர்ப்பது ஒன்றே நோக்கம் என்று ஆகிவிட்டால் இசையின் தரத்தில் சமர சம் செய்து கொள்ள வேண்டி வரும். அது தர்ம மாகாது. தரமான இசை; குறிப்பிடத்தகுந்த அளவு ஆடியன்ஸ். இது இருந்தாலே கர்நாடக இசை இன்னும் பல நூற்றாண்டுகளுக்குப் பிழைக்கும்!"

**- விஸ்வநாதன்**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **ஸ்ரீஹரி**



• (இடமிருந்து வலமாக) பச்சியப்பன், தாமரை, முல்லை சுப்பையா, சிவசுப்ரமண்யம், ந.வே. அருள், தமிழன்பன்.





• கிருஷ்ணா (பாஸ்கர்)



• முருகேசன்



• மதுமிதா (சந்தானகிருஷ்ணா

## கல்கி – அனுபவ் கவிதைப் போட்டி பரிசளிப்பு விழா!

# துளிர்விட்டது புதிய நம்பிக்கை!

அந்தக் கொடுமை நடந்து இரு தினங்கள்தான் ஆகியிருந்தன. அனுபவ் பிளான்டேஷனுக்குச் சொந்தமான மரங்களை வெட்டிச் சாய்த்திருந்தார்கள் சில விஷமிகள். அதிபர் நடேசன் அதுவிஷயமாக முதல்வரைச் சந்தித்துப் பேசப் போகவேண்டிய கட்டாயம். அந்த பதற்றமான சூழ்நிலையிலும் அமைதியாகவும் எளிமையாகவும் அழகாகவும் கல்கி – அனுபவ் கவிதைப் போட்டி பரிசளிப்பு நிகழ்ச்சியை நடத்திக் காட்டினார்கள் அனுபவ் நிறுவனத்தினர்.

அனுபவ் ஹோம்ஸ் நிர்வாக இயக்குனர் முல்லை சுப்பையா வரவேற்புரை வழங்க, சிவசுப்ரமண்யம் (அனுபவ் பிளான்டேஷன்ஸ். நிர்வாக இயக்குனா) சிறப்புரையாற்ற, கவிதைப் போட்டி நடுவராய் இருந்து உதவிய தமிழன்பன் தலைமையுரை வழங்கினார் :

"மரமென்றால் ஜன்னல், மரமென்றால் கதவு, மரமென்றால் மேஜை, மரமென்றால் நாற்காலி, மரமென்றால் அலமாரி... இப்படித்தான் நாம் பார்க்கறோம். மிஞ்சி மிஞ்சிப் போனால், 'மரம் மாதிரி நிற்கிறாயே!' என்று அதை ஜடப்பொருளாக்கி இயங்காமைக்கு உதாரணம் காட்டுகிறோம்... ஆனால் கவிஞர்கள் மரத்தை எப்படிப் பார்த்தார்கள்? வானத்தில் வண்ணம் தீட்ட உயர்ந்து நிற்கும் தூரிகையாக மரங்களைப் பார்த்தார் கீட்ஸ்..." என ஆரம்பித்தார் தமிழன்பன். தமக்கேயுரிய பாணியில் ஏராளமான கவிதை மேற்கோள்களைக் காட்டி மரங்களின் சிறப்பை உணர்த்தியவர், மரங்கள் வளர்ப்பதையே ஒரு பயனுள்ள தொழிலாகவும் நடத்திவரும் அனுபவ் நிறுவனத்தையும் பாராட்டினார்.

"கவிதைப் போட்டிக்கு நடுவராக இருக்க என்னை அழைத்தபோது பரிசுத் தொகை பத்தாயிரம் என நினைக்கவில்லை; அது தெரிந்திருந்தால் நடுவராக இல்லாமல் போட்டியாளராகவே பங்கேற்றிருப்பேனே...!" என்று விளையாட்டாக தமிழன்பன் சொன்னபோதிலும் அவ்வளவு பெரிய தொகையை முதல் பரிசாகக் கொடுக்க முன்வந்த அனுபவ் நிறுவனத்துக்குப் பாராட்டாகவே அது அமைந்தது.

"முன்பொரு முறை கல்கி சிறுகதைப் போட்டிக்கு நடுவராக இருந்தேன். அந்தப் போட்டியிலும் முதல் பரிசு பெற்ற கதை சுற்றுச் சூழல் பாதுகாப்பையே மையக் கருவாகக் கொண்டிருந்தது. 'கல்கி'க்கு எழுத வேண்டும் என்னும்போதே எழுதுபவரின் சமுதாயப் பிரக்ஞை விழிப்படைந்து விடுகிறது. அதுவும் இந்தக் கவிதைப் போட்டியில் பரிசுக்குரிய கவிதைகளை வரிசைப்படுத்துவது மிகப் பெரிய சவாலாக இருந்தது – கவிதைகளிடையே எத்தனை நெருக்கமான போட்டி!" என்று சொன்ன தமிழன்பன், பரிசுபெற்ற கவிதைகளின் சில வரிகளை மேற்கோள்காட்டி அவற்றின் சிறப்புக்களை வெளிப்படுத்தினார்.

பரிசு பெற்றவர்கள் சார்பில், நெகிழ்ந்து போய் கண்ணீர் மல்க நன்றி சொன்னார் பச்சியப்பன். கோவையிலிருந்து வந்திருந்த தாமரை, தஞ்சை சந்தானகிருஷ்ணன், திருச்சி பாஸ்கர், உதகை முருகேசன், சென்னை வாசிகளான அருள், பச்சியப்பன் என பரிசு பெற்ற அனைவருமே இளைஞர்கள் என்பதால் சுற்றுச் சூழல் பாதுகாப்பு குறித்த புதிய நம்பிக்கை உதயமானது அந்த விழாவில்!

— நமது நிருபர்

# "அவ்வை சண்முகியில் நான் ஆபாசத்தைக் காணவில்லை!"

## —கல்கி விமர்சனத்தைச் சாடுகிறார் சென்ஸார் போர்டு உறுப்பினர்!

மதிப்பிற்குரிய திரு. ஆர்.பி.ஆர். அவர்களுக்கு,

வணக்கங்கள் பல. 'அவ்வை சண்முகி' படத்தைப் பற்றிய தங்கள் விமர்சனத்தைப் படித்தேன். திகைப்பும் வியப்பும் மேலிட்டதன் விளைவு இக்கடிதம். தீபாவளியில் ரிலீசான அனைத்துப் படங்களிலும் சிறந்த ஜனரஞ்சகமானதும், வசூலில் முதலிடத்தைப் பெற்றதுமான இப்படத்தை, பல இதர சகோதர பத்திரிகைகளும் 'ஓகோ' என்று பாராட்டியுள்ள நேரத்தில் தாங்கள் மட்டுமே கண்டனக் குரல் எழுப்பி, தனித்து நிற்கிறீர்கள்.

தணிக்கைக் குழு அங்கத்தினர் என்பதாலும், இப்படத்தை தணிக்கை செய்த குழுவில் நான் இடம்பெற்றதாலும்தான் இந்த உறுத்தலும் உந்துதலும். ஒரு வினாடி கூட அலுப்பில்லாமல், வாய் விட்டு சிரித்து மகிழ்ந்தோம். நாங்கள் அனைவரும் வெகுவாக ரசித்த இப்படத்தில் ஆபாசமோ, இரட்டை அர்த்த வசனமோ, வேறு எந்தவித தவறையும் ஸ்கிரிப்டை கவனமாகப் பார்த்த நான் காணவில்லை. கமல் ஒரு சிறந்த, அற்புத, தன்னிகரில்லா அதிசயக் கலைஞர். மிகை நடிப்பிற்கு இடமில்லாமல் நடுத்தர வயதுப் பெண்மணிக்குரிய அளவான புன்னகை, அடக்கம், அமைதியாக பாத்திரம் உணர்ந்து நடித்திருக்கும் நேர்த்தியை நாங்கள் ஒவ்வொருவரும் ரசித்தோம். make up par excellence. தணிக்கை குழுவினர் மட்டுமல்லாமல் படம் பார்த்தவர்களின் ஏகோபித்த அபிப்ராயம்.

ஒரு குறிப்பிட்ட சமூகத்தவரை இழிவுபடுத்தும்விதமாகக் காட்சிகள் அமைந்து வருவது இன்றைய படங்களில் வழக்கமாக இருந்து வருகின்றது என்பதை தாங்களும் மறுக்கவில்லை. இதில் எங்களில் பலருக்கு உடன்பாடில்லை என்பதையும் கூறிக்கொண்டு, இதற்கு ஆவன செய்வோம் என்றும் உறுதியளிக்கிறோம். ஆனால் தீவிர வைதிகர்கள் வீட்டில் குடிப்பது நாகரீகமாகக் கருதப்படுகின்றதைக் கண்கூடாக நான் பார்த்திருக்கிறேன். ஆசாரமும், ஒழுக்கமும் எவ்வளவு வீடுகளில் கைகோத்து செல்லுகின்றன?

ஜெமினி கணேசனை பெண் பித்தராக ஏற்பதற்கில்லை. வயதான காலத்தில் தேவைப்படுகின்ற ஒரு ஜென்டில்மேனை எவ்வளவு குடும்பங்களில் நாம் பார்த்திருக்கிறோம். ஏன் கமலே அக்கறையுடன் "உங்களுக்கே இந்த வயதில் ஒரு துணை வேண்டியிருக்கையில் சின்னஞ்சிறிசான உங்கள் மகள் வாழ்க்கை வீணாவது சரியா" என்று க்ஷண சபலத்தை இடித்துரைக்கிறாரே?

வீட்டில் பணிபுரிபவர்கள் ஒழுக்க சீலர்களாக இருக்கிறார்களா? சமூக சேவகி களான எங்கள் பார்வைக்கு வருகின்ற கேஸ்கள் பல immoral behaviour கேஸ்தான். நடைமுறை வாழ்க்கையில் இப்படி என்றால் சினிமாவில் சற்று exaggerated ஆக சித்திரிக்கப்படுவது மாபெரும் தவறா? harmless humourக்காகப் பாடுபட்டு விலா நோக சிரிக்க வைத்த படம் ஒரு சில குறைகளுடன் அமைந்தால் இதை நீங்கள் கிழித்திருப்பது தர்மமாக எனக்குப் படவில்லை. நாகரீகமாகத் தோன்றவில்லை.

கணவன் மனைவி ஒற்றுமை, குழந்தைக்கு தாய் தந்தை கூட்டுறவின் அவசியம், குடும்பப் பாசத்தின் முக்கியத்துவம் அழகான படிப்பினைகளாகத் தரப்பட்டிருக்கின்றன. பாத்ரூம் காட்சி, கணவன் மனைவியின் கடந்த கால நெருக்கத்தை நினைத்து ஏங்கவும், புனிதமான தாலியை அவள் கழட்டி வைத்திருப்பதை அவனுக்கு உணர்த்தும் சந்தர்ப்பமாகவும் அல்லவா அமைகின்றது?

நல்ல நீதியுடன் திகழும் ஒரு ஸ்வாரஸ்யமான, தரமான நகைச்சுவைப் படத்தை சாடியதோடு மட்டுமில்லாமல் பொறுப்போடு செயல்படும் தணிக்கைக் குழு அங்கத்தினர்களின் ஆய்வுத் திறமையையும் மட்டமாக எடைபோட்டு மனம் புண்பட வைத்திருக்கிறீர்கள். நாங்கள் எங்கள் கடமையைச் செவ்வனே செய்து வருகிறோம். இது நிச்சயம். வணிகத் தேவைக்காக வரலாறு படைத்த மகத்தான கலைஞர் கமல், ஒருநாளும் தரம் தாழ்ந்து மலினமாகார். No compromise and No Concessions for this great artiste. இது சத்தியம்.

சென்னை – 17, சுசீலா பத்மனாபன்.



நம்புகிறேன்.

கணவன் - மனைவியின் கடந்த கால நெருக்கம், தாலியின் புனிதத்துவம் இவற்றை விளக்க அந்த பாத்ரூம் காட்சியை அமைத்ததில் என்ன தவறு என்று நீங்கள் கேட்கிறீர்கள்.

தன் மனைவி தாலியைக் கழற்றி வைத்திருக்கிறாள் என்பதை வீட்டு ஹாலிலோ, சமையலறையிலோ, பிற இடங்களிலோ - ஏன், அவளோடு ஒரு சமயம் பிக்னிக் போகிறானே அங்கேயோ கூடத் தெரிந்து கொள்ள முடியாத கணவன், அவள் பாத்ரூமில் குளிக்கிற போது நுழைந்து தான் தெரிந்து கொள்ள வேண்டும்; அதுவும் அவள் உள்ளாடை அணிய உதவி செய்தவாறு என்று சென்ஸார் போர்டே நினைக்கும் போது நான் என்ன சொல்ல?

எத்தனையோ பிட்டுகளைப் பிடித்து, அவற்றின் மோசமான தரத்துக்காக நார்நாராக் கிழிக்கும்போதெல்லாம் அமைதி காக்கும் சென்சார் போர்டு, கமல் படத்துக்கும் அப்படியொரு கதி என்று வந்ததும் பொங்கிக் குமுறியிருப்பதன் காரணம் என்ன என்பதைச் சற்று நீங்களே யோசித்தால், நமது விமர்சனத்தின் நோக்கமும் புரிந்து விடும்.

நல்ல கலைஞர்களுக்கு நம் சமூகம் அளித்திருக்கிற கௌரவமும் அங்கீகாரமும் நாட்டில் வேறு எந்த மாநிலத்திலும் காணக்கிடைக்காதது. ரஜினியின் ஒரு சொல்லால் உந்தப்பட்டு, உத்வேகம் கொண்டு, இந்த மாநிலத்தின் தலையெழுத்தையே நம் மக்கள் திருத்தி எழுதியது பழைய சரித்திரமல்ல; நேற்று நடந்ததுதான்.

இப்படி, கலைஞர்கள் மேல் வெறித்தனமான அன்பும் ஈடுபாடும் சொன்னசொல் தட்டாத குணமும் கொண்ட ரசிகர்களாகத் தமிழக மக்கள் இருக்கும்போது, கலைஞர்களின் பொறுப்பும் கடமையும் அதிகரித்து விடுகிறது என்பதை நீங்கள் மறுக்க மாட்டீர்கள் என்று

ஸ்கிரிப்டை கவனமாகப் படித்த நீங்கள், படத்தில் ஆபாசமே இல்லை என்று நற்சான்றிதழ் வழங்குகிறீர்கள். புல்லரிக்கிறது! ஒருவேளை கண்ணியமான சூழலில் பிறந்து வளர்ந்ததால் உங்களுக்கு இரட்டை அர்த்த வசனங்கள் புரியாமல் இருக்கலாம். ஆனால் அவை ஏன் எழுதப்பட்டன, எதற்காக திணிக்கப்பட்டுள்ளன என்பது என்னைப் போன்ற திரைப்பட விமர்சனம் எழுதுவதையே தொழிலாகக் கொண்டவர்களுக்கு நன்றாகவே தெரியும். வசனமிருக்கட்டும், காட்சிகளுக்கு வருவோம்.

ஃபாஸ்ட் ஃபார்வர்டில் காட்டப்படுகிற, சுமார் மூன்று நிமிடங்கள் ஓடுகிற ஒரு பாடலில் மட்டும் பெண் வேடமிட்ட கமல் எத்தனை முறை முந்தானையைச் விலக்கி, விலக்கி, சரிசெய்கிறார் என்று எண்ணிப் பார்த்தீர்களா? பெண் வேடமிட்ட ஆண்தானே என்பதை 'லைசன்ஸாக்கி' திணிக்கப்பட்டுள்ள இது

# "ஆபாசமே இல்லையா! உங்கள் சான்றிதழ் புல்லரிக்கச் செய்கிறது!"

## - பதிலளிக்கிறார் கல்கி விமர்சகர் ஆர்.பி.ஆர்.

• கமல் எழுதிய கடிதம்

Kamal Haasan

31st Jan. 1994.

Dear Mr. Rajendran,

I usually don't show my emotional reactions towards film reviews, be it in praise or not. I make this an exception since "Mahanadhi" was not made by clever thoughts but by honest emotions. I thank your reviewer for using his heart to review the film and not merely or strictly his mind. Thank you for the encouragement.

Regards

KAMAL HAASAN

218, T.T.K. Road, Alwarpet, Madras-600 018. Phone: 451199, 459145. Fax No.: 459939.

போன்ற பல காட்சிகளும், அந்த லைசன்ஸைப் பயன்படுத்தி செய்யப்படும் விவரிக்கக் கூசுகிற அகௌரவமான சில்மிஷங்களும்தான் நகைச்சுவை என்றால், இதையெல்லாம் பார்த்து விட்டுத்தான் நீங்கள் ஒரு வினாடி கூட அலுப்பில்லாமல் வாய்விட்டுச் சிரித்து மகிழ்ந்தீர்கள் என்றால் – தமிழ் நாட்டைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்!

தரமான நகைச்சுவை என்றால் என்ன என்பதையே மறக்க அடித்திருக்கிறது சினிமா உலகம்.

அவ்வை சண்முகி ஜனரஞ்சகமானது, வசூலில் பெருவெற்றி பெறும் என்பதை நானே ஒப்புக் கொண்டுதான் விமர்சனத்தை முடித்திருக்கிறேன். ஆனால் இதர சகோதரப் பத்திரிகைகள் ஓகோ என்று பாராட்டியுள்ளன என்ற உங்கள் கூற்றை ஏற்க இயலாது. குமுதம், தினமணிகதிர் போன்ற பத்திரிகைகளும் கல்கி போலவே படத்தில் காணப்படும் ஆபாசத்தைச் சாடித்தான் இருக்கின்றன.

'வைதிகமான குடும்பங்களில் குடிப்பது, ஆசார, ஒழுக்கக் குறைவாக நடப்பது எல்லாம் கண்கூடாகப் பார்க்கிற விஷயம்தானே' என்று கமலுக்கு ஃபீஸ் வாங்காத வக்கீலாக நின்று கேட்டிருக்கிறீர்கள்.

இந்த நூற்றாண்டின் மிகச் சக்தி வாய்ந்த ஒரு மீடியாவில் தீயவைகளைத் தேடிப்பிடித்து குளோஸப்பில் காட்டுவது எத்தனை மோசமான பின்விளைவுகளை ஏற்படுத்தும் என்பதைச் சற்று யோசித்துப் பாருங்கள்.

"வீட்டில் பணிபுரிபவர்கள் ஒழுக்கசீலர்களாக இருக்கிறார்களா? அதைச் சற்று மிகைப்படுத்திக் காட்டுவது, மாபெரும் தவறா?' என்று கேட்கிறீர்கள். ஒழுக்க மீறல் என்பது எல்லா இடங்களிலும் இருப்பதுதான். ஆனால் சிறுபான்மையான விஷயங்களை பூதாகாரமாக்குவதை எப்படிச் சரி என்கிறீர்கள்?

இது நல்ல நீதிப்படம் என்று வேறு நீங்கள் சொல்லியிருப்பதுதான் உச்சகட்ட சோகம்.

கமலையோ, 'அவ்வை சண்முகி'யையோ கண்மூடித்தனமாகத் தாக்குவது நம் நோக்கமல்ல. இதே கமலின் மகாநதி, குருதிப்புனல் போன்ற படங்களுக்குக் கல்கியில் வெளியான விமர்சனங்களை நீங்கள் படித்திருப்பீர்கள். கமலஹாஸனே மனமுருகிக் கடிதம் எழுதுகிற அளவுக்கு அவரை பாதித்திருக்கிறது, மகாநதி விமர்சனம். (பார்க்க : கடிதம்.)

நீங்கள் குறிப்பிட்டிருப்பது போல, 'தனித்து நிற்பதற்காக' எழுதப்பட்டதல்ல எமது 'அவ்வை சண்முகி' விமர்சனம். ஒரு நல்ல கலைஞனின் சரிவை சகிக்க முடியாததன் வருத்தம் கலந்த வெளிப்பாடு அது.

**சென்னை – 97,** **ஆர்.பி.ஆர்.**

தமிழ்ல எழுதலேன்னா தெரியும் சேதி.....

அரசு அதிகாரி



1996 டிசம்பர் 15
தாது கார்த்திகை 30
மலர் : 55
இதழ் : 20

**கல்கி**

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# தமிழ்க்குடிமகனின் கோபம்!

'**எ**ங்கும் தமிழ், எதிலும் தமிழ்' என்ற முதல்வரின் பட்ஜெட் உரை கோஷத்தை நடைமுறைப்படுத்துவதில் மும்முரமாக இறங்கியிருக்கிறது தமிழ் வளர்ச்சித் துறை.

தமிழ் வளர்க்கும் சீரிய நோக்கை நாமும் வரவேற்கவே செய்கிறோம். தமிழ்நாட்டில் பிறந்து வளரும் ஒரு தமிழன், தமிழே தெரியாமல் பி.எச்.டி. வரை படித்துப் பட்டம் பெற்று விடக்கூடிய ஒரு சூழ்நிலை நிலவுவது ஆரோக்கியமில்லைதான்.

மொழியென்பது ஒரு சமுதாயத்தின் பண்பாட்டைப் பிரதிபலிக்கவும் வளர்க்கவும் உணர்வு பூர்வமாய் ஒன்றுபடுத்தவும் உதவும் கருவி என்பதால் அதன் வளர்ச்சி மிகுந்த முக்கியத்துவம் பெறுகிறது.

ஆனால், 'அரசாங்க அதிகாரிகளும் ஊழியர்களும் தமிழில்தான் கோப்புகளும் குறிப்புகளும் எழுத வேண்டும் - அவ்வாறு எழுதாவிட்டால் சும்மா விடமாட்டேன்' என்கிற ரீதியில் தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் தமிழ்க்குடிமகன் எச்சரிக்கை விடுத்திருப்பது நிச்சயமாய் தமிழை வளர்க்கப் போவதில்லை!

ஏற்கெனவே பல பிரச்னைகளுக்கும் பொறுப்புகளுக்கும் இடையே கஷ்டப்படும் அரசாங்க ஊழியர்களிடையே தமிழை இப்படி வலுக்கட்டாயமாகத் திணிப்பதற்கு பதிலாக, ஊக்கமளிக்கும் சூழ்நிலையை உருவாக்கலாம். தூய தமிழில் இல்லாவிட்டாலும் தமிழ் - ஆங்கில மணிப்பிரவாள மாக மொழியைக் கையாள அனுமதி அளிக்கலாம். தமிழ்ப் பதங்கள் கிடைக்காத நிலையில்




ஆங்கில சொற்களையே தமிழ் லிபியில் எழுத அனுமதிக்கலாம். இந்த அனுமதிகளைத் தந்து, அதிகாரிகளைத் தமிழில் எழுதும்படி பணித்தால் அவர்களும் கூச்சமோ பயமோ இன்றி, கூடிய விரைவில் தமிழில் சிந்தித்து எழுத முற்படுவார்கள்.

இதனால் இன்னொரு ஆதாயமும் ஏற்பட வாய்ப்பு உண்டு. நாளடைவில், அதிகாரிகள் பயன் படுத்தும் சங்கேத சொற்களெல்லாம் அன்னிய மொழிச் சொற்களென்கிற நிலையே மாறி, தமிழின் ஓர் அம்சமாகவே அவை ஆகிவிடும்.

இவ்வாறு ஆங்கிலம் முதலான பிற மொழிச் சொற்களைத் தமிழாக்கிக் கொள்ளத் தயங்குவது அறிவுடைமையாகாது. கம்ப்யூட்டர், பஸ், டெலிபோன் போன்றவற்றுக்கு, கணிப்பொறி, பேருந்து, தொலைபேசி என தமிழ்ச் சொற்களை உருவாக்கிய பிறகும் ஆங்கில வடிவமே தொடர்ந்து புழக்கத்தில் இருந்து வருவதை அனுபவத்தால் உணர்ந்திருக்கிறோம்.

இந்த முறையில்தான் ஆங்கிலம், லத்தீன், கிரேக்க, பிரெஞ்சு மொழிச் சொற்களை வரவேற்று வளர்ச்சியடைந்திருக்கிறது. ஆங்கில அகராதியைப் புரட்டினால் அனேக சொற்களுக்கு மூலம் பிறமொழி வார்த்தைகளே என்பது தெரியவரும்.

நவீன ஆங்கிலச் சொற்களுக்குத் தமிழ்ப் பதங்களை உருவாக்கும் முயற்சியை மேற்கொண்ட ராஜாஜி கூட, டி.கே.சி. மேற்படி நிலைமையைச் சுட்டிக்காட்டிய பிறகு தமது முயற்சியைக் கைவிட் டார். ஆங்கிலச் சொற்களை அப்படியே தமிழாக்கிக் கொள்வதில் தவறில்லை என்ற முடிவுக்கு வந்ததோடு, 'விஞ்ஞான மருத்துவ உயர்கல்வி வகுப்புகளில் கூட ஆங்கிலப் பாட நூல்களையே பயன்படுத்தலாம்; அவற்றுக்கு ஆசிரியர்கள் விளக்கங்களை மட்டும் தமிழில் அளிக்கலாம்' என்று யோசனை கூறினார்.

மகாகவி பாரதியாரும் தமது கட்டுரையில் இதே கருத்தை, ராஜாஜிக்கு முன்னதாகவே வெளியிட்டார் என்பது குறிப்பிடத்தக்கது.




மொழி என்பது பண்பாட்டுப் பெட்டகம் மட்டும் அல்ல - அது ஒரு தொடர்பு சாதனமும் கூட. இந்த இரட்டைப் பொறுப்பைச் சேர்ந்து நிறைவேற்றும் போதுதான் மொழி வளர்கிறது.

தமிழ் ஒரு சிறந்த தொடர்பு சாதனமாகவும் விளங்க வேண்டுமானால், ஆங்கிலத்தைப் போல் விஞ்ஞான வளர்ச்சிக்கு ஈடுகொடுத்தாக வேண்டும்.

அதை சாதிப்பதற்கான வழி, புதிய கண்டுபிடிப்புகளை அப்படியே தமிழாக்கிக் கொள்வதுதான். ஃப்ளாப்பி, பேஜர், செல்போன் என்று மூன்று சொற்களுக்கு நாம் தமிழ்ப் பதங்கள் உருவாக்குவதற்குள் வேறு முந்நூறு புதிய சொற்கள் ஆங்கிலத்தில் சேர்ந்து போகும்! தமிழுக்கும் ஆங்கிலத்துக்குமான இடைவெளி வளர்ந்து கொண்டே போகுமேயொழிய, குறையாது!

இந்த இடைவெளிக்குப் பயந்துதான் இங்கிலீஷ் மீடியத்தையே அனேகர் விரும்பி ஏற்கும் நிலை ஏற்பட்டிருக்கிறது.

எதிர்காலத்தில் விஞ்ஞானத்திலோ மருத்துவத்திலோ உயர்கல்வி பெற அயல்நாடுகளுக்குப் போகும் ஒருவர், 'சிரை', 'தமனி' (vein, artery) போன்ற சொற்களை மட்டுமே அறிந்திருந்தால் சமாளிக்க முடியாது. ஆனால், விஞ்ஞான, மருத்துவ கல்விக்குத் தேவைப்படும் அடிப்படையான ஆங்கிலச் சொற்கள் அப்படியே தமிழ் வடிவாக்கப்பட்டு கற்றுத் தரப்பட்டிருந்தால், ஒருவர் சராசரி ஆங்கில அறிவை வைத்துக் கொண்டு சமாளித்து விட முடியும்.

தமிழ், போதனை மொழியாகவும் ஆங்கிலம் துணை மொழியாகவும் அமைந்த கல்வித் திட்டம், உயர்ந்த இலக்குதான். எனினும், அது வெற்றிபெற வேண்டுமானால் மன்மோகன் சிங்கின் பொருளாதாரக் கொள்கை போல் நமது மொழிக் கொள்கையும் தாராளமயமாக்கப்பட வேண்டும். அந்நிய மொழிச் சொற்களை துவேஷமின்றி ஏற்க வேண்டும்.

ஜ, ஸ, ஷ, ஹவைக் கூட அன்னியமாகக் கருதி, வெறுத்து ஒதுக்கும் அரசியல் கண்ணோட்டமெல்லாம் மாறினாலொழிய இந்த ஆரோக்கியமான தமிழ் வளர்ச்சிக்கு வழி பிறக்காது!

**மறக்க முடியவில்லை/சம்பவம் - 1**

"**1982** ஆம் ஆண்டு என்று நினைவு. கொச்சின் அருகில் உள்ள பள்ளுருத்தி என்ற இடத்தில் சிவன் கோவிலில் கச்சேரி. ஒரு மணி நேரம் பாடியிருப்பேன். தொண்டையில் ஒரு கரகரப்பும் பலவீனமும் தென்பட்டது. தொடர்ந்து பாட முடியாது என்று தோன்றியது. கேரள ரசிகர்களுக்கோ, சுமார் மூன்று மணி நேரமாவது ஒரு கச்சேரி நடந்தால்தான் திருப்தி வரும். நான் கடவுளாகவே நினைக்கும் தியாகராஜ சுவாமிகளை, இந்த இக்கட்டிலிருந்து என்னைக் காப்பாற்றுமாறு வேண்டிக் கொண்டேன். அப்போது அந்த அற்புதம் நடந்தது. யாருமே எதிர்பார்க்காத வகையில் திடீரென்று பெரும் மழை! திறந்தவெளி கச்சேரி என்பதால், நிகழ்ச்சி பாதியில் தடைப்பட்டது. சுமார் ஒரு மணி நேரத்துக்குப் பிறகு அருகிலிருந்த அரங்கு ஒன்றிற்குள் கச்சேரியைத் தொடர வைத்தார்கள். இந்த இடைப்பட்ட நேரத்தில் என் தொண்டை முழுவதும் சரியாகிவிட, மேலும் இரண்டு மணி நேரம் பாடினேன். ரசிகர்களுக்கு மிகவும் சந்தோஷம். நான் நம்பிய தியாகய்யர் என்னைக் கைவிடவில்லை என்று எனக்கும் பேரானந்தம்."

**— ஓ.எஸ். தியாகராஜன்**

**வ**த்ஸலா மாமியின் முகத்தைப் பார்க்க வேதனையாக இருந்தது. நெற்றித் திலகமும் பின்னணி மஞ்சளும் திரும்பவும் வந்து பூத்து விடக் கூடாதோ? போய்ச் சேர்ந்தவர் நினைவாக இப்படித் தன்னை வெறுமைப் படுத்திக் கொள்வது - மரணத்தை ஏற்கும் பக்குவமா இல்லை அதனிடம் தெரிவிக்கும் எதிர்ப்பா...?

ஏறிட்டுப் பார்த்தபோது வத்ஸலா மாமியின் கண்கள் தத்துவத் தேடல்களைக் கடந்து சிரித்துக் கொண்டிருந்தன- எப்போதும் போல.

"இதோ வரேன்..." என்று சமையல் அறைக்குள்- போனவர் சின்ன தட்டுகளில் தட்டையும் சீடையும் கொண்டு வந்து குழந்தைகளிடம் கொடுத்தார். தம்ளர்களில் வெட்டிவேர் வாசமுடன் பானை ஜலம்.

எதுவும் மாறவில்லை அந்த வீட்டில்- மாமியின் முக ஒப்பனை தவிர. ஒரு மியூஸியம் போல் கிருஷ்ண பாகவதரின் தம்பூராவும் புத்தகங்களும் வீணையும் அதனதன் இடங்களில் தூசில்லாமல் வீற்றிருந்தன. கூடத்து ஊஞ்சலில் பனை ஓலை விசிறிக்குக் கீழே அந்தப் பழைய நோட்டுப் புத்தகம்; கட்டைப் பேனா. பார்க்கப் பார்க்க, கிருஷ்ண பாகவதர் ஊஞ்சலின் இடதுபக்க ஓரத்தில் உட்கார்ந்து ம்ணுமுணுவென்று பாடிக் கொண்டே நொடேஷன் எழுதுவதுபோல் ஒரு பிரமை உண்டாயிற்று.

அப்படியொரு நேரத்தில் நாம் உள்ளே நுழைந்துவிட்டால், திருமண் பளிச்சிட திரும்பிப் பார்த்து "வா!" என்பார். பேனா பிடித்த கை 'உட்காரு' என்று சைகை காட்டும். தொடர்ந்து ஐந்து நிமிடமோ - அரை மணியோ, ஒரு மணியோ... காகிதத்தில் அவர் கற்பனையை வடிக்கும் வரை காத்திருக்கும் பொறுமை நமக்கு இருக்க வேண்டும்.

அவரைத் தேடி வந்த அனேகம் பேருக்கு அந்தப் பொறுமை இருந்தது. மரியாதையால் விளைந்த பொறுமை. நெஞ்சுக்குள் ஊடுருவிச் சென்று பரவசத் தைப் பரப்பும் அவருடைய சங்கீத ஆற்றலால் விளைந்த மரியாதை. கீர்த்தனைகளில் கிருஷ்ணனையும்



# நம்பிக்கை

**கீதா ரவி**

ராமனையும் காமாக்ஷியையும் தில்லை நடராஜனையும் அப்படியே கண் முன் கொண்டு வந்து நிறுத்திவிடுவார். ராக ஆலாபனையும் அப்படித்தான்- விதவிதமான பூக்களைக் கொண்டு மாலை தொடுத்ததுபோல் சஞ்சாரங்கள். இஷ்டதெய்வத்துக்கு அதை சார்த்துவதுபோன்ற முத்தாய்ப்பு. சுவரம் பாடினாலோ, உதிரிப்பூக்களால் அர்ச்சனை செய்யும் அழகு.

இந்த தெய்வீக அழகுக்கு அடிமையாகித்தான் ஆயிரம் ரசிகர்கள் ஈர்க்கப்பட்டார்கள். அவர்களுள் ஒரு நூறு பேர் அவரை வணங்கவும் வாழ்த்தவும் வெறுமே பார்த்துப் போகவும் இந்த மயிலாப்பூர் இல்லம் வந்தார்கள். ரசிகர் என்ற நிலையைத் தாண்டி அவரைத் தங்கள் வாழ்வின் ஓர் அம்சமாக ஆக்கிக் கொண்டவர்கள்.

அப்படித்தான் நானும் வர ஆரம்பித்தேன். கிருஷ்ண பாகவதர் என்னிடம் காட்டிய கூடுதல் வாஞ்சைக்குக் காரணம் இருந்தது. "பத்து வயசுல எங்களை விட்டுட்டுப் போன பத்மா இருந்தா இன்னைக்கு உன்னை மாதிரி இருப்பா..." என்றார் ஒருமுறை.

உணர்ச்சி வசப்படாமல்தான் சொன்னார் புன்னகையுடன். அந்த நிச்சலனமே பகீரென்று கலங்கடித்தது.

இத்தனை பலத்தை அவருக்குக் கொடுத்ததுகூட அந்த சங்கீத யோகம்தான் என்று எண்ணிக்கொண்டேன்.

இப்போதும் அதை நினைக்க நினைக்க துக்கம் பொங்கிக் கொண்டு வந்தது. "அடடா!" என்றார் வத்ஸலா மாமி என் கலங்கிய கண்களைப் பார்த்து. குழந்தைகள் புரியாத பயத்துடன் என் முகத்தைப் பார்த்தனர். பட்சணத் தட்டை அவர்கள் கையில் கொடுத்து "வாசல்ல போய் விளையாடுங்க பார்க்கலாம்" என்று மென்மையாக அப்புறப்படுத்தினார் மாமி.

''குழந்தைகள் மிரண்டுடுத்து பாரு... அழப்படாது."

சுதாரித்துக் கொண்டேன்.

''அமெரிக்கா ரொம்ப தூரம் மாமி. எல்லா விதத்துலயும் தூரம். மந்திரக்கோலை வீசினாப்புல வழுக்கிண்டு காரியங்கள் நடக்கறது... ஆனா சதா ஒரு பயம் மனசுல. குடும்பம் குழந்தைன்னு இருந்தாலும் தன்னந்தனியா இருக்கற மாதிரி பயம். அந்த மாதிரி சமயங்களெல்லாம் மாமாவோட பாட்டுதான்- அப்படியொரு அமைதி உண்டாக்கும். ஸ்ரீரங்கம், திருவானக்கா, சிதம்பரம், சீர்காழி, மாயவரம்னு வரிசையா க்ஷேத்ராடனம் போய்ட்டு வந்த மாதிரி - அப்படியே கையைப் புடிச்சு அழைச்சுண்டு போய் கர்பகிருஹத்துல நிறுத்தின மாதிரி இருக்கும்..."

அகப்பட்ட லீவில்தான் அமெரிக்காவிலிருந்து வரமுடியும். மாமியின் துக்கம் ஆறு மாதங்களில் அடங்கியிருக்க வேண்டும். நான் பேசப் பேச மௌனமாகக் கேட்டபடி இருந்தார். துக்கம் கேட்கப் போகும் வீடுகளில் உறவினர்கள் பேசுவார்கள். நினைவுகளைக் கொட்டி ஆறுதல் தேடுவார்கள். இப்போது ஆறுதல் எனக்குத்தான் தேவைப்பட்டது.

"இங்க ராமர் கோவில்ல ஒருமுறை பாடினாரே... நன்னுபாலிம்ப... எந்தப் பெருமாள் கோவிலுக்குப் போனாலும் அந்தப் பாட்டு வந்து அலை மோதும்..."

''அதெல்லாம் பகவானுடைய கிருபை'' என்றார் மாமி.

"பாம்பேல ஒருமுறை அமிர்தவர்ஷிணி பாடினப்போ மழை வந்ததுன்னு சொல்லிக் கேட்டிருக்கேன்..."

**பாடகர் ஓ.எஸ்.தியாகராஜன் குறிப்பிட்ட சம்பவத்தின் தொடர் சிந்தனையாக எழுதப்பட்ட கற்பனைக் கதை இது. இதேமாதிரி லால்குடி ஜெயராமனும் ரவிகிரணும் சொன்ன சம்பவங்களின் தூண்டுதலால் விளைந்த கற்பனைக் கதைகள் - பக்கம் 67, 74ல்**

"அதுமாதிரி நடக்கணும்னா அது அந்த சங்கீதத்துனோட மகிமை மாத்திரமில்ல மாமி... பாடறவாளுக்குள்ள இருக்கிற ஆழ்ந்த நம்பிக்கை. பாடறவாளையும் புடம் போட்டு, கேட்கறவாளையும் புடம் போட்டு ஏதோ இப்பத்தான் புதுசா பிறந்து வந்திருக்கோம்ங்கற மாதிரி மனசைத் துடைச்சு வைச்சுடறது...."

"அழகா பேசறே அருணா. அதனாலேயே மாமாவுக்கு உன் பேர்ல அதிக ப்ரியம்..."

"அது என்னோட பாக்கியம் மாமி" என்ற போது குரலுடைந்து போனது. தோளைத் தட்டி சமாதானப்படுத்தினார் மாமி.

"காப்பி கொண்டு வரேன்..." உள்ளே போனார். வாசலில் குழந்தைகள் கலகல வென்று விளையாடினர். மெள்ள எழுந்து சமையலறைக்குப் போனேன். பூஜை அலமாரியில் அத்தனை படங்களும் துடைத்து சுத்தமாய் இருந்தன. மும்மூர்த்திகள் படத்துக்குப் புது சந்தன மாலை சார்த்தியிருந்தது.

தனியாக இன்னொரு பக்கத்தில், கிருஷ்ண பாகவதர் தன்னை மறந்து பாடும் வண்ணப்படம். ஒரு பத்திரிகை அட்டையை அலங்கரித்த படம் அது. 'பக்தி பாகவதர்' என்று தலைப்பிட்டு அவர் இசையை விமர்சனம் செய்த இதழ்.

அந்தப் படமெடுக்கப்பட்டபோது உடனிருக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. "தயவு செய்து ஏதாவது பாடுங்கள்" என்று சொல்லிவிட்டு போட்டோகிராபர் கும்மியடிப்பதுபோல் சுற்றிச் சுற்றி வந்து வித விதமான கோணங்களில் படமெடுத்தார். ரிப்போர்ட்டருக்குத்தான் பிடிவாதமாக பிடி கொடுக்க மறுத்தார் மாமா. "இல்லை, வேண்டாம்! பத்திரிகை பேட்டி கொடுப்பதில்லை... உங்களுக்குத் தோன்றுவதை எழுதுங்கள்... எழுதாமலும் இருங்கள்..."

விமர்சனக் கட்டுரையைவிட படங்கள் அதிகம் பேசின. மூடிய கண்களும் உயர்த்திய புருவங்களும் இலேசாகக் கலைந்த கேசமும், விரிந்த இதழ்களும் தன்னை மறந்த லயிப்பு உணர்த்தின.

"இந்தப் படத்தைனா நீங்க பூஜையில வைக்கணும்!" - மாமியைக் கேட்டேன்.

"ச்சச்சு.... அது தப்பாயிடும்!"

"ஏன் மாமி! எத்தனை தெய்வீகமா பாடினார். எத்தனை உயர்ந்த மனுஷர்... எத்தனை நல்ல காரியங்களுக்கு உதவியிருக்கார். எத்தனை பேருக்கு மனகல பக்தி பொங்க வைச்சிருக்கார்... அவரை நாம தெய்வமா வணங்கறதுல என்ன தப்பு...?"

"தப்பெதுவுமில்ல... அவருக்குத்தான் தெய்வத்துட்ட நம்பிக்கை கிடையாது..."

அவநம்பிக்கையுடன் மாமியைப் பார்த்தேன்.

"அந்த உணர்வை நாம மதிக்க வேண்டாமா...?" என்றார் சாவதானமாக.

அவர் வார்த்தைகளின் முழு அர்த்தமும் என்னுள் இறங்கியபோது துக்கத்தை அதிர்ச்சி அடித்துக் கொண்டு போய் விட்டது. உறுதியான கரங்களால் மாமி காப்பி தம்ளரை நீட்ட, வாங்கிக் கொண்ட என் கைகள் நடுங்கின.

மேடையில் வைத்து காப்பியை ஆற்றி சுதாரித்துக் கொண்டேன். "பத்து வயகல ஒரு பொண் குழந்தையைப் பறி கொடுத்தா அப்படி விரக்தி வந்துடும் போலிருக்கு..."

"சே! சே! அந்தமாதிரி கோபமெல்லாம் அவருக்குக் கிடையாது. நம்பிக்கை வைச்சு இழக்கல்லை... ஆரம்பத்திலேருந்தே கிடையாது..."

"ஆரம்பம்னா....?"

"எனக்குத் தெரியாது அருணா. அவர் கிட்டே அதைப்பத்தி நான் கேட்கல. ஆனா, கல்யாணம் ஆனவுடனே ஏதோ வாக்குமூலம் மாதிரி அவரே சொல்லிட்டார் எங்கிட்டே. 'எனக்கு நம்பிக்கை இல்லை வத்ஸலா... அதுக்காக உன் நம்பிக்கையை நீ மாத்திக்க வேண்டாம்... உன் இஷ்டப்படி இரு...'ன்னார். நான்தான் வரம் கேட்கற மாதிரி கேட்டுண்டேன்: 'திருமண் இட்டுக்கணும்; உலகத்துக்காக நான் கிழமை கொண்டாடணும். நாளைக்குக் குழந்தை பிறந்தா உங்க சிந்தனையை அதும்பேர்ல திணிக்கப்படாது...' அத்தனைக்கும் சரின்னார்... அவரை விழுந்து சேவிச்சா அவருக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்காம இருந்தது. போகப் போக அதையும் ஏத்துக்க ஆரம்பிச்சுட்டார்... ஏன்னா எனக்கு அது வேண்டியிருந்தது..."

எனக்குள் எழுந்த கேள்விகளையெல்லாம்

## எறும்பார் கடிக்கிறார்!

*சிறையில் இருக்கும் சசிகலா தரையில் படுக்கிறார்!*

*– ஜெ.வேதனை*



முகத்தில் படித்ததுபோல் மாமி தொடர்ந்தார்:

''பெருமாள் பேர்ல நம்பிக்கை இல்லைன்னா எப்படி இந்த மாதிரி பக்திப் பிரவாகமா பாடினார்னு கேட்பே...?''

''........''

''அவர் சங்கீதம் ஒரு மாத்து குறைஞ்சு போய்ட்டாப்புலகூட தோணறது இல்லையா உனக்கு...?''

மாமியின் கூர்மை திணறடித்தது. குற்ற உணர்வுடன் பார்வையைத் தாழ்த்திக் கொண்டேன்.

''உன்னோட ஏமாற்றம் சராசரியா எல்லாருக்கும் ஏற்படக்கூடியதுதான். ஆனா நான் அப்படி நினைக்கல்லை.... நம்ம சங்கீதத்துல எல்லாமே பக்தி மயம்தான்... அதனால அந்த பக்தியைப் பூரணமா உணர்றவாளும் அனுபவிக்கறவாளும் அதை வெளிப்படுத்திப் பாடறது ஆச்சரியமில்லே... நான் பிறத்தையாரைக் குறையா சொல்றதா நினைக்கப்படாது- அவா அத்தனைப் பெருக்கும் பக்தி கொடிக்கொம்பு ம்மாதிரி - புடிச்சுண்டு பரவி வளர்றதுக்கு அது இருந்தது - ஆனா மாமா......''

முதன்முதலாக மாமியின் குரலில் துக்கம். ''அந்த உதவி இல்லாமலே அத்தனை பெருக்கும் சமமா வந்தாரே...! நானும் ரொம்ப நாளா யோசிச்சேன். எப்படி முடிஞ்சது அவராலே? என்ன காரணம்னு... அவரைப் பிரிஞ்சப் பறமாதான் அது புரிஞ்சது- அவர் பெருமாளை ஆராதிக்காம இருந்திருக்கலாம். ஆனா வாழ்க்கைல எல்லாத்தையும் ஆராதிச்சார் - ஊஞ்சப் பலகா மேல இருக்கற கட்டை பேனாவுலேருந்து கொல்லைப் பக்க மாமரத்துக் குயில் வரைக்கும் அத்தனையையும் ஒரே சிரத்தையோடதான் பார்த்தார். சங்கீதத்தையும் அப்படியே ஆராதிச்சார். அதுவும் 'அவருக்குச் சேவகம் பண்றேன்'னு வந்து கூடவே இருந்துடுத்து... பார்க்கறவாளும் கேட்கறவாளும் அவாவா சௌகரியத்துக்கு மனசுக்குப் பிடிச்ச அர்த்தங்களை அவர் பாட்டுலே தேடிண்டா... அவ்வளவுதான்...''

**மா**மி பேசி நிறுத்திய நிசப்தத்தை குழந்தைகளின் சிரிப்பு பெரிதாகக் கலைத்தது.

முழுசாக ஐந்து நிமிடங்கள் கடந்த பிறகு மெதுவாகக் கேட்டேன்:

''எல்லாம் சரிதான் மாமி... உங்களால அவரை எப்படி ஏத்துக்க முடிஞ்சது....?''

'என்ன அருணா இது?... இப்படியொரு கேள்வியா?' என்பதைப் போல் என்னைப் பார்த்துவிட்டுச் சொன்னார் வத்ஸலா மாமி:

''அவரால என்னை ஏத்துக்க முடிஞ்சதே- சந்தோஷமா ஏத்துக்க முடிஞ்சதே, அதை விடவா!''

# "தேவதா உச்சாடனம்"
# (பூஜா உபதேசம்)

மனித சக்தியின் மகத்துவத்தை முழுமையாக பயன்படுத்தி மனிதரால் வெல்ல முடியாத காரியம் எதுவுமில்லை என்று நிரூபிக்கும் நிலையான பூஜையிதை - இந்த விஞ்ஞான காலத்திலும் - இதனை மிஞ்சிய சக்தி வடிவான ஒரு வெற்றி வழி இல்லை என்பதை நிரூபிக்கும் பூஜையிது. மழையை வரவழைக்கவும், பெய்யும் மழையை நிறுத்திக் காட்டவும் ஒரு மனிதவடிவான சக்தி உண்டு என்றால் - 'தேவதா உச்சாடனம்'தான் என்ற வேத சாஸ்திர நிரூபனம் பெற்ற பூஜையை - இன்று கற்றவர்கள் எவரும் இல்லையோ எனும் அளவிற்கு அரிதாகி விட்டனர். அத்தகைய ஒரு அரிய கலை ஒன்று மனித அறிவினின்று மறைந்து விட்டால் - மனித இனத்திற்கே ஒரு மாபெரும் இழப்பென்ற காரணத்தால் - இதனை - அறிந்திட உரிய ஜாதக அமைப்பும் - தீய பழக்கங்களற்ற ஒரு தூயதான நிலையும் கொண்டாருக்கு - இந்த அரிய கலையான பூஜையை போதிக்கலாமென்ற நோக்கில் இவ்விளம்பரத்தை வெளியிடுகின்றோம். எனவே உரிய அமைப்பு உள்ளவர்களுக்குத்தான் இந்த அரிய பெரிய கலையை கற்றிடும் ஆவல் வரும். இந்த விளம்பரம் கண்ணில்படும். எவரொருவருக்கு இதன் வழியாக இகம் புகழ வாழும் - செல்வ சுக நிறைவு - சிறப்பான குபேர வாழ்வு அமையும் 'விதி' அமைப்பு இருக்கின்றதோ - அவருக்குத்தான் இந்த இனிதான 'தேவதா உச்சாடனத்தை' கற்றிடும் வாய்ப்பு ஏற்படும்.

எனவே இவ்வரிய பூஜையை உபதேசிக்கப் பெற்று கோடி தனம் பெற்று குபேர சம்பத்தைப் பெற்றிடும் யோகமும் விருப்பும் இருக்கின்றதோ அவர்கள் 15.1.1997 தேதிக்குள் ஜாதக நகலுடன் தெளிவான முகவரியுடன் விண்ணப்பித்துக் கொள்ளவும். அத்தேதி கடந்து வரும் மனுக்கள் கண்டிப்பாக கவனிக்கப்படமாட்டாது. ஏனெனில் - எவர் ஒருவருக்கு இந்த பூஜா உபதேசம் பெற்றிடும் தெய்வ அனுமதி இருக்கின்றதோ அவர் - நிச்சயமாக உரிய தேதிக்குள் மனு செய்து கொள்ளும் வாய்ப்பினை அடைவார்.



**பிரபல ஜோதிடர் : ஜோதிட ஆசிரியர்**
**ஸ்ரீமத் ஜெயவீர தேவா : யோகி**
**ராஜயோக பயிற்சியாளர்**
**பிளாட் எண் : 204, அண்ணாநகர்,**
**மதுரை - 625 020.**
**தொலைபேசி : 533412, 534634.**

Advt

• பாலகிருஷ்ண சாஸ்திரி



# "காசு தர ஆளில்லை; கதை எப்படிப் பிழைக்கும்?"

**சை**தாப்பேட்டையில், கதா காலட்சேபம். 'கீசகன் வதம்' சொல்லி முடித்ததும் அவர் காலில் விழுந்தான் ஒரு சாதாரண கல் உடைக்கும் தொழிலாளி. கண்ணீர் விட்டுக் கதறி அழுதான்.

"என்னப்பா? ஏன் அழறே?" என்று அவர் கேட்க, ''நான் இத்தனை நாள் எவ்வளவு கிராதகனா இருந்திட்டேன். என் சம்சாரத்தை எவ்வளவு கொடுமை செய்திட்டேன்! என் மேலேயே எனக்குக் கோவம் வருது சாமி!'' என்றான்.

அவன் கேட்ட கீசகன் வதம் காலட்சேபம், அவன் மனதை உருக்கி, அவனைத் திருத்தி விட்டது!

அப்படி கேட்போர் நெஞ்சுருகக் கதை சொன்னவர் பாலகிருஷ்ண சாஸ்திரி.

"ஒரு சமயம் தி.நகர் சிருங்கேரி மடத்தில் மகாபாரதம் சொல்லிக் கொண்டிருந்தேன். காம்பவுண்ட் சுவருக்கு அப்பால் நின்று தினமும் கதை கேட்டுக் கொண்டிருந்த ஆள் ஒருவன் மனம் மாறி தனது வெறித்தனமான ரேஸ் பழக்கத்தை விட்டொழித்தான். இதுபோல பல உதாரணங்கள் சொல்லிக்கொண்டே போகலாம்" என்றார் பாலகிருஷ்ண சாஸ்திரிகள்.

தம் இருபத்தி நாலாவது வயதில் ஹரி கதை சொல்ல ஆரம்பித்தவர், இன்று எழுபதைக் கடந்த வயதிலும் அவ்வப்போது சொல்லிக் கொண்டுதான் இருக்கிறார்.

கதாகாலட்சேபம், ஹரி கதை என்று நாம் குறிப்பிட்டுக் கொண்டிருந்தாலும், இதன் ரிஷி மூலம் மராத்திய மண்தான். நாமதேவரும், துக்காராமும் பக்தியைப் பரப்பியது இந்த ஹரி கதையின் மூலமாகத்தான். ஆனால், அங்கே இதை 'மராத்திய தரங்கிணி' என்று குறிப்பிடுவார்கள். இங்கேகூட இதை 'நாம சங்கீர்த்தனம்' என்று சொல்லுவதே சரி.

"இன்று நாமசங்கீர்த்தனம் சொல்ல அதிகம் பேர் இல்லையே. ஏன்?"

"இது அத்தனை சுலபமான விஷயமில்லை. நாம சங்கீர்த்தனம் செய்ய வேண்டுமென்றால், சமஸ்கிருத ஞானம் வேண்டும்; தமிழ் இலக்கிய பாண்டித்தியம் வேண்டும். வேத, சாஸ்திர ஞானம் வேண்டும். அதுமட்டும் போறாது. பேச்சுத்திறமை அவசியம். சங்கீதத் திறமை அவசியம். பாவ, ராக, தாள, லய அறிவு முக்கியம். இதில் இயல், இசை, நாடகம் மூணும் சேர்ந்திருக்கு.

''இவ்வளவு திறமையும் இருந்து, நாம சங்கீர்த்தனம் செய்ய வந்தாலும், நல்ல வருமானம் கிடைக்காது. சங்கீத வித்வான்களுக்கெல்லாம் அள்ளிக் கொடுப்பவர்கள், காலட்சேபக்காரர்கள் என்றால் கையை இறுக்கிக் கொண்டு விடுகிறார்கள். ஹரி கதை சொல்ல வேண்டுமென்றால், கூடவே பின் பாட்டுக்கு ஒருத்தர், தம்பூரா போட ஒருத்தர், மிருதங்கத்துக்கு ஒருத்தர் என்று தேவை.

''வருமானம் குறைவு என்பதால், பக்கவாத்தியக்காரர்களுக்கு காலட்சேபத்துக்கு வர ஆர்வம் இல்லை.

"ஆக, கஷ்டமும் பட வேண்டும்; வருமானமும் குறைச்சல். அதான் ரொம்ப பேர் வருவதில்லை.

"அதே நேரம் ரொம்ப நன்றாக விஷயம் தெரிந்து காலட்சேபம் செய்கிறவர்களும் இல்லாமல் இல்லை. அவர்கள் எண்ணிக்கையில் ரொம்பக் குறைச்சல்."

"ரசனை மாற்றம் காரணமாய் காலட்சேபங்களுக்குக் கூட்டம் வருவதும் ரொம்பக் குறைந்து விட்டதே?"

"அறுபதுகளில்கூட, என் காலட்சேபங்களுக்கு கூட்டம் நிறைய வரும். மயிலாப்பூர் ஆர்.ஆர். சபாவில் நான் கதை சொன்னால், சித்திரக் குளம்வரை ஜனங்கள் உட்கார்ந்து கேட்பார்கள். அப்போதெல்லாம் நாலுமணி நேரம் கதை சொல்லுவேன். இப்போது, ஒண்ணரை, ரெண்டு மணிக்குள்ளே முடித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இப்பவும் விஷயம் தெரிந்தவர்களின் காலட்சேபத்துக்கு நல்ல கூட்டம் வரத்தான் செய்கிறது."

"இப்போ ரேடியோ, டீ.வி போன்ற மீடியங்களில், இந்தக் கலைக்கு நிறைய ஆதரவு தரணும். தந்தால், நாம சங்கீர்த்தனம் அழிந்து போகாமல் காக்கப்படும்" என்றார் பாலகிருஷ்ண சாஸ்திரிகள்.

சந்திப்பு: **எஸ்.சந்திரமௌலி**

எதிர் நீச்சல்:
வசந்த குமார்

வீட்டிலேயே தறிபூட்டிக் கதர் நெசவு செய்தவர் அவர். கதர்த்துணிகளை ஊர் ஊராய்ச் சென்று விற்றதுண்டு. பெரிய அண்ணன் குமரியாரும் விற்பனைக்கு அப்பாவுடன் போவார்.

# வீரட்டை சைக்கிளில் தொடங்கியதுதான்
# வசந்த் அண்ட் கோ

"பள்ளிக் கூட நாட்களில் எனக்கிருந்த ஒரே ஆசை மோட்டார் பைக்கில் போக வேண்டும் என்பதுதான். வீதியில் யாராவது பைக்கில் போனால் வாய் பிளந்து பார்த்துக் கொண்டிருப்பேன்" என்று தம்முடைய டிரேட் மார்க் சிரிப்போடு பழைய நாட்களைப் பற்றிச் சொன்னார் வசந்தகுமார்.

மாவட்ட அளவில் ஹாக்கி விளையாட்டு வீரராக இருந்த வசந்த், பள்ளியிறுதித் தேர்வு வரை வகுப்பில் முதல் மாணவர். இரட்டையராக உடன் பிறந்த சகோதரி- வசந்தகுமாரியும் முதலிடத்துக்குப் போட்டி! அப்புறம் நாகர்கோவில் எஸ்.டி.இந்துக் கல்லூரியில் தமிழிலக்கியம் படித்து, பின்னர் அஞ்சல் வழி எம்.ஏ. படிக்கும்போது படிப்பு தடைப்பட்டது. அதற்கு அரசியல் ஒரு காரணம். நேரடியாக வசந்தகுமார் அரசியலில் இறங்கவில்லை. என்றாலும் அண்ணன் இராயபுரம் தொகுதியில் பழைய காங்கிரஸ் வேட்பாளராகப் போட்டியிட்டதால், அவருக்குத் தேர்தல் பணியில் உதவுவதற்காகச் சொந்த ஊரான நாகர்கோவிலை விட்டுச் சென்னை வந்தவர், அப்படியே தொழிலில் வேர் பிடித்தது ஆச்சரியம்.

அண்ணன் குமரி அனந்தன்தான்! குடும்பத்தின் மூத்த பிள்ளை. ஏழுபேரில் கடைக்குட்டிதான் வசந்தகுமார்- வசந்த குமாரி இரட்டையர்!

தேசியத்தில் பற்றுள்ள குடும்பம். அப்பா ஹரிகிருஷ்ணப் பெருமாள் நாடார், மகாத்மா காந்தியின் கதர் நிர்மாணத் திட்டத்தால் கவரப்பட்டவர். சிட்ட நூலை வாங்கிச் சிடுக்கெடுத்துப் பாவுசுற்றி

அண்ணனுக்காக சென்னை வந்த காரியம் வெற்றிபெறமுடியவில்லை. ஊர் திரும்ப மனமின்றிச் சென்னையிலேயே இருக்க விரும்பினார். வி.ஜி.பி. நிறுவனத்தில் வேலை கிடைத்தது. விற்பனைப் பிரதிநிதியாக மாதம் எழுபத்தைந்து ரூபாய் சம்பளம்தான். ஆனாலும் அப்போது முதலே 'ஒயிட் அண் ஒயிட்' உடை, கழுத்தில் 'டை' என்று ஒரு கம்பீரத்தை ஏற்படுத்திக் கொண்டார். டை கூட சின்ன அண்ணன் நவநீத கிருஷ்ணனுடையது தான். "எனக்கு அதில் 'நாட்' போடக் கூடத் தெரியாது. அப்படியே 'நாட்'டை அவிழ்க்காமல் போட்டுக் கழற்றி வைப்பேன்" என்கிறார் வசந்த குமார்.

"இருக்கிற அழகை மெருகு ஏற்றிக் காட்ட வேண்டும். தினமும் ஷேவ் செய்து நம்மை நாமே கண்ணாடி முன் நின்று பார்த்தாலே தெம்பு வரும். தாழ்வு மனப்பான்மை அகலும். வெற்றி கிடைக்கும்" என்கிறார் இவர்.

எட்டு ஆண்டுகள் வி.ஜி.பி.யில் பணியாற்றிக் கிளை மேலாளர் வரை உயர்ந்தவர். சிறுவயதில் ஆசைப்பட்ட மோட்டார் சைக்கிள் கிடைத்தது. 'புல்லெட்' வண்டி! வி.ஜி.பி.யின் இருபத்தைந்து கிளைகளுக்கு இடையே ஒரு போட்டி. அதிக விற்பனை என்ற சாதனைக்காக வசந்த் வேலை பார்த்த சைதாப்பேட்டை கிளைக்கு அந்த பைக் தரப்பட்டது.

ஏதோ ஒரு காரணத்தால் அந்த நிறுவனத்தை விட்டு விலகினாலும்

அண்ணாச்சி, வி.ஜி.பி.யிடம் கற்றுக் கொண்ட பாடங்களை மறப்பதே இல்லை.

"காலை ஒன்பது மணிக்கு அலுவலகம் என்றால் எட்டே காலுக்கே நாங்கள் போய் காத்திருப்போம். அண்ணாச்சி எட்டரை, எட்டே முக்கால் என்று எப்போது வேண்டுமானாலும் வருவார். அவர் வருகிற நேரம் நாங்கள் இருக்க வேண்டும் என்பதுதான். அதேபோல் சாயங்காலமும் நேரம் பார்க்க முடியாது. பெரியவர் வருகிற நேரம் தான் கணக்கு. முதல் மூன்று ஆண்டுகளில் நான் ஒரு நாள் கூட லீவு போட்டதில்லை."

இதேபோல், வசந்தகுமாரிடம் இப்போது பணியாற்றும் சிலரும் 'எள் என்றால் எண்ணெய்யாக' நிற்பதைப் பெருமையோடு குறிப்பிடுகிறார்.



**வி.**ஜி.பி. நிறுவனத்தை விட்டு விலகி மூன்று மாதங்கள் சும்மா இருக்க நேர்ந்தது. சொந்தத்தில் தொழில் தொடங்க முதலீடு வேண்டும். கேட்டுப் பார்த்த பலரும் உதவிக்குக் கைகொடுக்கவில்லை. மூன்று மாதமும், தங்க இடமும் தந்து சாப்பாட்டுக்கும் உதவினார் ஒரு நண்பர். அவர் சொல்லி 45, தெற்கு உஸ்மான் சாலையில் ஒரு கடை விற்பனைக்கு வருகிற தகவல் கிடைத்தது. கடைக்கு ஒரு பெயர்ப் பலகையை மட்டும் வைத்தார். வாடகை சைக்கிளில் வீடு வீடாய்ச் சென்று சீட்டுப் பிடித்தார். மடக்கு நாற்காலி, கடிகாரம், கூடை நாற்காலி என்று தவணை விற்பனை! கடனுக்குப் பொருள்களை வாங்கி விற்றுப் பணம் தருவது என்று தொடங்கியது தான் இன்று தழைத்துள்ள வசந்த் அண்ட் கோ நிறுவனம்!

மோட்டார் பைக், 'ஒயிட் அண்ட் ஒயிட்' எல்லாவற்றையும் மறந்து விட்டு, சாதாரண பேண்ட் ஷர்ட்டில், வியர்க்க விறுவிறுக்க சைக்கிளில் சுற்ற வேண்டி வந்தது. ஒரு சோதனை! கோட்டு சூட்டு எல்லாம் போட்டு பந்தாவாகக் கிளை மானேஜராக அரசோச்சிவிட்டு இப்படி ஓர் இறக்கம் என்றால் சங்கடம்தான்.

"இந்த நிலை மாற்றத்தில் நொந்து போகாமல் மேலே வந்ததுதான் சாதனை. முந்தைய நிறுவனத்தை விட்டு விலகியது கடவுள் தந்த சோதனைதான். என்னில் திறமை இருக்கிறதா என்று பார்ப்பதற்காக அவர் தந்தது என்று நம்பி அதை சந்தோஷமாக எதிர் கொண்டேன். வெற்றி பெற்றேன்..."

வி.ஜி.பி.யிடம் கற்றுக் கொண்ட முக்கியமான பாடமாக 'கோபம் கூடாது' என்பதைக் குறிப்பிடுகிறார். "வாடிக்கையாளர்கள் சத்தம் போட்டால் அது நியாயம்தான். நாம்தான் பொறுமையாய்க் கேட்டு அவர்களைத் திருப்திப் படுத்த வேண்டும்" என்பாராம் வி.ஜி.பி.

"எல்லோரும் ஆசைப்படுகிறார்கள். ஹீரோமாதிரி உடை.... வசதி.. என்று எல்லாம் வேண்டும். இதற்கெல்லாம் உழைக்க வேண்டும் என்றால் தயக்கம்... நாமே பாடுபட்டு உழைத்து எல்லா வசதிகளையும் அடைய வேண்டும் என்கிற எண்ணம் சிறுவயதிலேயே மனசில் வேர் பிடிக்க வேண்டும். கடவுள் எல்லோருக்கும் ஒன்று போலவேதான் திறமையைத் தந்திருக்கிறார். அதை இனங்கண்டு வெளிக் கொண்டு வருவதில் தான் வெற்றி கிடைக்கிறது. 'Untapped potential' என்று ஆதார வளங்களைப் பற்றிச் சொல்வதுண்டு. அதுதான் நம்முடைய திறமைத் தேக்கத்திலும் இருக்கிறது..." என்று உறுதியாகச் சொல்கிறார் வசந்த்.

– சுப்ர.பாலன்

படம்: யோகா

# பிரபஞ்சன்

# பூக்கள் நாளையும் மலரும்

வள்ளி, தையல் எந்திரத்தில் அமர்ந்து, தலையணை உறை செய்து கொண்டிருந்தாள். இந்தக் கலை அவள் அம்மா மூலம் அவளுக்கு வந்து சேர்ந்தது. வீட்டில் சும்மா இருக்கப் பிடிக்காமல், வள்ளி நிறைய கற்றுக் கொண்டாள். அழகழகாகச் சித்திரம் போட அவளுக்கு வந்தது. இந்த உறையிலும், இரண்டு பறவைகள். ஒன்று மரக்கிளையில் அமர்ந்து கொண்டு, பறக்கும் பறவையைப் பார்த்துக் கொண்டிருந்தது. 'இது என்ன கர்நாடகமான கலை' என்று பிந்து சொன்னாள் ஒரு முறை. கலையும், சங்கீதமும் பழசாக முடியுமா என்ன? கம்ப்யூட்டர் ஓவியம் வரையுதாம். வரையட்டும். ஆனால், ஓவியனின் ஆத்மாவை எந்திரங்கள் எங்கிருந்து பெறும்? ஒரு பறவை அமைதியாக அமர்ந்திருக்க, மற்றொன்று அலைந்துகொண்டிருப்பது ஏன்? பிந்து கேட்டாள். பறக்கும் பறவைக்கு வானமே கூடு என்று சொன்னால் போச்சு. கதவு தட்டப்படும் ஓசை கேட்டது.

வள்ளி, கதவுக்குள்ளே இருந்த செயினோடு கொக்கியைப் பொருத்திக் கொண்டு, கதவைத் திறந்தாள். புதுசாக, அறிமுகம் அற்ற மனிதன் ஒருவன், கையில் ஏதோ ஒரு பார்சலோடு நின்றிருந்தான். அவன் பேசினான்.

"வணக்கம். நான் சிவம். காண்டிராக்டர். ஐயா தயவிலேதான் வாழ்ந்துகிட்டு இருக்கேம்மா. அம்மாவுக்குப் புடைவை வேணும்னு ஐயா சொன்னாங்க. அசல் காஞ்சிபுரம் பட்டும்மா. விலை ஏழாயிரத்துச் சொச்சம். இந்தாங்கோ... பிரிச்சுப் பாருங்களேன். உங்களுக்குக் கட்டாயம் பிடிக்கும்..."

வள்ளிக்கு, புசுபுசுவென்று மனசுக்குள் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. முன்னால் இருந்தவன் சிரிப்பும், சேஷ்டையும் அவள் கோபத்தை அதிகம் தூண்டி விட்டன. கதவு, ஒரு ஜாண் அளவுக்கு விரியத் திறந்து இருந்தது. அந்த இடைவெளிக்குள் அவன் புடைவை பார்சலைத் திணித்துக் கொண்டிருந்தான்.

"இதை அவரிடமே கொடுங்கள். அவர்தானே கேட்டார்."

"ஐயோ... அம்மா... இது உங்களுக்குன்னு, பண்டிகைக்குன்னு கேட்டார்."

"நான் கேக்கலை, உங்களிடம்."

அவள் கதவைச் சாத்தப் போனாள். அவன், அவளிடம் தீர்க்கமாகச் சொன்னான்.

"அம்மா... உங்க வீட்டுல இருக்கிற அலமாரி நான் கொடுத்ததுதான். ரொக்கமாக இது வரைக்கும் ஒரு லட்சம் கொடுத்திருக்கேன். அது உங்க பெட்டியிலே... சாரி... உங்க பேங்க் அக்கவுண்ட்லே இருக்கலாம். நான் வர்றேன். புடைவையை ஆபீசுக்குக் கொண்டு போக வேண்டாம்னு நினைச்சேன். பரவாயில்லை. ஐயா வந்தா சொல்லுங்கோ. நான் சிவம். வர்றேன்."

அவன் புறப்பட்டுச் சென்றான். அவன் பேச்சில் தொனித்த எச்சரிக்கை, லேசான மிரட்டல் எல்லாம் வள்ளிக்குப் புரியும்படி இருந்தது. வெட்கத்தில் அவள் உடம்பு சுருங்கியது. இது என்ன கேவலம்? முகம் தெரியாத ஒருத்தன், அவளுக்குப் புடைவை எடுத்துக் கொண்டு வந்து, இந்தா பிடி என்று வற்புறுத்துவதாவது? இவளுக்குப் புடைவை வேண்டும்

# 7

என்று இவன் கணவன் அவனிடம் சொன்னானாமே...

அவள் கதவைச் சாத்திக் கொண்டாள். மீண்டும் எந்திரத்தின் பக்கம் வந்து அமர்ந்தாள். அவன் எழுதிய பறவை, இன்னும் மேலே, மேலே என்று பறந்து கொண்டிருந்தது. யாரோ, நடுத்தெருவில் தன்னைக் கைதொட்டு இழுத்தது மாதிரி, அவமானத்தில் சாம்பிப் போனாள் வள்ளி.

அவளுக்கு யாரோடாவது இதைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் போல் இருந்தது. பிந்து மட்டும்தான் அவளுக்கு அணுக்கமானவளாக இருந்தாள். அறைக்கு வந்து புடைவையை மாற்றிக் கொண்டாள். லேசாக, முகத்தில் பவுடர் போட்டுக் கொண்டாள். கைப் பையில் சில்லறைகள் இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டாள். கதவைப் பூட்டிக் கொண்டு படி இறங்குகையில், ஜனனியின் ஞாபகம் வந்தது. அவள் வீட்டில் இருந்தால், அவளையும் அழைத்துக் கொண்டு பிந்துவைப் பார்க்கலாம் என்று தோன்றவே, ஜனனி பிளாட்டுக்குப் போனாள்.

தேவகி கதவைத் திறந்தாள்.

''சாருக்கு எப்படி இருக்கு, மாமி?'' என்று கேட்டாள், வள்ளி. கேட்டுக் கொண்டே, ஜனனியைத் தேடினாள்.

கந்தா சார் சற்றே திரும்பி வள்ளியைப் பார்த்தார். பிறகு, வழக்கம் போல் வானத்தைப் பார்க்கத் தொடங்கினார்.

''முன்னைக்கு இப்போ தேவலை. முன்னெல்லாம், யார் பேசினாலும் கேட்காது, திரும்பவே மாட்டார். இப்போ திரும்பிப் பார்க்கிறார். அந்த வரைக்கும் முன்னேற்றம்.''

பேச்சு சப்தம் கேட்டு வெளியே வந்தாள் ஜனனி. கையில் நெயில் பாலீஷ் குச்சம் இருந்தது. அதற்கென்று இருக்

கும் வாசனை கம்மென்று வந்தது.

"ஜனனி உங்க காலேஜில சேரணும்னு என் சொந்தக்காரப் பெண் ஒருத்தி வந்திருக்கா. உன்னண்டை பேசணுமாம். சித்தே வரியா?"

"போய் வாயேண்டி. சும்மா, சுவத்தை வெறிச்சுப் பார்த்துண்டு இருந்தா என்ன லாபம்? மகன் சுவத்தை. அப்பா வானத்தை. எல்லாம் என் விதி. அந்தப் பெண்ணுக்கு படிக்கிற வழியைக் காட்டு. படிக்கிற வழியை மட்டும்."

"எனக்கு இந்த மாதிரி பேச்சு பிடிக்க லைன்னு சொன்னேன் இல்லையா!"

"ரொம்ப அழகுதான் போ. என் வாயை மூடிக்கலாம். ஊர் வாயை என்ன பண்ணப் போறே. எல்லா பிளாக்கிலேயும் உன் கதை தான் படமா ஓடுது. எல்லாம் வழிச்சுண்டு சிரிக்கிறா. தேவகி பொண் வளர்த்த பெருமை யைப் பற்றி..."

"மாமி, நீங்க அதையே சும்மா பேசிக்கிட்டு இருக்க வேண்டாமே. மறந்துடுங்கோ... ஜனனி, நீ வாயேன்."

ஜனனி, நைட்டியை மாற்றிக் கொண்டு, புடைவை கட்டிக் கொண்டு வந்தாள். நிறைய இலையும் பூக்களுமான சேலை. ஒரு விரற்கடை சரிகை. முந்தானை. நவீன ஓவியம் மாதிரி அழகாக. படி இறங்கும்போது, வள்ளி கேட்டாள்.

"இது என்ன சேலை? நல்லா இருக்கே..."

அவள் மெதுவாகச் சொன்னாள்.

"இது அவர் வாங்கி வந்தது. பெங்களூரில் விற்கிறதாம். பாம்பே சரக்கு. உங்களுக்கு ஒன்று வாங்கி வரச் சொல்லட்டுமாக்கா?"

"வேணாம். வேணாம்."

"நீங்கதான் லைட் கலர் நூல் சேலையைத் தவிர வேறு டிசைன் போட்டதையே கட்டறது இல்லையே..."

**அ**ர்த்தநாரி வருத்தப்படவில்லை. அவன் கர்மயோகி. காரியத் தொடர்ச்சியும், அதற்கான முனைப்புமே அவன் கைவசம் இருந்தது. அவற்றின் எதிர்விளைவு குறித்து அவன் கவலை கொள்வதில்லை. அது பகவான் விருப்பம். கீதையை மிகவும் வித்தியாசமாகப் புரிந்து கொண்டவன் அவன். சிவன் கொண்டு வந்து கொடுத்த பட்டுப் புடைவையைத் திருப்பிக் கொடுத்தாள் வள்ளி என்பதை அவன் அறிந்ததும், திடுக்கிடவில்லை. 'இதுவும் நன்மைக்கே' என்று அவனது தத்துவ ஞானம் அவனுக்குச் சொன்னது.

அவனது மேலதிகாரி பூஷணம், சமீப காலமாக அவனைத் தொந்தரவு பண்ணிக் கொண்டிருந்தார். சிவத்துடைய காண்டிராக்டில் அவர் தொந்தரவு பண்ணத் தொடங்கி விட்டிருந்தார். திடுமென ஒரு நாள், அவன் இல்லாத நேரத்தில் 'ஸ்பாட்டுக்கு' வந்து இன்ஸ்பெக்ஷன், அது இது என்று ஆரம்பித்தார். சிமெண்ட்டே போடப்படாத கட்டடத்துக்கு எப்படி 'சாங்க்ஷன்' செய்தாய் பிஸ்லை என்று பிடித்துக் கொண்டார். அர்த்தநாரி, மற்றும் அவனைப் போன்ற அதிகாரிகள் எல்லோரும், பூஷணத்தை மிகவும் வினோதமாகப் பார்த்தார்கள். இது எந்த யுகத்து பிரகிருதி என்று தமக்குள் பேசிக் கொண்டார்கள். உண்மையில் 'டெண்டர்' விடுகிறதுக்கு முன்னமேயே, மந்திரி சொல்லிய நபருக்குத்தான் ஒப்பந்தம் கொடுக்கப்பட்டது. பத்து சதம் என்று பேச்சு. நியாயப்படிக்கு சிவம், பத்து சதத்தை அதிகாரிகளுக்கு, அவர்கள் யோக்யதைக்குத் தக்கபடி பிரித்துக் கொடுத்து இருந்தான். அதுக்குத் தக்கவிதம் காரியம் ஆற்ற வேண்டும் என்கிற அடிப்படை அறிவு கூட இல்லாமல், இது என்ன கூத்து? பூஷணம் என்கிற துள்ளுகிற மாட்டுக்கு என்ன விதம் மூக்கணாங்கயிறு போட முடியும் என்று யோசிக்கலானான். கடவுள், வள்ளியின் மனசுக்குள் புகுந்து, பட்டுப்

## அருள்வாக்கு

**ஸ**ங்கீதத்தால் சாந்தம் வரும். அதே போல சாந்த ரஸத்திலே ஸங்கீதம் தானாக நிறைந்துவிடும். இதனால்தான் ஸதாசிவ ப்ரம்மேந்திராள் போன்ற மஹாஞானிகள் கூடப் பாடியிருக்கிறார்கள். ஸங்கீதத்துக்காகவே ஸங்கீதம், அல்லது ஆத்மாவுக்காக ஸங்கீதம் என்று பாடிக் கொண்டிருந்தால்தான் நிறைந்த சாந்தம் அதிலேயே ஏற்படும். 'ஸங்கீதம் அப்யஸித்தும் அசாந்தமாயிருக்கிறதே' என்றால் மனஸ் வேறு எதையோ ஆசைப்படுகிறது என்று அர்த்தம். ஸங்கீதத்தைக் கொண்டு திரவியமோ புகழோ வேண்டும் என்ற ஆசையிருந்தால் பூர்ணபலன், அதாவது நிறைந்த சாந்தம், ஏற்படாது. அப்போதுங்கூட சில சில ஸமயங்களில் சாந்தம் உண்டாகும். தேன் எடுத்தவன் புறங்கையை நக்கிக் கொண்டு ஏதோ கொஞ்சம் ருசி பார்ப்பது மாதிரி. பாக்கி தேனை அவன் ரஸாஸ்வாதம் பண்ணுவதில்லை. அது கடைக்கு விலைக்குப் போகிறது. இப்படி ஸங்கீதத்தை விலை பண்ணுவது, அதனால் புகழ் எடுப்பது என்கிறபோது கூட வித்வான்கள் அவ்வப்போது தன்னை மறந்து பாடுகிறார்கள்; நம்மையும் 'தன்னை மறக்க'ப் பண்ணுகிறார்கள். இதிலே



கொஞ்சம் சாந்தம், ஸந்தோஷம் அடைகிறோம். தியாகையர் மாதிரி ஹ்ருதய பூர்வமாக அதிலேயே ஈடுபட்டு வேறு பிரயோஜனம் வேண்டாமென்று இருந்து விட்டால் நிறைந்த சாந்தம், பேரானந்தம் எல்லையில்லாமல் கிடைத்துவிடும். நல்ல நாதோபாஸனங்களானால் ஹ்ருதயம் புஷ்பம் போல் ம்ருதுவாகி விடும். தியாகையர், கோபால கிருஷ்ணபாரதி போன்றவர்களிடம் பழகினவர்கள், அவர்களுடைய ஹ்ருதயம் கருணையோடு மிருதுவாக இருந்தது என்று எழுதியிருக்கிறார்கள். இன்றைக்கும் உத்தமமான பாகவதர்களிடம் பழகுகிறவர்கள் அவர்களுடைய மென்மையான மனஸைப் பற்றிச் சொல்கிறார்கள்.

Music therapy - ஸங்கீதத்தால் வியாதி குணமாகிறது, பாடினால் பயிர் விளைச்சல் ஜாஸ்தியாகிறது என்றால் அதிலே அம்பாளின் ப்ரேமாம்ருதம் கலந்திருப்பதுதான் காரணம்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

புடைவையை மறுக்க வைத்திருந்தார். யாருக்காக? அவர் பக்தன் அர்த்தநாரிக்காக.

அர்த்தநாரி, பூஷணத்தின் அறைக்குள், பைல்களுடன் நுழைந்தான். எழுதிக் கொண்டிருந்த (ஸ்ரீராமஜெயம்தான்) அலுவலை முடித்துக் கொண்டு தலைநிமிர்ந்தார், பூஷணம்.

"எஸ்..." என்றார்.

"நேற்று, காஞ்சிபுரம் வரைக்கும் ஒரு வேலையாகப் போயிருந்தேன், சார்... அங்க ஒரு நண்பர். அவர் ஒரு தகவல் சொன்னார். பகவத்கீதைக்குப் புதுசா ஒரு உரை, ஒரு சேவார்த்தி பப்ளிஷ் பண்ணி இருக்காராம். ரொம்ப நூதனமான பதிப் புன்னார். உடனே, எங்க சாருக்கு ஒரு காபி வேணும்னு சொல்லி வச்சிருக்கேன், சார்."

"பேஷ்... நல்ல காரியம் பண்ணி இருக்கீர். எங்க, காஞ்சிபுரம்னா சொன்னீர்?"

"ஆமாம் சார்."

"எனக்கும் கூட காஞ்சிபுரம் போகணும். வேலை ஒழியலை."

"சாருக்கு என்ன வேலை ஆகணும்னு சொன்னாக்கா, என்னால முடிஞ்சதைப்..."

"ஒரு பர்சனல் ஒர்க். அப்புறம், மாமிக்கு ஒரு புடைவை எடுக்கணும்..."

தன் பைல்களுக்குள் கொண்டு வந்திருந்த பட்டுப் புடைவையை எடுத்து பூஷணத்தின் முன் வைத்தான் அர்த்தநாரி.

"ரெண்டு புடைவை எடுத்து வந்தேன், சார். என் 'ஒய்ப்' ஒன்னு போதும்னு சொல்லிட்டாங்க. இன்னொன்னை சாருக்குக் கொடுக்கலாம்னு எடுத்து வந்தேன். பாருங்கோ. இதெல்லாம் தெய்வ சங்கல்பம் சார். நீங்க கேட்டா எடுத்து வந்தேன்? சார் நினைக்கிறதையே நான் நினைக்கிறேன்.. ஹி...ஹி..."

பூஷணம், வெகு அபூர்வமாகவே சிரிப்பார். பூஷணத்தின், புன்னகையை முதன் முதலாகப் பார்க்கிற பேறு பெற்றான், அர்த்தநாரி. பூஷணம், அந்தப் புடைவையின் அட்டையைப் பிரித்து, அதன் சரிகை, உடம்பு, முந்தானை முதலான சங்கதிகளை ஆராய ஆரம்பித்தார்.

"நாவல்பழக் கலர். மாமிக்கு பொருந்துமோ, பொருந்தாதோ..."

"பேஷாப் பொருந்தும். மாமியும்,நல்ல கலரா இருப்பா... மாமி என்னைவிடவும் சிவப்பு, தெரியுமோ?"

"அடடே... அப்படியா? அப்படித்தானே இருக்க முடியும்? வேறு மாதிரி இருக்க முடியாதே..."

"விலை அதிகமா இருக்கும் போல இருக்கே."

"அதை விடுங்கோ... நம்ம மாமிக்குன்னு ஆன பிறகு, விலை என்ன சார் விலை. பெரிய்ய விலை?"

பூஷணம் பெரிதாகவே சிரித்தார். அனேகமாக வாழ்க்கையில் முதன் முறையாகச் சிரிப்பது போல அவர் சிரித்தார். காலம் கனிந்திருக்கிறதை நுட்பமாக உணர்ந்தான் அர்த்தநாரி.

"அந்த சிவம் கான்டிராக்ட் விஷயமான பைல் சாருக்கிட்டே இருக்கு. அந்தப் பய, பெரிய தகல்பாஜிதான் சார். ஆனா நேற்று வரைக்கும் தான். சார் டிபார்ட்மென்டுல வேலை பார்க்க வந்தப்புறம், வாலை மடக்கி சுருட்டி வைக்கச் சொல்லிட்டேன். சார், ரொம்ப ஸ்டிரைட் ஃபார்வர்ட்னு அந்த கழுதைக்குச் சொல்லிட்டேன். அவனும் 'சும்மா சொல்லக்கூடாது. முடிஞ்ச வரைக்கும், நாணயமாத்தான் இருக்கான். சார், அந்த ஃபைலைக் கிளியர் பண்ணா நல்லது..."

பூஷணம், 'அர்ஜன்ட்' என்று போட்டிருந்த அடுக்கில் இருந்து, சொல்லி வைத்தாற்போல, அந்த ஃபைலை உருவி எடுத்தார். மேலெழுந்தவாரியாக அதைப் படித்தார். முன்னால், செருகி வைக்கப்பட்டிருந்த பேனாக்களில் இருந்து ஒரு பேனாவை உருவி எடுத்துக்

## ஜாலி போட்டி — 16 முடிவு

ஊழலில் சிக்காத அந்த மூவர் :

1. வாஜ்பாயி
2. சங்மா
3. கேசரி

சரியான விடை எழுதிய பலருள் குலுக்கலில் ரூ. **5000** பரிசுபெறும் வாசகர் :

ஏ. மோசஸ்,
C/o மகாலிங்கம்,
புதுவென்மனம்புதூர்,
கடம்பத்தூர் போஸ்ட்,
திருவள்ளூர் தாலுகா,
செங்கை எம்.ஜி.ஆர். (மாவ).

வாழ்த்துக்கள்!

பி.கு : இந்தப் போட்டி அறிவிக்கும் வரை மிஸ்டர் கிளீனாகக் காட்சியளித்த கேசரி மேல் இப்போது புகார்கள் வரத் தொடங்கி விட்டன! அதற்காகப் போட்டியை கேன்ஸலா செய்துவிட முடியும்? ஹூம்!

கையெழுத்து இட்டார். அதை அர்த்தநாரியிடம் தந்தார்.

"அர்த்தநாரி."

"உத்தரவு, சார்."

"வர சனிக்கிழமை ராத்திரிக்கு இங்கேந்து புறப்படறா மாதிரி, திருப்பதிக்கு நாலு டிக்கெட் 'புக்' பண்ணு. மாமியார்க் கிழம் ஊர்லேந்து வந்து என் பிராணனை வாங்கறது. முடியுமோ இல்லையோ..."

"முடியுமோவா சார்... இந்த மாதிரியெல்லாம் பேசி என் மனசை நோகப் பண்ணலாமோ, சார்."

பூஷணம், அதற்குப் பெரிதாகச் சிரித்தார். பூஷணம் சிரிக்கிற 'மூடு'க்கு வந்திருந்தார். 'அண்ணா சாலை மேம்பாலம், அடுத்தது தேனாம்பேட்டை' என்று சொன்னால் கூட சிரித்து விடுகிற மனநிலைக்கு பூஷணம் வந்திருக்கிறதை மிகத் திருப்தியுடன் அனுபவித்தான் அர்த்தநாரி.

மனிதர்கள் எவ்வளவு சுலபமாக, எப்படியும் வளைக்க முடியுமாப் போல இருக்கிறார்கள்?

"என்ன ஜனனி. விஷயம் இவ்வளவு தூரத்துக்கு வந்துடுத்தே. படிச்ச பெண். விபரம் தெரிஞ்ச பெண். காதல் பண்றது தப்பு இல்லை. அதை, ரொம்ப ஜாக்கிரதையாக அல்லவா செய்திருக்கணும். மகாபலிபுரத்துல அறை போடற அளவுக்கு, இவ்வளவு சீக்கிரம் போகலாமோ?" என்று கேட்டாள் பிந்து. அவளது வீட்டில், அவளுக்கு முன், நாற்காலியில் அமர்ந்து கொண்டு, சிந்தனை வயப்பட்டவளாய், சடையைப் பின்னுவதும், அவிழ்ப்பதும், பிறகு பின்னுவதாகவும் இருந்தாள். அவளையே பார்த்துக் கொண்டு, சற்று கவலை தோன்ற, 'என்ன இந்தப் பெண் இந்தச் சிக்கலில் மாட்டிக் கொண்டாளே' என்கிற பாவத்தில் இருந்தாள்.

"நான் என்ன பண்ணட்டும், ஆன்ட்டி. ஆல்பர்ட் அமைதியா பேசணும்னு சொன்னான். தொந்தரவு இல்லாமே பேச மகாபலிபுரம்தான் சரியான இடம்னு சொன்னான். அதனாலதான் நான் போனேன்."

"அறைக்குள்ளேதான் பேசணுமாமோ அவனுக்கு?"

"அந்த 'பிளான்' எனக்குத் தெரியாது."

"சரி, டீயைக்குடி. ஆறிடப் போகுது."

ஜனனி டீ கோப்பையை எடுத்து 'மடக் மடக்' என்று முடித்தாள்.

பிந்து குனிந்து ஜனனியிடம் கேட்டாள்.

"ஒன்றும் ஆயிடலையே?"

ஜனனி, தலையைக் கவிழ்த்துக் கொண்டு தரையைப் பார்த்துக் கொண்டு இருந்தாள். அவளது இதழ்கள், துடித்தன. மேற்பற்களால் அடி உதட்டைக் கடித்துக் கொண்டாள். அவள் கண்களில் இருந்து இரு சொட்டுகள், அவள் சேலைமேல் விழுந்தன.

"போகட்டும்.... அதுக்குப் பிறகு, ஆல்பர்ட்டைப் பார்த்தியா?"

"இல்லை ஆன்ட்டி, எங்கே, வீட்டை விட்டே வெளியே போக முடியல்லையே... அம்மா அனுமதிக்க மாட்டாளே..."

"இப்படி இருந்துடக் கூடாதுடி. சினிமா பார்த்தோம், வீட்டுக்குப் போனோம்னு இருக்கிற சங்கதி இல்லை இது. அடிக்கடி தண்ணீர் ஊற்றி வளர்க்கிற பயிர், காதல். ஆல்பர்ட்டை நீ அடிக்கடி சந்திக்கணும்."

"எனக்கும் அவனைப் பார்க்கணும்போல இருக்கு, ஆன்ட்டி."

பிந்து யோசித்தாள்.

"என் வீட்டுக்கு நீ வரலாம். அவனையும் வரச் சொல்லலாம். ஆனா, உன் அம்மாட்ட, என் வீட்டுக்கு போறேன்னா, அனுமதிக்க மாட்டாள். அதனால..."

"என் வீட்டுக்கு அவனை வரச் சொல்லேன்" என்றாள் ஜனனி.

"நல்ல யோசனை" என்றாள் பிந்து. தொடர்ந்து சொன்னாள்.

"அவன் அட்ரஸைக்கொடு... நானே அவனைப் பார்த்து ஏற்பாடு பண்றேன்."

ஜனனி கொடுத்த முகவரியை வாங்கிக் கொண்டு, பிந்து மறுநாளே, ஆல்பர்ட்டைப் பார்க்கச் சென்றாள். நிலைமை, சுலபமாக இருக்கவில்லை, பிந்துவுக்கு.

(தொடரும்)

ஒரு நூலைப் படித்து முடித்தவுடன், அழுத்தமான மௌனத்தில் நம்மை அது ஆழ்த்திவிட்டாலோ, பல்வகைச் சிந்தனை வலைப் பின்னலுக்குள் நம்மைச் சிக்க வைத்து விட்டாலோ, 'கண்டறியாதன கண்டோம்' என்ற களிப்பில் நம்மை மிதக்க வைத்து விட்டாலோ- அந்த நூல் ஒரு சிறந்த நூல். இந்த மூன்று நிலைகளையுமே ஒரு நூல் நம்மில் ஏற்படுத்தி விடுமானால் அதை என்னவென்று சொல்வது...?

பேராசிரியர் அ.ச.ஞானசம்பந்தன் அவர்களின் 'கம்பன் கலை' என்ற நூலைப் படித்து முடித்ததும் மேற்குறித்த மூவகை நிலைகளுக்கும் ஆட்பட நேர்ந்தது. கம்பனின் இராம காதையில் மூழ்கி முத்தெடுக்கும் பேராசிரியர் அவர்கள், காப்பியத்துள் ஆழ்ந்திருக்கும் கவியுள்ளத்தையும் கண்டு (உ)வந்து நம்முடன் தம் அனுபவத்தைப் பகிர்ந்து கொண்டிருக்கிறார்.

இராமனுக்கு உடன் பிறந்த சகோதரர்கள் மூவர். உடன் பிறவாச் சகோதரர்கள் மூவர். பயன் கருதாததும், தோன்றும் பொழுதே முழுதாகத் தோன்றியதுமான அன்புடைய குகன். பிறவிப் பிணி நீங்கவும், பரம்பொருளை முழுதுணரவும் பக்தியைச் சாதனமாகக் கொண்ட வீடணன். பக்தியும் சந்தேகமுமாய் ஒரு சாதாரண மனித நிலையில் நின்று தொடக்கத்தில் இராமனைப் பற்றி நினைத்த சுக்ரீவன். இந்த மூவரையும் நமக்கு இனம் காட்டி, பக்தி, ஞானம் கர்மம் இவற்றில் எதனைப் பின்பற்றினாலும் இறையருளைப் பெறலாம் என்று கம்பன் நிறுவுவதை, 'தம்பியர் மூவர் ஏன்?' என்ற கட்டுரை சிந்திக்கிறது. இதன் தொடர்ச்சியான அடுத்த கட்டுரையில், அன்பே வடிவான குகனுக்கும், அறிவே வடிவான வீடணனுக்கும் இடை நிலையில் உள்ள நம் பிரதிநிதி போன்ற சுக்ரீவனுக்கும் சமமான இடம் தரும் பரம்பொருளின் இயல்பு விவரிக்கப்படுகிறது.

தேர்வலானும் அமைச்சனுமான சுமந்திரன் என்ற பாத்திரத்தை அன்பு மயமான தாய்மைக் குணத்துடனும் அரசியல் அறம் காப்பவனாகவும் கம்பன் படைத்திருப்பதை மிக விளக்கமாக ஒரு கட்டுரை பேசுகிறது.

அன்பும் பரிவும் மட்டுமே கொண்டு, தன்னையே இராமனுடன் ஐக்கியப்படுத்திக் கொண்டு விட்ட குகனை, தன்னைக் காண வந்த முனிபுங்கவர்களை விடவும் சிறந்தவனாக எண்ணிய இராமன், முனிவர்களைப் பார்த்து முறுவலித்த காரணத்தை விளக்கும் பாங்கு நம்மை வியக்க வைக்கிறது.

கம்பன் கண்ட அறம், கம்பன் கண்ட புலன் அடக்கம் ஆகிய கட்டுரைகள், இராம காதை மூலம் கம்பன் அறிவுறுத்தும் நன்னெறிகளைப் பற்றி, சுவையாக நம்முடன் உரையாடுகின்றன.

சரணாகதி அடைந்த வீடணனை இராமன் ஏற்றுக் கொள்வதா வேண்டாமா என்பதற்கு, ஒரு பட்டி மண்டபமே நடந்த பொழுது. இராமன் தன் சொல் இறந்தால்- அறவுணர்வால் துணிவுடன் மேற்கொண்ட முடிவு பற்றிக் கூறிய கம்பனை ஒரு வழக்கறிஞராகக் காட்டுகிறார் ஆசிரியர்.

'தீக்குளித்தது ஏன்?' என்று ஒரு கட்டுரை. மாயமானின் பொய்க் குரல் கேட்டு, இலக்குவனை மனம் நோகப் பேசி விரட்டித் தன்னைத் தனிமைப் படுத்தி, இராவணன் தன்னைத் தூக்கி வரத் தானே காரணமாகி விட்ட குற்ற உணர்வினால் பாதிக்கப்

## தீக்குளித்தது ஏன்?

பட்டிருக்கிறாள் சீதை. அவளது மனநோயைப் போக்க, இராமன் என்ற மருத்துவன் மேற்கொண்ட சிகிச்சைதான் அவளைத் தீக் குளிக்க வைக்க இராமன் ஆடிய நாடகம் என்று ஆசிரியர் நிறுவுவது புதுமையான சிந்தனை!

அழகான தமிழ் நடை. பெரும்பாலும் பாத்திரப் படைப்புகளைப் பற்றிப் பேசியே கம்பனின் விசுவரூபத்தைத் தரிசிக்க வைத்திருக்கிறார் அ.ச.ஞா.

இலக்கிய ரசிகர்களுக்கு இந்நூல் ஒரு வரப்பிரசாதம்!

**- நா.சீ. வரதராஜன்**




*'கம்பன் கலை'/ அ.ச. ஞானசம்பந்தன்/கங்கை புத்தக நிலையம்/தி.நகர்/ சென்னை - 17.*
*விலை ரூ.45/-*

**படித்ததில் பிடித்தது**

# வட்டமேஜை

## எழுச்சி மிகுந்த தலையங்கம்!

✉ இளந்தளிர் நாவரசு மரணம் குறித்து, இதயம் கொதித்து நீங்கள் எழுதியிருக்கும் தலையங்கத்தில் தென்படுபவை வெறும் மசி வார்த்தைகள் அல்ல. அனலில் குளித்தெழுந்த கனல் கங்குகள் அவை! இன்றைய கல்விச் சூழலையும், மருத்துவக் கல்லூரிக்கு மாணவர்களைத் தேர்வு செய்யும் முறையையும் துணிச்சலாய் இடித்துக் காட்டியுள்ளீர்கள். சிந்தனையைத் தூண்டவல்ல எழுச்சிமிகுந்த தலையங்கம் அது. பாராட்டுக்களைப் பிடியுங்கள்!

மதுரை-14, எஸ். வைத்தியநாதன்.

✉ எல்லோரும் ராகிங் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்க, தாங்கள் வேறு கோணத்தில் சிந்தித்து, நல்ல தலையங்கம் தீட்டி விட்டீர்கள். பணத்துக்கு மட்டும் மதிப்பு கொடுத்து கல்லூரிகளில் அனுமதிப்பதை முதலில் தடை செய்ய வேண்டும். நல்ல படிப்புக்கும், ஒழுக்கத்திற்கும் மட்டுமே முன்னுரிமை அளித்தால் தான் இப்பிரச்னை முடிவுக்கு வரும்.

விபீஷணபுரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ 'தேச விரோத மாநாடு' தலையங்கம் கண்டேன். ராஜீவின் உதிரத்தைத் தமிழ் மண்ணில் குடித்த புலிகளுக்கு ஆதரவு அளிப்பதும் அதற்கு ஆள் திரட்டி மாநாடு நடத்துவதும் மன்னிக்கக் கூடிய செயலல்ல!

சென்னை-11, ந. தெய்வமணி.

✉ 'போட்டோ எடுப்பது இவ்வளவு சுலபமா?' என்று வியக்கும் வகையில் ஏராளமான விஷயங்களை டிப்ஸ்"டன் வழங்கியமைக்கு, நன்றி!

மன்னார்புரம், அ. அனீஸ் ஃபாத்திமா.

✉ போட்டோ எடுப்பதில் உள்ள நெளிவு, சுளிவுகளை நன்றாகப் புரிந்து கொள்ள வைத்தது கட்டுரை. மேலும் இந்தியாவில் மட்டும் ஆண்டொன்றுக்கு நான்கு கோடி பிலிம் ரோல்களில் படம் எடுக்கப்படுகிறது என்ற தகவல் வியப்பைத் தந்தது.

காப்பரத்தாம்பட்டி, கே. ராஜா திருவேங்கடம்.

✉ "எந்த உறவுமில்லாதபோதே, உடன்பிறவா சகோதரி என்று கூறிக் கொண்டு வசதிகளை அனுபவிப்பவர்கள் மத்தியில், பிரதமரின் மனைவியாக இருந்தும், பரிசு எதுவும் ஏற்க மறுத்த திருமதி லலிதா சாஸ்திரி பற்றிய செய்தி, நெகிழ்த்தியது.

மதுரை-10, என். சம்பத்.

✉ ஆடைக்குறைப்பே பிரதானமாகிப் போன தமிழ் சினிமா சூழலில், அர்ச்சனா போன்ற திறமையான நடிகைகள் ஒதுங்கியிருப்பதில் வியப்பொன்றுமில்லை... இதனால் இழப்பு தமிழ் சினிமாவிற்குத்தானே தவிர இவரைப் போன்ற கலைஞர்களுக்கல்ல...! 'அடுத்த தமிழ்ப் படம் எப்போதென்று எனக்கே தெரியாது' என்ற பதிலில் தெரிந்தது அவரது விரக்தி மட்டுமல்ல, தமிழ் சினிமாவின் அவலமும்தான்...

கன்னிப்பாடி, கே. ஸ்டாலின்.

✉ அலெக்சாண்டர் படத்திற்கு எழுதி இருக்கும் விமர்சனம் நியாயமானதும், நடுநிலைமையானதுமாகும். உண்மையிலேயே மலையோர நடனம் படத்தின் தரத்தையே கெடுக்கிறது. இந்தக் குறையைச் சுட்டிக் காட்டியிருக்கும் உங்களது விமர்சனத்துக்கு எனது பாராட்டுக்கள்!

விழுப்புரம்-2, வை. வெங்கடேசன்.

✉ கிழித்துப் போடப்பட்டு, தெருவுக்கு வந்து விட்ட கல்கியின் காகிதத்துக்குக்கூட ஒரு கவிஞரை உருவாக்கும் வீரியம் உண்டோ? அடடா! ஒரு மனிதனுக்குள் இருந்த அற்புதமான கவிஞனை கிளர்ந்தெழச் செய்து, மேடை தந்து, பரிசு தந்து, நல்ல அறிமுகமும் செய்து விட்ட கல்கியின் பணிக்குப் பாராட்டுக்கள்.

கிழக்குவலசு, கே. பாலமுருகன்.

✉ 'கல்கி' நவம்பர் 24 இதழ் கேள்வி-பதில் பகுதியில் "தமிழகத்தில் த.மா.கா.வைத் தவிர வேறு காங்கிரஸ் இல்லை என்று வாழப்பாடி கூறியிருப்பது பற்றி...?" என்று ஒரு கேள்வியும் அதற்கான தாராக பதிலும் இடம் பெற்றுள்ளன. இந்தக் கேள்வி-பதில் தலைவர் வாழப்பாடி இராமமூர்த்தி அவர்கள் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டது. இதுபோன்று அவர் எங்கும், எப்போதும் கருத்து வெளியிடவில்லை என்று திட்டவட்டமாக மறுப்புத் தெரிவிக்கிறார்.

சென்னை-34, இ.சு. கிள்ளிவளவன்.

## இன்டர்நெட்டில் பிடித்தவை



# எஸ்.வி.சேகரின் 'பந்த்' வாழ்த்துக்கள்!

அவசரமாகப் பூட்டு சாவி தேடுகிற ஃபைனான்ஸ் கம்பெனி நிர்வாகி போல அரக்கப் பரக்க மேஜையைக் குடைந்து கொண்டிருந்தான் அச்வின்.

"கிடைச்சுடுத்து" என்று பழைய பஸ் டிக்கட்டை எடுத்து, பின்னால் திருப்பிப் பார்த்துக் கம்ப்யூட்டரில் அவன் கொடுத்த இன்டர்நெட் விலாசம் - http.'/www.nd.proscom/svshekar/'

"தமிழ்நாடக ரசிகப்பெருமக்களுக்கு என் அன்பு கலந்த வணக்கங்கள்" என்று கம்ப்யூட்டரிலிருந்து நம்மை வரவேற்கும் மிகவும் பரிச்சயமான குரல்- அட, நம்ம எஸ்.வி.சேகர்தான்!

அவர் நாடகம் போல, எடுத்த எடுப்பிலேயே களைகட்டி விட்டது எஸ்.வி.சேகர் தகவல் வீடும்.

"எல்லோருக்கும் என் அன்பான தீபாவளி, போகி, ரம்ஜான், கிறிஸ்துமஸ், எதிர்க்கட்சி பந்த், ஆளுங்கட்சி பந்த்... வாழ்த்துக்கள்" என்று ஒரு பண்டிகை, விடுமுறை நாள் விடாமல் லிஸ்ட் போட்டு வாழ்த்துச் சொல்கிறார் சேகர்.

"எல்லோரும் இதே டெக்னிக்கைக் கையாண்டால், வாழ்த்து அட்டை விக்கறவங்க பொழைப்புலே மண்ணுதான்..."

அச்வின் தகவல் பக்கத்தில் மேலும் நகர, "எஸ்.வி.சேகரின் விசிறியாகத் தகவல் வீட்டில் நுழைந்த மூவாயிரத்து எண்பத்தொன்பதாவது நபர் நீங்கள்" என்று அறிவித்துவிட்டு, உங்கள் விருப்பம் கேட்டார்கள்-சேகரின் நாடகத் தோரணங்களிலிருந்து உதிர்த்துப் போட்டு வைத்த ஒலி-ஒளித் துணுக்குகள், - அடுத்து-

நான் 'வீடியோ' வைத் தேர்ந்தெடுத்தேன். வரிசையாகத் திரையில் பளிச்சிடும் நாடகப் பெயர்கள். 'ஆயிரம் தலை வாங்கிய அபூர்வ சிகாமணி'யை நோக்கி அச்வின் சுண்டுவிரல் நீட்டினான்.

கம்ப்யூட்டர் திரையில், நாடகக் கதாநாயகியிடம் அசடு வழிந்தபடி முறையிடுகிற சேகர்- "விளையாடாதீங்க... பஸ் ஸ்டாப்புலே ஆம்பளை கையிலே தகராறு பண்றீங்களே... (நம்மைப் பார்த்துக் கையைக் காட்டுகிறார் - நாடகம் பார்க்கிறவர்களின் அசலான சிரிப்பு சத்தம் - பாரு... எவ்வளவு பேர் இப்படி பாதிக்கப்பட்டிருக்காங்க...."

ஒலித்துணுக்குகளைப் பார்க்கப் போனோம்.

"உட்கார்ந்தா குத்துதே... ஐயோ... வால் முளைக்கறது போல இருக்கே..."

'வால் பையன்' நாடகத்தில் சேகரின் அலறல் பாதியில் நின்றது.

"அப்புறம் என்ன ஆகும்?" அச்வினிடம் கேட்டேன்.

"மீதியை நாடகமேடையில் காண்க... வெளிநாட்டுத் தமிழர்கள் அவங்க அவங்க ஊர்லே கூப்பிட்டு நாடகம் நடத்தச் சொல்லிப் பார்த்துக்கலாம்... இப்படி இன்டர்நெட்டிலே போட்டதே முக்கியமா அவங்களுக்குத்தானே...."

தகவல் வீட்டில், 'தொண்டு' என்று போட்ட போர்ஷனில் நுழைய, சின்னதாக சுகமகரிஷி கோயில் படம். என்ன ஏது என்ற விவரத்தை வெளிநாடு போயிருக்கும் சேகர் திரும்பி வந்துதான் சொல்ல வேண்டும்.

"இவ்வளவு தூரம் வந்துவிட்டு விசிட்டர் பக்கத்துலே கையெழுத்துப் போடாம இருக்கலாமா?"

'மூவாயிரத்து ஐந்நூறு மேடையேற்றம் கண்டதற்கு கல்கி வாசகர்கள் சார்பில் வாழ்த்துக்கள்' என்று ஈமெயில் அனுப்பிவிட்டு அச்வின் திருப்தியுடன் சொன்னான்-"இவ்வளவு சிறப்பா இன்டர்நெட்டுலே தகவல் வீடு கட்டிய முதல் தமிழ்... ஏன்... முதல் இந்திய நடிகர் எஸ்.வி.சேகர்தான்"

ரியல் ஆடியோ, மைக்ரோசாப்ட் வீடியோ என்ற மென்பொருட்கள் இருந்தால் முழுமையாக ரசிக்க முடியும் இந்தத் தகவல் வீட்டில், திரையில் எழுதிக் காட்டப்படும் விவரங்கள் ஆங்கிலத்தில்தான்-முதல் பக்கம் தவிர. சேகர் 'அல்வா' (அடுத்த நாடகம்) கொடுக்கும்போது, எல்லாமே தமிழாகி இருக்கும்!

**— இரா.முருகன்,**

இன்டர்நெட் கம்ப்யூட்டர் உதவி : SAP COUMPUTER PVT Ltd, Chennai-17



• சரவணன்

# கார்ட்டூன்

ஒருபடம் அல்லது இரண்டு, மூன்று படங்களுக்கு யாரிடமாவது உதவியாளராகப் பணிபுரிந்துவிட்டு, சொந்தமாக இயக்க வந்து விடுகிறவர்கள்தான் இன்று அதிகம். ஆனால் எட்டு வருடங்களுக்கு மேலாக இயக்குநர் பாலசந்தரிடம் உதவி இயக்குநராகப் பயின்றுவிட்டு, தற்போது வெளியே வந்திருக்கிறார் ஓர் இளைஞர். பெயர், சரவணன். அஜீத்குமாருடன் ஓர் அஸ்ஸாமியப் புதுமுகம் ஹீரோயினாக நடிக்க, தமது 'காதல் மன்னனை'த் தொடங்கியிருக்கும் சரவணனுடன் ஒரு பேட்டி:

**"சரவணன், எட்டு வருடங்கள் ஒரே இயக்குநரிடம் உதவியாளராக இருந்தவர்கள் ஃபீல்டில் அதிகம் பேர் இருக்க மாட்டார்கள். உங்கள் அனுபவங்களைச் சொல்லுங்கள்."**

"பாலசந்தர் சாரிடமே எனக்கு முன் வஸந்த் குமார் ஒன்பது வருடங்கள் இருந்திருக்கிறார். அவருக்கு முன்னால் அமீர்ஜான்... பொதுவாக ஓர் இயக்குநரிடம் உதவியாளராகச் சேரும்போது எல்லாருக்குமே ஓரிரு வருடங்களில் தாமும் இயக்குநராகி விட வேண்டும் என்கிற எண்ணம் தான் இருக்கும். ஆனால் இவர் விஷயத்தில் கதையே வேறு. இவரிடம் சேரும்போது எனக்கும் அப்படியொரு எண்ணம்தான் இருந்தது. ஆனால் இவரிடம் கற்றுக் கொள்வதில் ஒரு தனிரக சுகம் உண்டு. 'இதுதான் எல்லை. இதற்குமேல் கற்றுக் கொள்ள ஏதுமில்லை' என்று தோன்றவே தோன்றாது. ஒவ்வொரு நாளும் புதுப்புது விஷயங்களை அறிமுகப்படுத்துவார். சினிமாவை ஒரு தொழிலாக அல்லாமல் கலையாகப் பயிலுகிற எண்ணம் மட்டும் இருந்தால், அவரிடம் சேர்ந்த பிறகு விலக மனமே வராது. சொல்லப்போனால், கடந்த ஜூன் மாதம் அவர் 'கல்கி'படம் ஆரம்பிப்பதற்கு முன்னாலேயே எனக்கு இந்தக் 'காதல் மன்னன்' கமிட் ஆகி விட்டது. ஆனால் அவரிடம் எப்படிச் சொல்வது என்று தெரியாமலேயே கல்கி படம் முடிகிற வரை தவித்துக் கொண்டிருந்தேன்."



• சரண் வரைந்த கார்ட்டூன்

**"பிறகு எப்படிச் சொன்னீர்கள்?"**

"படம் முடிந்து, பத்திரிகையாளர் காட்சி நடத்த அன்று மாலை. நீங்கள் கூட ஒரு கலந்துரையாடல் நிகழ்ச்சி ஏற்பாடு செய்திருந்தீர்களே, அன்று மாலைதான். அலுவலகத்திலிருந்து அவர் கிளம்பியபோது, தயங்கித் தயங்கி, 'சார், உங்களிடம் ஒரு பத்து நிமிஷம் பேசவேண்டும். நீங்கள் வீட்டுக்குப் போங்கள். பின்னாலேயே நானும் வருகிறேன்' என்றேன். 'என்னோடே காரில் வந்து விடேன்' என்றார். 'இல்லை சார். நீங்கள் போங்கள். நான் பின்னால் வருகிறேன்' என்று வலுக்கட்டாயமாக அவரை முதலில் அனுப்பி வைத்துவிட்டு, நான் பின்னால் போனேன். எட்டு வருடங்கள்! தந்தை-மகன் மாதிரிப் பழகி இருந்தோம் நாங்கள். கவிதாலயா நிறுவனம், அவர் குடும்பம் இவற்றுள் என்னையும் ஒரு நிரந்தர உறுப்பினராகவே ஏற்றுக் கொண்டிருந்தார் அவர். எப்படிச் சொல்வது, உங்களை விட்டுப் போகிறேன் என்று! அவர் அதை எப்படி எதிர்கொள்வார்? இந்தத் தயக்கமும் பயமும் எனக்கு இருந்தது.

"அவர் வீட்டுக்குப் போய், அவரது தனி

அறையில் சந்தித்து ஒருவாறு தயங்கியபடி விஷயத்தைச் சொன்னேன். 'நல்ல விஷயம் தானே? சிறப்பாகச் செய். ஏதாவது உதவி வேண்டுமென்றால் என்னைக் கேட்கத் தயங்காதே' என்றார். நான் நெகிழ்ந்து போய்விட்டேன். நான் அவருக்குக் கார்ட்டூன் அனுப்பிக் கவர்ந்து, இணைந்த நாள் முதல் அந்த விடைபெறும் நிமிஷம் வரை நடந்த எத்தனையோ சம்பவங்களை அந்த இரவு முழுக்க அசைபோட்டுக் கொண்டே இருந்தேன்."

**"அது என்ன கார்ட்டூன் அனுப்பிக் கவர்ந்த சம்பவம்?"**

"அப்போது நான் ஆர்ட்ஸ் காலேஜில் படிப்பை முடித்திருந்தேன். நம் வாழ்க்கை சினிமாதான்; சேர்ந்தால் பாலசந்தரிடம்தான் சேர்வது என்று முடிவெடுத்து விட்டு, எப்படி முயற்சிப்பது என்று யோசித்துக் கொண்டிருந்தேன். அவரிடம் கலை இயக்குநராகப் பணியாற்றிக் கொண்டிருந்த மோகனா எனக்குத் தெரிந்தவர். அவர் மூலமாக பாலசந்தரை சந்திக்கும் வாய்ப்பு பெற்று, என் விருப்பத்தைச் சொன்னேன். கொஞ்ச நேரம் இன்டர்வியு மாதிரி சில கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்தார். பிறகு, 'போய்வா; பிறகு சொல்லி அனுப்புகிறேன்' என்று அனுப்பி விட்டார். அப்போது அவர் கமலஹாசனை வைத்து, 'உன்னால் முடியும் தம்பி' ஆரம்பித்திருந்த சமயம். கூப்பிடுவார், கூப்பிடுவார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ம்ஹூம்! சரி, வேறு ஏதாவது வழியில் அவர் கவனத்தைக் கவரலாம் என்று முடிவு செய்தேன். எனக்குச் சுமாராக கார்ட்டூன் போட வரும். 'நான் இப்போதும் சினிமாவின் மாணவன் தான்' என்று அவர் ஒருதரம் சொன்னதை மனத்தில் கொண்டு, பாலசந்தரையே ஒரு பள்ளி மாணவனாகப் படம் வரைந்து, அவர் சொன்னதையே கமென்ட்டாக எழுதி, அவருக்கே அனுப்பி வைத்தேன்! தொடர்ந்து அதே மாதிரி வேறு பல கார்ட்டூன்களை - அவரையே ஹீரோவாக வைத்து வரைந்து அனுப்பிக் கொண்டே இருந்தேன். அவர் அந்த கார்ட்டூன்களை ரசித்தாரா, கோபம் கொண்டாரா என்று அப்போது எனக்குத் தெரியாது. அது பற்றி நான் கவலைப்படவும் இல்லை. ஆனால் தொடர்ந்து அவர் பக்கத்திலிருந்து எவ்வித ரியாக்ஷனும் இல்லாததுதான் எனக்குக் கவலையாகிவிட்டது. இறுதியாக ஒரு முயற்சி பண்ணிப் பார்த்துவிடுவது என்று முடிவு செய்தேன். சினிமாத் தனமான

# விடு ஜூட்!

ஐடியாதான்! இப்போது நினைத்தால் குழந்தைத் தனமாகவும் தோன்றுகிறது.

"ஒரு கோர்ட் சீன் ஒன்றைக் கற்பனையில் வடித்தேன். நீதிபதி இருக்கையில் அவரை உட்காரவைத்து விட்டு, குற்றவாளிக் கூண்டில் என்னை வரைந்து கொண்டேன். எனக்கு நானே ஒரு வாயரையும் ஏற்பாடு செய்து கொண்டு, 'யுவர் ஆனர், என் கட்சிக்காரரை நீங்கள் நிராகரிக்க என்ன காரணம்' என்று புலம்பலாகத் தொடங்கி, என்னென்ன காரணங்களுக்காக என்னை அவரோடு இணைத்துக் கொள்ளலாம் என்று விவரித்து, கடைசியில் அந்த லாயரின் தனிப்பட்ட வேண்டுகோளாக வாதத்தை முடித்து, தீர்ப்புக்காகக் காத்திருப்பதாகச் சொல்லி, 'டிராமா'வை எழுதி முடித்தேன்.

"எழுதியதை எடுத்துக் கொண்டு அவர் வீட்டுக்குப் போனேன். அவர் இல்லை. தோட்டக்காரரிடம் கடிதத்தைக் கொடுத்து, அவர் வந்தால் சேர்த்துவிடும்படிச் சொல்லி விட்டு, நேரே மோகனாவின் அலுவலகத்துக்குப் போய் விட்டேன்.

"நான் உள்ளே நுழையவும் டெலிபோன் அடிக்கவும் சரியாக இருந்தது. எத்தனையோ டெலிபோன்கள் வரலாம். ஆனால் எனக்கென்னவோ மனத்தில் பட்டு விட்டது. 'இந்த கால் அவரிடமிருந்துதான்'. மோகனா போனை எடுத்தார். இதை டெலிபதி என்பதா? இன்ட்யூஷன் என்பதா? கே.பி.சார்தான் போனில் பேசினார்.

" 'சரவணன், உன்னை சார் வரச் சொன்னார்' என்று மோகனா சொன்னதுமே எனக்குப் புரிந்து விட்டது. என் முயற்சிகளுக்கெல்லாம் பலனாக, புதுப்புது அர்த்தங்களை அவர் தொடங்கியபோது உதவி இயக்குநராக என்னைச் சேர்த்துக் கொண்டு விட்டார்."

**"சினிமாவில் சேர்ந்த பின் பத்திரிகைகளிலும் கார்ட்டூன் வரையத் தொடங்கினீர்கள் இல்லையா? எப்படிச் சமாளித்தீர்கள் இரண்டையும்?"**

"மிகவும் கஷ்டப்பட்டேன். விகடனில் தொடர்ந்து கார்ட்டூன் வரையும் வாய்ப்பை நானே தேடிப்போய் தான் வாங்கினேன். ஆனால் இரவு இரண்டு மணி வரை ஷூட்டிங் இருக்கும். கண்கள் சுழல, வீடு வந்தால், காலை கார்ட்டூன்கள் கேட்டு அவசரமாக மேட்டர் வந்திருக்கும். 'சினிமா தான் நம் லட்சியம். எதற்காக கார்ட்டூன் வரைந்து நேரத்தை வீணாக்குவது' என்று தோன்றியதுண்டு. ஆனால் ஜூனியர் போஸ்டில் 'படக்கதையாக நிஜ செய்தி' என்றொரு பகுதி அப்போது வந்து கொண்டிருந்தது. ஒரு சம்பவத்தை விஷுவலாக்குகிற அந்த

'கார்ட்டூன் காலம்'- எனக்கு, பின்னால் திரைக்கதை எழுதிப் பழக மிகவும் உதவிகரமாக இருந்தது."

**"அப்படியும் நடுவில் கொஞ்ச நாள் விகடனில் 'சரண் கார்ட்டூன்கள்' காணவில்லையே? கே.பி.க்கும் விகடனுக்கும் இடையே நடந்த பனிப்போர் காரணமா?"**

"நிச்சயமாக இல்லை. இந்த விஷயத்தில் இரண்டுபேருமே என்னிடம் மிகப் பெருந்தன்மையாக நடந்து கொண்டார்கள். 'சரவணன், எனக்கும் விகடனுக்கும் சண்டை என்பதால் நீ அதில் வரைவதை நிறுத்தி விட வேண்டாம். அவர்கள் கேட்டால் தாராளமாக வரைந்து கொடு' என்று என் இயக்குநர் சொன்னார். விகடனும் எனக்குக் கார்ட்டூன் வரையும் வாய்ப்பை மறுக்கவில்லை. நடுவில் நான் காணாமல் போனதற்கு, நேரமின்மை தான் காரணம். பொதுவாக உதவி இயக்குநர்களின் பணி, படம் முடிவதோடு நிறைவடைந்துவிடும். ஆனால் கவிதாலயாவில் நான் பப்ளிசிட்டி சைடிலும் கவனம் செலுத்தினேன். வித்தியாசமான பத்திரிகை விளம்பரங்களுக்காக மூளையைக் கசக்கிக் கொள்வது எனக்குப் பிடித்த விஷயம்.

"டைரக்டர் சார் வானமே எல்லை படம் எடுத்து முடித்த சமயம். அந்தப் படத்தின் மையக்கருத்தைப் பிரதிபலிக்கும் வகையில் ஒரு லோகோ- டைட்டிலுடன் இணைத்து வெளியிட்டால் சிறப்பாக இருக்குமே என்று நினைத்தார். நான் மவுண்ட் ரோடு பழைய புத்தகக் கடைகளில் தவமிருந்தேன். ஏதாவது ஒரு ஐடியா எதிலாவது கிடைக்காதா என்று. ஒரு வெளிநாட்டு இதழில் நான் நினைத்தபடி ஒரு படம் இருந்தது. மூலைகளில் கருகிய தாள்கள்... வாழ்க்கை வெறுத்து, தற்கொலைக்குத் தயாராகிற இளைஞர்களைப் பற்றிய படம் என்பதால் அந்த லோகோ பொருத்தமாக இருக்கும் என்று தோன்றி, இயக்குநரிடம் கொண்டு காட்டினேன். அவரும் அதை ஆமோதிக்க, படத்துக்கும் அதுவே சின்னமாயிற்று! டைட்டிலுடன் ஒரு சின்னம் இணைத்து வெளியிடுகிற வழக்கம் அப்போது தொடங்கியதுதான். இரண்டு வருட காலம், வெளியான அத்தனை படங்களிலும் இந்த உத்தி அப்போது பின்பற்றப்பட்டது."

**"உங்கள் படத்துக்குக் 'காதல் மன்னன்' என்று பெயர் வைத்திருக்கிறீர்களே, ஒரு வேளை அஜீத்குமார் ஹீரோ என்பதாலா?"**

"ஐயோ, அதெல்லாமில்லை. அஜீத் விவகாரமெல்லாம் இப்போது வந்தது தானே. இந்த டைட்டில் ஒரு வருடம் முன்பு வைக்கப்பட்டது. முப்பது வருடங்களுக்கு முன்னால் ஜெமினிகணேசனால் அறிமுகமாக்கப்பட்ட ஒரு சொல். மக்களுக்குப் பரிச்சயமான பெயர். அதனால் தான் இதை டைட்டிலாக வைத்தேன்."

**"படத்தில் விவேக் உங்களின் உதவி இயக்குநராகப் பணியாற்றுகிறார் என்று கேள்விப்பட்டேன்?"**

"ஆமாம். விவேக் ஒரு நகைச்சுவை நடிகராக மக்களுக்கு அறிமுகமாகி இருந்தாலும் அவருக்குள் ஓர் அற்புதமான கதாசிரியர், இயக்குநர் இருக்கிறார். நாங்கள் இருவருமே பாலசந்தரிடம் படித்தவர்கள். படிக்கிற காலத்திலேயே எங்களுக்குள் ஓர் ஒப்பந்தம் போட்டுக் கொண்டோம். யார் முதலில் இயக்குநரானாலும் அடுத்தவரை இணை இயக்குநராகச் சேர்த்துக் கொள்வது என்று. அதன்படி இந்தப் படத்தில் விவேக் என் இணை இயக்குநர்."

**"கடைசியாக ஒரு விஷயம். பாலசந்தர் பெரிய இயக்குநர்தான். ஆனால் அவரிடமிருந்து வந்தவர்கள் பெரும்பாலும் குறிப்பிடத்தகுந்த வெற்றிகாணவில்லை, இயக்குநராக. வஸந்தை வேண்டுமானால் விதிவிலக்காகச் சொல்லலாம். இதற்கு என்ன காரணம் என்று எப்போதாவது யோசித்திருக்கிறீர்களா?"**

"ஒரே காரணம் தான். அவரை ஃபாலோ பண்ணுவது ரொம்பக் கஷ்டம். அவரது சிந்தனை, செயல் இவற்றின் வேகம் மிக அதிகம். புலிவால் பிடிக்கிறமாதிரி அவரைப் பற்றிக் கொண்டு, அவர் வேகத்துக்கு ஈடு கொடுத்து நாமும் ஓடினால்தான் ஓரளவாவது கற்றுக் கொள்ள முடியும். பலர் முயன்று முடியாமல் போனதன் காரணம், இது இயலாததால்தான். என் படத்தைப் பொறுத்தவரை, அவர் பெயரைக் காப்பாற்றுவேனா என்பதைப் படம் வந்து, பார்த்தவர்கள்தான் சொல்ல வேண்டும். ஆனால் 'இவன் பாலசந்தரிடம் படித்தவன் தானா?' என்று கேட்கிற அளவுக்கு மோசமாக இருக்காது என்று நிச்சயமாகச் சொல்லுவேன்!"

**-கிச்சா**



# சசிகலாவிடம் சரண்டரானதா காபிபோசா?

சசி கோஷ்டியை காபிபோசாவில் ஒரு வருடம் தள்ளிவிட்ட நிம்மதியோடு ஹாய்யாக செயல்பட்டுக் கொண்டிருந்த அமலாக்கப் பிரிவு அதிகாரிகளுக்கு, நவம்பர் 29-ம் தேதி பயங்கர அதிர்ச்சி. அன்றுதான், டெல்லியில் கூடிய காபிபோசா உயர்மட்டக் குழு, சசியும் பாஸ்கரனும் காபிபோசா சட்டத்தில் கைது செய்யப்பட்டது சரியல்ல என்று கூறி, விடுதலை செய்ய உத்தரவிட்டது. ''சிந்தித்துச் செயல்படவில்லை'' என்று அதிகாரிகளைக் குறைகூறியது அந்த உயர்மட்டக் குழு. 'ஒரு வருடம் வெளியே வர முடியாது' என்றார்கள். அது என்னவாயிற்று என்று பலரும் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

முதலில் காபிபோசா (COFEPOSA) என்றால் என்ன என்பதைத் தெரிந்து கொள்வோம். Conservation of Foreign Exchange and Prevention of Smuggling Activities Act என்பதன் சுருக்கம்தான் இது. எமர்ஜென்ஸி கொண்டு வருவதற்கு முன்பு, பல்வேறு வகையான தடுப்புக் காவல் சட்டங்களைக் கொண்டு வந்தார் இந்திரா காந்தி. அத்தியாவசியப் பொருட்கள் - தடுப்புச் சட்டம், உள்நாட்டுப் பாதுகாப்பு சட்டம், காபிபோசா போன்றவை அவற்றில் சில. அந்நியச் செலாவணி மோசடி செய்பவர்களையும், கள்ளக் கடத்தலில் ஈடுபடுபவர்கள் - உடந்தையாக இருப்பவர்களையும் எந்தவித விசாரணையுமின்றி ஒரு வருடம் வரை காவலில் வைக்க இடம்கொடுக்கிறது 1974-ல் கொண்டு வரப்பட்ட இந்தச் சட்டம்.

ஆனால், அதே சமயத்தில், ஆட்சியாளர்கள் சகட்டுமேனிக்கு, வேண்டாதவர்களையும் அரசியல் எதிரிகளையும் பழிவாங்கும் நடவடிக்கையாக, அப்பாவிகளைப் பிடித்து இந்தச் சட்டத்தில் போட்டு விடக்கூடாது அல்லவா...? எனவே கைது செய்யப்பட்ட மூன்று மாத காலத்துக்குள், ஓர் உயர்மட்டக் குழுவின் முன் கைது செய்ததற்கான காரணங்களை விவரித்து, தமது நடவடிக்கைக்கு ஒப்புதல் பெற வேண்டும் என்றும் சட்டத்தில் சொல்லப்பட்டது.

எந்த வகையான தடுப்புச் சட்டங்களின் கீழ் கைது செய்யப்பட்டாலும் உயர்மட்டக் குழு ஒன்று கைது பற்றிப் பரிசீலிக்கும். மாநிலங்களைப் பொறுத்தமட்டில், பயங்கரவாதிகள் - குண்டர்கள் தடுப்புச் சட்டம் ஆகியவற்றுக்கு உயர்மட்டக் குழு இருக்கிறது. காபிபோசா உயர்மட்டக் குழு டெல்லியில் இருக்கிறது. டெல்லி உயர்நீதிமன்ற நீதிபதிகளைக் கொண்ட இந்த உயர்மட்டக் குழுவுக்குப் பொறுப்பானவர் நிதித்துறை இணைச் செயலாளர். இப்போது அந்தப் பொறுப்பில் இருப்பவர் கே. எஸ். வர்மா என்பவர். இவர் செயின்ட் கிட்ஸ் வழக்கில் குற்றம்சாட்டப்பட்டுள்ளவர்! முன்பு அமலாக்கப் பிரிவின் இயக்குனராக இருந்தவர்.

''காபிபோசாவில் கைதுசெய்யப்பட்டால் பெரும்பாலும் உயர்மட்டக் குழுவும் அதற்கு ஓ.கே. சொல்லிவிடும். பத்து சதவீத கேஸ்களில் அக்குழு வேறுபடலாம். ஆனால் சசி, பாஸ்கரன் கைதுகளைப் பொறுத்தவரையில் அவர்களை உள்ளே வைக்க வேண்டியதன் அவசியத்தை அமலாக்கப் பிரிவு சரியாக எடுத்து வைக்கவில்லையோ என்ற கருத்து இருக்கிறது. 'வெளியில் அவர்களை விட்டால் கூட தொடர்ந்து புதிதாக இதுபோன்ற குற்றங்களில் ஈடுபட இப்போதுள்ள சூழ்நிலையில் வாய்ப்பு குறைவு' என்பதால், உயர்மட்டக் குழு அவர்களை விடுதலை செய்திருக்கலாம். வெளியில் வந்தால் ஏற்கெனவே சிக்கியுள்ள வழக்குகளில் சாட்சியங்களைக் கலைக்கும் வேலையில் ஈடுபடுவார்கள் என்று அதிகாரிகள் தங்கள் தரப்பை எடுத்துச் சொல்லி கைதுக்கு ஓ.கே. வாங்கியிருக்கலாம்! ஆனால் அதிகாரிகள் இந்த விஷயத்தில் எப்படி கோட்டை விட்டார்கள்? இதன் காரணமாகத்தான் மக்கள் மனத்தில் ஏதேதோ சந்தேகங்கள்!'' என்று நம்மிடம் சொன்னார் தமிழக அரசின் வழக்கறிஞர் ஒருவர்.

உயர்மட்டக் குழுதான் காபிபோசாவை ரத்து செய்ததா, அல்லது உயர்மட்ட 'அழுத்தம்' காரணமாக ரத்து செய்யப்பட்டதா என்கிற மக்களின் சந்தேகம் நியாயமானது. ஏனெனில் அதிகாரதுஷ்பிரயோகம் செய்தவர்களும் அதன் மூலம் சொத்து சேர்த்தவர்களும் இதுவரை தண்டிக்கப்பட்ட முன்னுதாரணங்கள் நம் நாட்டில் இல்லையே!

- திலீப்பா



பரசுராமனின் கர்வ பங்கத்தினாலே தான் யார் என்பதை உலகுக்குக் காட்டினான் பகவான். நாராயணனின் திருவவதாரம் ஸ்ரீராமன் என்பதை மீண்டும் மீண்டும் ராமாயணத்திலே பார்க்கிறோம்.

ஸ்ரீ ராம பிரானைப் பாதுகையின் மேல் ஏறி நின்று, அந்தப் பாதுகையைத் தமக்கு ஈந்தருளும்படி கேட்கிறான் பரதன். பரதன் கேட்டது போல் வசிஷ்டரும் பகவானின் பாதுகைகளைக் கேட்டதாக ராமாயணத்தில் வருகிறது!

சுவாமி தேசிகன் அந்தப் பாதுகையைப் பார்த்தே கேட்பது போல் பாடுகிறார்: "தந்தைக்கு சமானமான அண்ணனின் பாதுகையைக் கேட்டு



வாங்கி பரதன் பூஜை பண்ணியது சரி... ஆனால் ப்ருஹ்மரிஷியான வசிஷ்டர் உன்னைக் கேட்டாரே.... அவர் எதை மனத்தில் வைத்துக் கொண்டு கேட்டார்? நீயே சொல்லு..."

வசிஷ்டருக்குத் தெரியாமலிக்குமா என்ன! பாதுகையின் மேல் நிற்பவன் சாக்ஷாத் ஸ்ரீமன் நாராயணன் என்பது தெரியாதா? அவனே .ராமனாக அவதரித்திருக்கிறான் என்பது தெரிந்துதான் அவர் அப்படிக் கேட்டார்



பத்மவாசன்

தேரெழுந்தூர் ஸ்ரீமத் ஆண்டவன், தமது பாதுகாசஹஸ்ரத்திலே இதை அழகாக வியாக்யானம் பண்ணுகிறார்:

முதலில் விச்வாமித்ரர் வந்து, ராமனை யார் என்று காட்டிக் கொடுத்தார். அது எந்த சந்தர்ப்பம் என்றால், விச்வாமித்ரர் ராமனைத் தம்முடன் காட்டுக்கு அனுப்பச் சொல்லிக் கேட்டபோது தசரதர் தயங்கினார் அல்லவா..? அப்போது! "உனக்கே உன் மகனின் பராக்கிரமம், மகிமை தெரியவில்லை. பகவான் நாராயணனின் திருவவதாரம் அவன்" என்று சொல்லிக் கொடுத்தார்.

பிறகு ஆரண்ய காண்டத்தில் ஒன்பதாவது சர்கம்... எட்டாவது சர்கத்தைப் படித்துவிட்டு, ஒன்பதாவதைப் படிக்காமலே பத்தாவது சர்கத்துக்குப் போகலாம்- தொடர்ச்சி விட்டுப் போகாது... கதைக்கு பங்கம் வராது. ஆனால் ஒன்பதாவது சர்கத்திலே முக்கியமான விஷயம் இருக்கிறது. ராமாயணத்திலே ரொம்ப முக்கியமான விஷயம் இது. அது என்ன விஷயம்...?




சரண்ய தம்பதிகளான ராமரும் சீதையும் பேசுகிறார்கள். ராமன் சில இடத்திலே பேசுகிறான். சீதை வேறு சில இடங்களிலே பேசுகிறாள்.

நாம் என்ன செய்ய வேண்டும் என்றால், இரண்டு நோட்டுப் புத்தகங்களை வாங்க வேண்டும். ராமன் பேச்சை ஒரு புத்தகத்திலும் சீதையின் பேச்சை இன்னொன்றிலும் தனித் தனியாக எழுத வேண்டும். பிறகு இரண்டையும் பக்கத்திலே வைத்து ஒப்பு நோக்கிப் பார்த்தோமானால், இரண்டும் ஒன்றாகத்தான் இருக்கும். மாறுபட்ட கருத்தே இருக்காது! இதில் சீதாபிராட்டி ராமனைப் பார்த்துப் பேசுகிறாள்- ஆரம்பத்திலேயே சொல்லிவிடுகிறாள்:

"தாங்க முடியாத மூன்று விசனங்கள் இந்த உலகத்திலே உண்டு சுவாமி! பொய் சொல்வது; பிறன் மனையாடல், துவேஷம் எதுவும் இல்லாத சமயத்தில் கூட அனாவசியமாக ஆயுதம் தாங்கி நிற்றல். இந்த மூன்று குற்றங்களில் முதல் இரண்டும் தங்களிடத்திலே இல்லை; ஆனால் மூன்றாவது குற்றம் தங்களிடத்திலே இருக்கிறதே..." என்கிறாள் சீதை.

'ஒரே சொல், ஒரே இல், ஒரே வில்!' என்று பெயர் பெற்றவன் ராமன்.

பொய் பேச மாட்டான்.

பிற பெண்களைக் கண்ணெடுத்தும் பாரான்- ராவணனின் பதினாலாயிரம் சைன்யமும் அடித்து வீழ்த்தப்பட்ட நேரத்தில் அவனிடம் போய் அந்தச் செய்தியைச் சொன்னான் ஒருவன்.

ராவணன் ஆரவாரமாய்ச் சிரித்து கைதட்டினானாம்! "என்ன உளறுகிறாய்! எல்லோரும் மாண்டு போய்விட்டார்கள் என்றால் நீ மட்டும் எப்படிப் பிழைத்தாய்...?" என்று கேட்டானாம்.

செய்தி கொண்டு வந்தவன் சொன்னான்: "எனக்கிருக்கிற சாமர்த்தியம் அவர்களுக்கு இல்லையே!"

"அப்படி என்ன தனி சாமர்த்தியம் உனக்கு? நீ என்ன பண்ணி தப்பித்தாய்" என்றான் ராவணன்.

"சீதையைத் தவிர வேறு ஸ்த்ரீயைப் பார்க்காதவன் ராமபிரான். அதனால், பெண்ணுடை உடுத்தி ஓடி வந்தேன். இல்லாவிட்டால் தப்பித்திருக்க முடியுமா...?"

- எதிர்க் கட்சியிலே இருக்கக் கூடியவன் ராமனுக்குத் தந்த நற்சான்று பத்திரம் இது! ராவண குடும்பமே ராமபிரானை இப்படி நிறைய ஸ்தோத்திரம் பண்ணியிருக்கிறது!

இந்த நற்குணங்களைத்தான் சீதையும் சுட்டிக் காட்டினாள்: முதல் இரண்டு நற்குணங்கள் வாய்க்கப் பெற்ற மாதிரி மூன்றாவது ஏன் வாய்க்கப் பெறவில்லை என்றும் கேட்டாள்- "ஜடாமுடியும் மரஉரியும் தரித்துக் கொண்டு, ஒரு கையிலே தர்பையும் மறு கையிலே சமித்தும் அல்லவா வைத்துக் கொள்ள வேண்டும்? சுவாமி! அப்படியில்லாமல், தாங்கள் வில்லையும் அம்பையும் ஏந்தியிருக்கிறீர்களே...? இது பொருந்தாமல் இருக்கிறதே..."

பரமாத்மா அதற்கு பதில் பேசுகிறான்:

"உத்தம குலத்தில் பிறந்து, உத்தம குலத்தில் வாழ்க்கைப்பட்டதற்கேற்ப நீ பேசினாய் சீதா! ஆனால், அவசியமேற்பட்டால் நான் உன்னையும் கைவிட வேண்டும்- என் பிராணனாக, என் உடலுக்கு வெளியே நடமாடும் லக்ஷ்மணனையும் உதற வேண்டும்- என் திருவடி பற்றினவர்ககளைக் காப்பதற்காக, அவசியமானால் அப்படிச் செய்யத்தான் வேண்டும்..." என்கிறான்.

அந்த வார்த்தையை முடிச்சுப் போட்டு

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

வைத்துக் கொண்டாளாம் சீதை! சீதா பஹரணமே அதனால்தான் சாத்தியமாயிற்று! ராமனின் இந்த வார்த்தை நிரூபணமாக வேண்டும் என்பதற்காகத்தான் சீதை அவனை விட்டுப் பிரிக்கப்பட அனுமதித்தாள். அவள் மட்டும் அப்படி நினைத்திருக்காவிட்டால் ராவணனால் அவளை பகவானிடமிருந்து பிரிக்க முடியுமா! அந்த திவ்ய தம்பதிகள் இணைந்த சிந்தனையால் அந்த நிகழ்ச்சியை சங்கல்பித்தார்கள் என்பதை நாம் உணர வேண்டும். அதோடு, அப்படியொரு சொல் ராமனிடமிருந்து வெளிப்பட்டதே அவன் பகவான் நாராயணன்தான் என்பதைத் தெளிவாக மீண்டும் உணர்த்துவதையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

அடுத்து கிஷ்கிந்தா காண்டத்திலே.... தாரை எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் கேளாமல், வாலி யுத்தம் செய்கிறான். அப்புறம் ராமபாணத்தால் வீழ்த்தப்பட்டு அவன் கிடப்பதைப் பார்த்து அவன் ராமனை நோக்கிச் சொல்கிறாள்:

"தாமரைக் கண்ணன் நீ. உன் நேத்திரமே உன்னை பகவான் நாராயணன் என்று காட்டிக் கொடுக்கிறது. சாந்தோக்ய உபநிஷத்தில் சொல்லப்படுகிற எட்டு குணங்களையும் உடையவன் நீ..." என்று தாரை பகவானாகவே ஸ்ரீராமனைக் கொண்டு பேசுகிறாள்.

யுத்த காண்டத்தில், விபிஷணன் ராவணனோடு உரையாடும்போது இந்த விஷயம் மீண்டும் உறுதியாகிறது. ராவணன் என்ன சொல்கிறான்:

"விபீஷணா! எனக்கு நன்றாகத் தெரியும்; நான் முற்றிலும் உணர்கிறேன்– அவனே ஸ்ரீமன் நாராயணன்– ஆனால், என்னோடு கூடவே பிறந்த குணம் என்று ஒன்று இருக்கிறது பார்... யாருக்கும் வணங்காத குணம். அதனால்தான் நான் பணியாமல் இருக்கிறேனேயொழிய அவனே நாராயணன் என்பது தெரியும்!"

ராமாயணத்திலே ஜெயித்தது ராமனா? ராவணனா? என்று தெலுங்கு கவி ஒருத்தர் அலசுகிறார்: ராவணன்தான் ஜெயித்தான் என்கிறார். 'யார் வந்தாலும் ரட்சிக்கிறேன் என்றான் ராமன்; ஒருத்தருக்கும் தலை வணங்க மாட்டேன் என்றான் ராவணன். இறுதி வரைக்கும் அப்படியே இருந்தவன் ராவணன்தானே' என்று ஹாஸ்யம் பண்ணுகிறார்!

ஆனால் அந்த ராவணன் வீழ்ந்த போதும் வந்து நின்று ரக்ஷித்தான் பரமாத்மா. ராவணன் வீழ்ந்து கிடப்பதைப் பார்த்து மண்டோதரி புலம்புகிறாள்:

'நல்லது பண்ணியவன் நல்லதை அடைகிறான். தீமை செய்தவன் தீயதையே அடைகிறான். விபீஷணன் நல்லதை அடைந்தான். நீங்கள் இப்படிக் கெட்டுப் போய்விட்டீர்களே...' என்று அவள் அரற்றுகிறபோது ராமன் எதிரே வந்து நிற்கிறான்! வாலியின் எதிரில் வந்த நின்றது போலவே வந்து நின்று ரக்ஷிக்கிறான்.

'இதோ இருக்கிறானே, இந்த ராமன் பரமாத்மா' என்று மண்டோதரியைப் பேச வைக்கிறான்.

ராமாயணத்தின் 24,000 சுலோகங்களிலே வேறு எந்த இடத்தில் தேடினாலும் இந்த வார்த்தை கிடைக்காது! பரமாத்மா! இந்த ஒரு இடத்தில்தான் வருகிறது அந்த வார்த்தை. மஹா பதிவிரதையான மண்டோதரியினிடத்திலே பகவானால் தன்னை மறைத்துக் கொள்ள முடியவில்லை!

அக்னிப் பிரவேச கட்டத்தில், பாருங்கள்... சீதை அக்னிக்குள் இறங்க இருக்கும் சமயம் அங்கே ஈஸ்வரன் எழுந்தருளியிருக்கிறார். ப்ரும்மா வந்திருக்கிறார். இந்திராதி தேவதைகள் வந்திருக்கிறார்கள். 'அக்னியில் விழக்கூடிய சீதையைத் தடுத்து நிறுத்தாமல் இப்படிப் பார்த்துக் கொண்டிருக்கிறாயே... உன்னை நீ உணரவில்லையா?' என்று ராமனிடம் கேட்கிறார்கள்.

அதற்குப் பரமாத்மா சொல்கிறார்:

''நன்றாக உணர்ந்திருக்கிறேன். நான் மனிதன். தசரதன் பிள்ளை ராமன்..." என்று.

"நீ மனிதனா? நீ யார் என்பதை நாங்கள் சொல்கிறோம்! விஷ்ணு நீதான். கிருஷ்ணன் நீதான்! புருஷ சூக்த பிரதிவாக்ய தேவதை நீதான்..'' என்று அங்கே அழுத்தம் திருத்தமாய் வேதலோகமே சொல்கிறது.

இப்படியாக, பால காண்டத்திலே ஆரம்பித்து ஒவ்வொரு காண்டத்திலும் பரமஸ்பஷ்டமாக ராமனை பகவான் என்று சொல்லியிருக்கிறது.

இதை பூதத்தாழ்வார் ரொம்ப நயமாகச் சுட்டிக் காட்டுகிறார். "ஹே ராமனே! சீதையைக் காணும் என்றதும் 'ஏ மரமே நீ சீதையைப் பார்த்தாயா? மட்டையே அவளைக் கண்டாயா?' என்று புலம்பி அலைந்த நீ, ஜடாயுவுக்கு மட்டும் மோக்ஷம் கொடுக்க முன்வந்தாயே! அத்தனை நேரமும் உன்னை ஆட்டி வைத்த அஞ்ஞானம் அந்தக் கணத்திலே எங்கே பறந்து போனது! அந்த நிகழ்ச்சியே தெளிவாகக் காட்டி விடுகிறதே நீதான் பரமாத்மா என்று...''

பரமாத்மா பரமஸ்பஷ்ட:

ஆகவே, விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் முதல் சப்தமான விச்வ சப்தத்தினாலே சொல்லப்படுகிற ஸ்ரீமன் நாராயணன்தான் ஸ்ரீராமன் என்றாகிறது. விச்வ சப்தத்தால் சொல்லப்படுபவன் ராமன் என்றும் ஆகிறது.

(தொடரும்)

• அருணா சாய்ராம்



# நானும் பறந்து கொண்டே இருப்பேன்!

'மும்பை'யை முன் பெயராகக் கொண்டு சுமார் அரை டஜன் கலைஞர்கள் (பாம்பே சகோதரிகள், பாம்பே ஜெயஸ்ரீ, பாம்பே காயத்ரி, பாம்பே பாலாஜி...) சென்னைவாசிகளாக மாறி கொடி நாட்டி விட்டார்கள். ஆனால் மும்பைக்கும் சென்னைக்கும் மாறி மாறி 'பறந்த'படியே அங்கீகாரம் பெற்றிருக்கிறார் அருணா சாயிராம். அவருடைய அனுபவங்கள்:

**பி**றந்து, வளர்ந்து, படித்து, இசை பயின்றது எல்லாமே பம்பாயில்தான். அப்போது பிருந்தாம்மா (டி.பிருந்தா) சென்னையில் கர்நாடிக் மியூசிக் காலேஜில் பணியாற்றிக் கொண்டிருந்தார். விடுமுறை நாட்களில் பம்பாய் வந்து எங்கள் வீட்டில் தான் தங்குவார். அந்த சமயங்களில் தினமும் காலை முதல் மாலைவரை தொடர்ந்து வகுப்பு நடக்கும்.

ஏராளமாகக் கற்றுக் கொண்ட பிறகு அதையெல்லாம் வெளிப்படுத்த பம்பாயில் போதுமான வாய்ப்புகள் கிடைக்கவில்லை. 'என்ன இருந்தாலும் மெட்ராஸிலிருந்து வந்து பாடுபவர் போல் ஆகுமா?' என்றொரு மனோபாவம் அங்கே... சென்னைக்கு வந்தாலோ, 'வெளியூர் கலைஞர்' என்கிற முத்திரை.. எப்படியாவது சென்னை ரசிகர்களின் மனசில் இடம்பிடித்து விட வேண்டும் என்ற உத்வேகம் வந்தது.

ஆனால், அது சுலபமாக இருக்கவில்லை. குழந்தைகள் சிறியவர்களாக இருந்தார்கள் (இரு பெண்கள்). அவர்களுடைய படிப்பு, குடும்பச்சூழல் எல்லா காரணங்களும் சேர்ந்து கொண்டதால் சென்னைக்குக் குடி பெயர்வது சாத்தியமாயிருக்கவில்லை. அடிக்கடி சென்னை வந்து போவதோ அதைவிடக் கஷ்டமாக இருந்தது.

டிசம்பர் சீசனில் மட்டும் வருவேன். அந்த சமயத்தில் சில வாய்ப்புகள் கிடைக்கும். அதன்பிறகு அருணா சாயிராம் என்று ஒரு பாடகி இருப்பதே சென்னை சபாக்களுக்கும் ரசிகர்களுக்கும் மறந்து போய் விடும். மீண்டும் ஒரு வருடம் காத்திருக்க வேண்டும்.

இப்படியே சில வருடங்கள் ஓடி விட்டன. குழந்தைகள் ஓரளவு வளர்ந்த பிறகு அவர்களை விட்டு வந்தாலும், சென்னையில் கூடுதலான நாட்கள் தங்க முடிந்தது. அடிக்கடி இங்கு வரவும் முடிந்தது. அலுக்காமல் சலிக்காமல் முறை போட்டுக் கொண்டு சென்னை வர ஆரம்பித்தேன். பேயிங்கெஸ்டாகத் தங்க ஓர் இடம் பிடித்தேன். சபா நிகழ்ச்சிகளிலும், கலை விழாக்களிலும் அடிக்கடி வளைய வர ஆரம்பித்த பிறகுதான் ஓரளவுக்கு என்னை இந்த ஊர் நிகழ்ச்சி அமைப்பாளர்கள் ஏற்றுக் கொள்ள ஆரம்பித்தார்கள். out of sight; out of mind என்பது வேறெதற்குப் பொருந்துகிறதோ இல்லையோ. இந்த இசையுலக வாய்ப்புகள் விஷயத்துக்கு மிக மிகப் பொருத்தம்.

ஆனால் அது மட்டும் வாய்ப்புகளைப் பெற்றுத் தந்து விடவில்லை. பிறர் பாடுவதையெல்லாம் கேட்டு ரசிகர்களின் எதிர்பார்ப்பு என்ன என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது. அதற்கேற்ப சில மாறுதல்களை என் இசையிலும் புகுத்திக் கொண்டேன்.

இப்போது சென்னை சபாக்களும் என்னை ஏற்றுக் கொண்டு விட்டன; ரசிகர்கள் மத்தியிலும் அங்கீகாரம் கிடைத்திருக்கிறது.

பயணச் செலவு (அவசரமானால் விமானம்தான்!) தங்கும் செலவு என்று கணக்குப் போட்டால் சென்னை கச்சேரிகளில் பெறக்கூடிய தொகை அதையெல்லாம் ஈடு கட்டாது. எனினும் சென்னையில் முத்திரை பதித்த பிறகுதான் வேறு ஊர்களில் கணிசமாக சன்மானம் பெற முடிகிறது! மேலும் சென்னை ரசிகர்களைப் போல் விஷயம் தெரிந்தவர்களை எங்குமே பார்க்க முடியாது. மிக கவனமாகக் கேட்கிறார்கள். நடுத்தர வர்க்கத்தினர், வேறு எந்த எதிர்பார்ப்போ பகட்டோ இன்றி இசைக்காக மட்டுமே கச்சேரிக்கு வருகிறார்கள் பாருங்கள்... அந்த ரசிகர்களின் ஈடுபாடு ஒரு கலைஞரை நெகிழ்த்து விடும். மேலும் சிறப்பாகப் பாட உத்வேகம் தரும்.

சந்திப்பு : சூரி

**கர்நாடக இசைக் கச்சேரியை ஒரு சாரார் தலையாட்டி ரசிப்பதை இன்னொரு சாராரால் புரிந்து கொள்ளவே முடிவதில்லை. அப்படியென்ன இருக்கிறது என்று ஓடுகிறார்கள்? மணிக்கணக்கில் உட்கார்ந்து லயிக்கிறார்கள்..? சில ரசிகர்களையே ஒன்று சேர்த்துக் கருத்து கேட்டோம் :**



• பாலமுருகன், நரசிம்மன், கிருஷ்ணமூர்த்தி

**பாலமுருகன் :** நான் கச்சேரிக்குப் போறது புதுசா பல விஷயங்களைத் தெரிஞ்சுக்கறதுக்காக. எனக்கு இசையில ஆர்வம் அதிகம். பட்ட மேல்படிப்பு கூட மியூசிக்தான் படிச்சிருக்கேன்.

**ப்ரியஸ்ரீ :** நானும் மியூசிக் படிச்சுக் கிட்டிருக்கேன். அதனால எனக்கும் படிப்புக்கு உபயோகமா இருக்கும்னு போறேன்.

**ப்ரீதா :** நான் உங்களுக்கு நேர்மாறா – படிப்பு, பாடம், பரீட்சை டென்ஷனெல்லாம் மறக்கறதுக்காகவே போறேன்.

**கல்கி :** ஆகக்கூடி ஆசைக்காக யாரும் கச்சேரிக்குப் போகலையா...?

**கிருஷ்ணமூர்த்தி, நரசிம்மன் :** நாங்க அந்த ரகம்தான்.

**பாலமுருகன் :** எனக்கென்னவோ ஆசைக்காக வர்றவங்களை விட ஃபாஷனுக்காக வர்றவங்கதான் அதிகம்னு தோணுது. ஒரு கச்சேரியில என் பக்கத்துல இருந்த ஒருத்தர் ரொம்பப் பிரமாதமா ரசிச்சுக்கிட்டிருந்தார். 'என்ன ராகம் ஸார் இது?'ன்னு கேட்டேன். 'வசந்தா மாதிரி இருக்கு'ன்னார். வித்வான் பாடினதோ சாவேரி...!

**நரசிம்மன் :** கச்சேரிக்கு வர்றவங்க எல்லாரும் சங்கீதத்தை முழுசா தெரிஞ்சுகிட்டு வர்றதில்லை. அப்படி வரணும்னு அவசியமும் இல்லை. இன்னும் சொல்லப் போனா எல்லா இலக்கணமும் தெரிஞ்சு அது சரியா அமைஞ்சிருக்கான்னு பார்த்துக்கிட்டேயிருந்தோமானால் பாட்டையே ரசிக்க முடியாது.

**கிருஷ்ணமூர்த்தி :** நான் ரொம்ப நாள் வரைக்கும் கச்சேரியே கேட்காமல் இருந்தவன்தான். சங்கீதம் பத்தி பெரிசா ஒண்ணும் தெரியாது. ஆனா பத்து கச்சேரி போல கேட்டப்புறம் ராகம்னா என்ன, மற்ற அம்சங்கள்லாம் என்னன்னு தெளிவு கனிவு புரிய ஆரம்பிச்சது.

**கல்கி :** ஃபாஷனுக்காக வர ஆரம்பிச்சு நிஜ ரசிகர்களாவும் மாறலாமில்லையா... அதுல என்ன தப்பு?

**நரசிம்மன் :** என்னுடைய அனுபவத்தைச் சொல்றேன். நான் சின்ன பையனா இருக்கும்போது எங்க தேரெழுந்தூர்ல திருவீழிமிழலை சகோதரர்கள் நாதஸ்வர கச்சேரி. நீடாமங்கலம் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை தவுல். எனக்கு ஒண்ணுமே புரியலைன்னாலும் அந்த தவுல் வாசிக்கறப்போ கை நகர்வு வேகமும்

# இது கச்சேரி கேட்கப் போகாதவங்களுக்கு மட்டும்...!

விரல் பறக் கறதும் அதிசயமா இருந்தது. கண்ணை விரிச்சுப் பார்த்துக்கிட்டேயிருந் தேன். அதுக்கப்புறம் எப்ப நாதஸ்வர கச்சேரி நடந்தாலும் போய்டுவேன். அப்புறம் ஒருமுறை அரியக்குடி பாட்டு கேட்க வாய்ப்புக் கிடைச் சது. முதல் வரிசையிலேர்ந்து எழுந்திருக்காம கடைசி வரை கேட்டேன். புரிஞ்சோ தெரிஞ்சோ கேட்கலை. ஆனாலும் அதுல ஒரு சர்ப்பு, பிரமிப்பு இருந்தது. எங்க அப்பா எப்படி ராகமெல்லாம் கண்டுபிடிக்கறார்னு எனக்கு ஒரே ஆச்சர்யமாயிருக்கும்.... அப் போதான் ரேடியோ வாங்கினார் எங்க அப்பா. அப்பல்லாம் நிறைய கச்சேரிகள் ரேடியோவில வரும். ராகத்தை அறிவிச்சுட்டு பாட்டு வைக்கும்போது ராகம் புரிய ஆரம்பிச்சுது.

ஒரு பாட்டு காம்போதி ராகம்னு தெரிஞ்ச பிறகு அதே மாதிரி இருக்கற இன்னொரு பாட்டும் அதே ராகம்னு தொடர்புபடுத்திக் கண்டுபிடிக்க ஆரம்பிச்சேன். அதுலே சுவாரஸ்யம் அதிகமாயிடுச்சி. அப்படியே ஆர்வம் வளர்ந்தது.

**பாலமுருகன்:** உங்களுக்கு நிறைய பாட்டு கேக்கறதுக்கும் அறிவை வளர்க்கறதுக்கும் வசதி வாய்ப்புகள் இருந்தது. ஆனா எல்லாருக்கும் அதே மாதிரி இருக்கும்னு சொல்ல முடியாது. புதுசா ஒண்ணுமே தெரியாம கச்சேரிக்கு வர்றவங்க இருக் காங்களே, அவங்களுக்காக வித்வான்கள் ராகத்தை அறிவிச்சுட்டுப் பாடலாம் - ஆரோ கணம் - அவரோகணம் சொல்லலாம்....

**நரசிம்மன் :** ஆரோகணம் அவரோகண மெல்லாம் சொல்லிப் பாடணும்னு அவசியமில்லை. கேட்க கேட்கத்தான் புரியும். புரியப் புரிய ஆர்வம் ரொம்ப அதிகமாயிடுத்து எனக்கு. காலேஜ் படிக்கற நாள்ல மதுரை மணி கச்சேரின்னா காலை

• ப்ரீதா

• ப்ரியஸ்ரீ



யிலேயிருந்தே மனசு சந்தோஷத்துல துடிக்கும். வேற எந்த வேலையும் ஓடாது. பரீட்சைக்குக் கூட படிக்கத் தோணாது.

**கிருஷ்ணமூர்த்தி** : அந்த நிலை வர்றதுக்கு நிறைய கேட்கணும்.

**பாலமுருகன்** : அதுக்கு வித்வான்களும் கொஞ்சம் உதவி பண்ணட்டுமே. என்ன பாடறாங்கன்றதைச் சொல்லிட்டுப் பாடட் டுமே.

**ப்ரியஸ்ரீ** : ஆமாம், சுருக்கமா சொல்லலாம்.

**கல்கி** : கச்சேரிக்கு நடுவில் பேசறதுன்னு ஆரம்பிச்சுட்டா கேள்வி – பதில் சந்தேகம் தீர்த் துக்கறதுன்னு எல்லா விஷயங்களும் அங்க அனுமதி ஆயிடாதா? அப்புறம் கச்சேரியோட அமைப்பு கலைஞ்சு போயிடும் இல்லையா?

**நரசிம்மன்** : எனக்கொரு சம்பவம் ஞாப கத்துக்கு வரது. ஒரு வித்வான் சாளகபைரவி ராகம் பாடிட்டு 'பதவினி' தியாகராஜ கீர்த் தனை பாடினார். அப்புறம் அந்த கீர்த்தனை பத்தியும் ராகம் பத்தியும் பேச ஆரம்பித்தார்.... மிருதங்கம் வாசிச்சுக்கிட்டிருந்த ஒரு சீனியர் வித்வான் பார்த்தார் – இடையில் புகுந்து, 'யாருக்கும் தெரியாத, யாரும் பார்க்காத தியா கய்யரைப் பத்தி இவர் இவ்வளவு பேசறார். நான் பார்த்து பாடம் கேட்ட தஞ்சாவூர் வைத்தியநாத அய்யர் இப்படித்தான் சாபு கொடுப்பார்'னு மிருதங்கத்துல பெரிசா ஒரு 'சாபு' கொடுத்தார்!

(சிரிப்பு....)

**கிருஷ்ணமூர்த்தி** : இந்த மாதிரி விளக்க மெல்லாம் குடுக்கறதுக்கு லெக்சர் டெமான் ஸ்ட்ரேஷனெல்லாம் நடக்குதில்லையா, அங்க போய் தெரிஞ்சுக்க விரும்பறவங்க தெரிஞ் சுக்கலாம்.

**பாலமுருகன்** : எத்தனை பேர் லெக்-டெம்க்கு வராங்க...? விரல் விட்டு எண்ணி டலாம்.

**கல்கி** : லெக்-டெம்முக்கு வராத கூட்டம் கச்சேரிகளுக்கு வருது என்னும்போதே தெரிஞ்சு போகலையா... ஜனங்களுக்கு சங்கீதம் தான் தேவை; அதுக்குப் பெரிய விளக்கம் தேவை இல்லைன்னு....

**ப்ரியஸ்ரீ** : பெரிய விளக்கம் வேண்டாம். அடிப்படை விஷயங்கள் சொல்லணும்கறேன்.

**நரசிம்மன்** : அதுக்குப் பேசாம புரோ கிராமை அச்சடிச்சுக் கொடுத்துடலாம். விஜய் சிவா அப்படித்தான் பண்றார்.

**கிருஷ்ணமூர்த்தி** : அப்படி பண்றதுல ஒரு ஆபத்து– வித்வான் மூடுக்குத் தகுந்த மாதிரி மாற்றிப் பாட முடியாம போயிடும்.

**நரசிம்மன்** : இந்தக் காலத்திலே அனேகமா எல்லாருமே முன்கூட்டியே தயார் பண்ணி, திட்டம் போட்டுத்தான் பாடறாங்க. லட்சணம் தெரிஞ்சும் பாடறாங்க. அதனால ப்ரோக்ராம் ஷீட் அச்சடிச்சுக் கொடுக்கறது பெரிய கஷ்டமில்லை...

**ப்ரீதா** : செலவாகுமே...?

**கல்கி** : ரொம்ப அதிகமா செலவாகும்னு தோணலை. ஸ்பான்ஸர் உதவியோட அதையும் செய்யலாம். சரி, கச்சேரிக்குப் போகறதுங்கற பழக்கத்துக்கு வந்த பிறகு, அதை ரசிக்கிற நிலை ஏற்பட்ட பிறகு என்ன எதிர்பார்ப்போட போறீங்க...?

**நரசிம்மன்** : ராகம் விஸ்தாரமா பாடணும். கார்வை கொடுத்துப் பாடணும். இரண்டு பாட்டுக்காவது நிரவல் பண்ணணும். அதிகமா, அதீதமா ஸ்வரம் பாடக்கூடாது...

**கிருஷ்ணமூர்த்தி** : அப்புறம் அழகு போய் கணக்குதான் மிஞ்சறது.

**ப்ரீதா** : எனக்கு அப்படியெல்லாம் சொல் லத் தெரியலை. சங்கீதம் கேட்கும்போது நமக்கு மத்த விஷயங்கள் மறந்து போகணும். அது அப்படியே போய் மனசைத் தொடணும். ஒருமுறை கதிரிகோபால்நாத் கச்சேரியில எனக்கு அந்த அனுபவம் ஏற்பட்டது. கச்சேரி முடிஞ்சதும் 'ஐயோ முடிஞ்சு போச்சே!'ன்னு இருந்தது.

**நரசிம்மன்** : ஒரு வாரம் தொடர்ந்து நான் மதுரை மணி கச்சேரியைக் கேட்டிருக்கேன். ஆனா இப்ப அந்த மாதிரி முடியுமா தெரி யலை....

**பாலமுருகன்** : அந்தக் காலத்துல வேற எந்தப் பொழுதுபோக்கு அம்சமும் கிடையாது. இப்போ டி.வி., சினிமான்னு ரொம்ப விஷயங் கள் கவனத்துக்குப் போட்டி போடுதே...

**வியாபாரியான ஒரு சந்தாதாரர் பத்திரிகையில் வணிகப்பகுதியைப் பிரித்தபோது அதில் ஒரு சிலந்தி செத்துக்கிடப்பதைப் பார்த்து, "சிலந்திக்கு உங்கள் பத்திரிகையில் அப்படி என்ன ஆர்வம்?" என்று கிண்டலாகக் கடிதம் எழுதினார். ஆசிரியர் மார்க்ட் வெயின் அக்கடிதத்தையும், அதன்கீழ் பின்வரும் பதிலையும் பிரசுரித்தார்:**

**"நகரத்தில் எந்தவியாபாரி எங்கள் பத்திரி கையில் இன்னும் விளம்பரம் செய்யவில்லையென்று கவனித்து, அங்கு போய் வலை பின்னிக் கொண் டால் தொந்தரவில்லாமல் நிம்மதியாக வாழலாம் என்று தேடியிருக்கும்."**

**– அ. ஷண்முகசுந்தரம்**



**கல்கி** : ஆனா அதையெல்லாம் மீறி, உதறிட்டு, வேற பல சொந்த பிரச்னைகளையும் ஒதுக்கி வைச்சுட்டு கச்சேரிக்குப் போக முடி யறதுன்னா அது ஏன்..? பத்து நாள் சேர்ந்தாப் போல் போகலைன்னாலும் வாரத்தில் ஒரு நாள் போக... எது ஈர்க்கிறது...?

**பாலமுருகன்** : பாடற கலைஞரோட தரத்தையும் திறனையும் பொறுத்துதான் ஈர்ப்பு... யார் பாடினாலும் போயிட முடியாது.

**நரசிம்மன்** : சில கலைஞர்கள் பாடினா, உத்தரவாதமா நல்லாயிருக்கும் – சஞ்சய் சுப் ரமண்யம், டி.வி. சங்கரநாராயணன் – இன்னும் சில பேர்.

**கிருஷ்ணமூர்த்தி** : ஆமாம். நாம கஷ்டப் பட்டு அவ்வளவு தூரம் போனோம், நேரம், பணம் வீணாச்சுன்னே இருக்காது.

**கல்கி** : சினிமாவில சொல்ற மாதிரி மினிமம் காரன்டி....?

**ப்ரியஸ்ரீ** : கச்சேரிக்கு எப்படி காரன்டீ கொடுக்க முடியும்?

**நரசிம்மன்** : சில பேர் இருக்காங்க – அவங்க கச்சேரி ஒண்ணு நல்லாயிருக்கும்; இல்லை ரொம்ப நல்லாயிருக்கும்; இல்ல ரொம்ப, ரொம்ப நல்லாயிருக்கும் – ஃபெயி லியராச்சுன்றதே கிடையாது.

**பாலமுருகன்** : அந்த ஆர்டிஸ்ட் கச்சேரி களுக்கெல்லாம் எப்பவும் கூட்டம் இருக்கும்.

**கிருஷ்ணமூர்த்தி** : அதோட, பாடற இடத்தோட சூழ்நிலையும் சாந்நித்யமும் நம்மளை இழுக்கும்....

**ப்ரீதா** : அகாடமி, நாரதகான சபாவில எல்லாம் பாடும்போது ரொம்ப கவனமா பாடுவாங்க இல்லையா...?

**கிருஷ்ணமூர்த்தி** : நான் அப்படிச் சொல் லலை. ஒரு அந்தஸ்து கொடுக்கறதுங்கறதுக் காகப் பாடறதைச் சொல்லலை.... கோவிந்த புரம் போதேந்திராள் மடம், திருவிசைநல்லூர் ஐயாவாள் முன்னிலை போன்ற இடங்களுக்கே ஒரு சரித்திர, கலாசார மகிமையுண்டு... அந்த மாதிரி சில சின்ன அரங்கங்கள் சபாக்களுக்கும் அங்கே வர்ற ரசிகர்களோட ஈடுபாட்டுனா லேயும் ஒரு மகிமை ஏற்படறது உண்டு. அந்த மாதிரி இடங்களுக்குப் போய்க் கேட்கும்போது தனியா ஒரு எதிர்பார்ப்பும் உற்சாகமும் ஏற்படுது.

**பாலமுருகன்** : பக்கவாத்தியம் யார் என்கிறதைப் பொறுத்தும் கச்சேரிக்குப் போகிற வேகம் உண்டாகிறது...

**ப்ரீதா** : கேட்க இனிமையா இருந்தா ஈர்க் கறது.

**ப்ரியஸ்ரீ** : குரல் இனிமையை விட குரல் வளம்தான் ஈர்க்கறது. பொதுவா இன்னைக்கு எல்லா இளைஞர்களுமே ரொம்ப நல்லா பாட றாங்க...



● ஒருவனை மனிதனாக ஆக்கு பவை உதவிகளும், வசதிகளும் அல்ல; அவனுக்கு ஏற்படும் இடை யூறுகளும் தடைகளும்தான்.
– மாத்யூஸ்
தகவல்: கோபி நாகராஜன்

**நரசிம்மன்** : அதுக்கு முக்கியமா ஒரு காரணம் அவங்க பாட்டுல இலட்சியம் இலட்சணம் இரண்டுமே இருக்கு.

**கிருஷ்ணமூர்த்தி** : அந்தக் காலத்துல இலட்சியத்துக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுத்தாங்க...

**கல்கி** : அதாவது கற்பனை, மனோதர்மம் இருந்த அளவுக்கு உச்சரிப்பு, குரல் வளம் காக் கறது போன்ற விஷயங்கள்ல கவனம் செலுத் தலை...?

**நரசிம்மன்** : ஆமாம். ஆனா, இப்போ பாடற இளம் பாடகர்கள் பல பேர்கிட்டே அந்தப் பழைய பிரகாசமும் இருக்கு, புது மெருகும் இருக்கு... அதனாலே புதுசா கேட்க வர்றவங்க கூட கர்னாடக சங்கீதத்தை 'பளிச்'சுன்னு ரசிக்க முடியும்.

**பாலமுருகன்** : எல்லாம் சரிதான்... ஆனா இன்னமும் பல இளைஞர்கள் கர்னாடக சங்கீதம்னாலே பயப்படறாங்களே... ஓடறாங் களே...

**கிருஷ்ணமூர்த்தி** : முதன் முதல்ல அவங்க கேக்கறது காதுக்கு இனிமையா இருந்துட்டா அப்புறம் மெள்ள மனசை செலுத்த ஆரம்பிச் சுடுவாங்க... தானா ஆர்வம் வந்துடும்.

**ப்ரியஸ்ரீ** : அப்படி ஆர்வம் வந்துட்டா அப்புறம் இந்த சங்கீதத்தை ரசிக்க ஒரு ஆயுள் காலம் போறாதுன்னு தோணிப் போயிடும்.

**கிருஷ்ணமூர்த்தி** : வேத வேதாந்த உபன் யாஸமோ, இல்ல வேற ஒரு ரொம்பப் பிடிச்ச வகுப்புக்கோ போகிறபோது ஏற்படற சிரத் தையும் ஈடுபாடும் உண்டாகிடும். அப்புறம் சங்கீதத்தைக் கேட்காமலே இருக்க முடியாது. கச்சேரிக்குப் போகாமலே இருக்க முடியாது.

**நரசிம்மன்** : அப்படி ஒரு கச்சேரி கேட்டு திருப்தியாச்சுன்னா ஒரு வாரம், பத்து நாளைக்கு என்ன பிரச்னை வந்தாலும் சமாளிக்க முடியும்ங்கற மாதிரி தெம்பு வரும்!

தொகுப்பு : **மலர்**
படங்கள் : **யோகா**

# சீசன் கூட்டம் சென்னையில் மட்டுமா?

**மியூசிக் சீசன் அமர்க்களப்படுவது சென்னையில் மட்டுமில்லை. வெளியூர்களிலும் இசை விழாக்கள் சக்கைப்போடு போடுகின்றன என்று கொஞ்சம் சீரியஸாய் விசாரித்தபோது தெரிந்தது.**

டில்லியில் மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த கேரள எம்.பி. எம்.ஏ. பேபி நடத்துகிற விழாக்கள் அசத்தலாய் இருக்கும். வி.ஐ.பி.க்களின் வருகை உட்பட, செம கூட்டம் வரும். ரசிகர்கள் ரொம்ப அமைதியாய்க் கடைசி வரை இருந்து கேட்பார்கள். ரொம்ப ஆத்மார்த்தமான சேவை மனப்பான்மையோடு, பேபியின் தலைமையில் உழைக்கும் ஏராளமான வாலன்டியர்களை அங்கே நிறையப் பார்க்கலாம். அதிலும் அவர் வித்துவான்களிடம் காண்பிக்கும் அபரிமிதமான அன்பும், பாசமும், மரியாதையும் இப்படிக்கூட ஓர் எம்.பி. இருப்பாரா என்று எண்ண வைக்கும். அவர் மனைவியும் அவர் போலவேதான். ஒரு தடவை, 90 வயதான திட்டே கிருஷ்ணய்யங்காரின் பாட்டு முடிந்து கீழே இறங்கும்போது, பேபியின் மனைவி அவர் பாதங்களைப் பரிவுடன் தாங்கி அவரைச் சௌகரியமாக அமர வைத்தது எல்லாரையும் நெகிழ்த்தி விட்டது. செம்பை ஃபெஸ்டிவலில் ஜேசுதாஸ், கே.வி.என். என்று பிரபலங்களின் கச்சேரிகள் ஒரு வாரத்துக்கு. பாலக்காடு மணி அய்யர் ஃபெஸ்டிவல், பாபநாசம் சிவன் ஃபெஸ்டிவல், தான்சேன் - தியாக ராஜா ஃபெஸ்டிவல் என்று ஒவ்வொரு வருடமும் இசைவிழா நடத்தி ஒரு கலக்குக் கலக்கி விடுவார் மனிதர்! விழாவில் ஞாயிற்றுக்கிழமை களில் முழுநாளும் நாலு - ஐந்து கச்சேரிகள் வைத்து, வருகிற ரசிகர்களைக் கட்டிப் போட்டு விடுவார்" என்கிறார் மன்னா சீனிவாசன். (இவர் சங்கீத நாடக அகடமி உட்பட பல அமைப்புகளின் ஆலோசகர்.)

திருச்சியில் சங்கம் ஹோட்டல் வளாகத்தில், அசோக் லேலண்டு நிறுவனம் சார்பில் நடந்த கர்நாடக இசை விழா வாரத்திலும் ரசிகர்கள் ஏராளமாம்.



"[illegible] இருந்து ரசிக்கிற கச்சேரிகள், அக்டோபர் இரண்டாம் வாரத்தில் நடைபெற்றன. நித்யஸ்ரீயின் கச்சேரியின்போது, இடநெருக்கடியில், கதவுகள் உடைந்தது கூட உண்மை!" என்கிறார் அசோக் லேலண்ட் சார்பில் இசை விழாக்களை நடத்தும் பொறுப்பை ஏற்றுள்ள இளைஞர் விஜய் சிவா.

"சென்னை மாதிரி இங்கே பட்டம், விருது எல்லாம் கொடுப்பது இல்லை. கர்னாடக இசைக் கச்சேரிகள் மட்டும்தான்" என்கிறார் விஜய்.

"ஆனால் உள்ளூரிலேயே இயங்கி வரும் சபாக்களை ஆதரித்து, அவர்களது முயற்சிகளுக்குத் துணைநிற்பதுதான் இந்த மாதிரி விழாக்கள் நடத்துவதன் நோக்கம். ஆலத்தூர் சகோதரர்களுள் ஒருவரான சுப்பிரமணிய அய்யரின் மகன் தியாகராஜன் திருச்சியில் நடத்தும் ஸ்ரீசத்குரு சங்கீத சமாஜம் செய்யும் பணிகளுக்கு ஒரு பக்கபலம் மாதிரி திருச்சியில் நடத்தினோம்!"

அடுத்த ஆண்டு வேறு ஊரில் இதே போல் நடத்த திட்டமாம். எந்த ஊருக்கு அதிர்ஷ்டம் அடிக்கிறது, பார்ப்போம்!



• திருச்சியில் கூடிய கூட்டம்

கலைஞர்களாக வைத்தோம். " 'இவ்வளவு பெரிய ஏற்பாடுகள் செய்கிறோமே, சென்னை மாதிரி மக்கள் வந்திருந்து கலகலப்பாய் விழாக்கள் நடக்குமா?' என்ற பயம் முதல் நாளே போய் விட்டது!" என்கிறார் அமைப்பாளர்களில் ஒருவரான வி. முரளி.

"பாரதிய வித்யா பவன் தலைவர் கிருஷ்ணராஜ் வாணவராயர், டாக்டர் லக்ஷ்மிபதி, டாக்டர் துல்ஜா ராமராவ் ஆகியோர் செய்த ஏற்பாடுகள் எல்லாம் சென்னையைத்தான் ஞாபகப்படுத்தின. தினமும் இரண்டாயிரம் பேர் வந்திருந்து கச்சேரியை முழுக்கக் கேட்டு ரசித்தது பெரிய உற்சாகத்தை அளித்திருக்கிறது. இனி ஒவ்வொரு வருடமும் பொங்கல் இசை விழா உண்டு என்று கடைசி நாளைக்கு, கிருஷ்ணராஜ் வாணவராயர் மேடையில் அறிவித்தபோது மக்கள் ஆரவாரித்து மகிழ்ந்தது எங்களுக்கு அடுத்த விழாவை நடத்த அச்சாரம் போல ஆகிவிட்டது!" என்கிறார் முரளி.

சுதா ரகுநாதன், ஹைதராபாத் பிரதர்ஸ், நித்யஸ்ரீ, சஞ்சய் சுப்பிரமணியம் எல்லாரும் 97 பொங்கல் இசை விழாவில் உண்டாம். 'சங்கீத சாம்ராட்' விருது டி.கே. பட்டம்மாளுக்கு!




• லால்குடிக்கு விருது



• வானவராயர்

**கோ**வைத் தொழிலதிபர்கள் அத்தனை பேருக்கும், சென்னை மியூசிக் அகடமியில் பதிவுசெய்யப்பட்ட இருக்கைகள் இருந்தாலும், அவர்கள் இங்கே வருவதில்லை என்ற குற்றச் சாட்டு ஒன்று உண்டு.

'அங்கே போவானேன்? இங்கேயே நடத்தி விட்டால் போச்சு!' என்று கோவை பாரதிய வித்யா பவன் அரங்கத்தில் இந்த ஆண்டு முதல் ஒரு வார இசை விழா நடத்தி வெற்றியும் கண்டுவிட்டார்கள். 'பொங்கல் இசைவிழா' என்று ஏற்பாடு செய்து, ஒரு வித்துவானுக்கு 'சங்கீத சாம்ராட்' விருதும் கொடுத்து விடுகிறார்கள்.

"லால்குடி தம் மகன் ஜி.ஜே.ஆர். கிருஷ்ணனுடன் ஆரம்ப நாள் கச்சேரி. சௌம்யா, மதுரை சேஷகோபாலன், பாம்பே ஜெயஸ்ரீ, ராஜ்குமார் பாரதி என்று எல்லாருமே பிரபல

**சே**லத்தில், முன்னாள் அமைச்சரும், முன்னாள் சபாநாயகருமான க. ராசாராம் வெகு விமரிசையாக கர்நாடக சங்கீத விழாக்கள், மாதக் கச்சேரிகள் நடத்தி, கலைஞர்களுக்கு ஏராளமான சன்மானம் கொடுத்து வந்தார். 'இப்போது க. ராசாராம் ஓய்வாகத்தானே இருக்கிறார். சேலம் பக்கம் கவனம் செலுத்தக் கூடாதா?' என்று கேட்கிறார் ஒரு சேலத்து ரசிகர்.

— சாருகேசி

# 'மாப்பிள்ளையை' எச்சரித்த எம்.எல்.வி!

திருமணம் நிச்சயமானதும், தம்பதியாகப் போகிறவர்கள் மனம் விட்டுப் பேசிக் கொள்ள சில சந்தர்ப்பங்களை ஏற்படுத்திக் கொள்வது சகஜம்தான். ஆனால் சுதா-ரகுநாதன் விஷயம் கொஞ்சம் வித்தியாசம்.

"எனக்கும் சுதாவுக்கும் திருமணம் நிச்சயமானவுடன், எம்.எல்.வி. அம்மா தன்னைச் சந்திக்கச் சொல்லி எனக்குத் தகவல் தெரிவிச்சாங்க...'' என்று ஆரம்பித்தார் ரகுநாதன்.

''கிருஷ்ணகான சபாவில் அவரது இசை நிகழ்ச்சி. அரங்கில் நுழைந்தேன். எம்.எல்.வி. அம்மாவிடம் சுதா என்னைச் சுட்டிக்காட்டினாள். புரிந்து கொண்ட அவர் புன்னகையுடன் 'ரகு வர' என்கிற பாட்டைப் பாடத் தொடங்கினார்!

பின்னர் என்னைச் சந்தித்த போது சொன்னார் : 'சில விஷயங்களை உனக்குத் தெரியப் படுத்தணும்ன்னுதான் கூப்பிட்டனுப்பினேன். இது ரொம்ப சிரமமான தொழில். வருங்காலத்தில் சுதா நல்லா முன்னுக்கு வருவா. புகழ்பெற்ற பிறகு அவளுக்குத்தான் எல்லோரும் முக்கியத்துவம் கொடுப்பாங்க. இது உனக்கு எந்த காம்ப்ளெக்ஸையும் பின்னாளில் ஏற்படுத்தக் கூடாது என்று சொன்னார்.'

ஒருவேளை அந்த அறிவுரை தான் 'சுதாவின் கணவர்' என்றே பல இடங்களில் அறியப் பெற்றாலும், ரகுநாதனைச் சிராகவே இருக்க வைக்கிறதோ?

"இன்னொன்றையும் சொன்னால்தான் நான் சொன்னது முழுமை பெறும். குடும்ப வாழ்க்கையின் போக்குக்கு சுதாவின் இசை எந்தவிதத்திலும் குறுக்கிடக்கூடாது என்பதை முதலிலேயே அவளிடம் தெளிவு படுத்தினேன்" என்றார்.

இந்த இடத்தில் தானும் கொஞ்சம் விளக்கினார் சுதா. "சில கலைஞர்கள், தங்கள் தொழில் பாதிக்கப்படும் என்பதால் குழந்தை பெற்றுக் கொள்வதைக் கூட தள்ளிப் போடுவதுண்டு. நான் அப்படி இருக்கக் கூடாது என்றார். அதே போல் குடும்ப விசேஷங்களிலெல்லாம் நானும் கட்டாயம் கலந்து கொள்ள வேண்டும் என்றார். இதற்கெல்லாம் நான் முழு மனதோடு ஒத்துக் கொண்டேன்."



தம் கணவரைப் பற்றி சுதா "இவர் ஒரு காரியத்தைச் செய்ய ஒப்புக் கொண்டால் அதை அரைகுறையாக விடவே மாட்டார். முழுவதுமாக முடித்து விட்டுத்தான் ஓய்வார். அதே சமயம் டக்கென்று கோபம் வந்துவிடும். வானிலை போல, இவர் கோபமும் எப்போது வரும் என்பதை யூகிக்க முடியாது. வீடுதானே, நம் செளகரியத்திற்கு ஏற்ப கொஞ்சம் முன்பின்னாக இருக்கலாம் என்று நான் நினைப்பேன். இவரோ, வீட்டில் ரொம்ப ஒழுங்கு முறையை எதிர்பார்ப்பார்!"

இன்னொரு விஷயத்திலும் தாங்கள் மாறுபட்ட குணத்தைக் கொண்டிருப்பதாக இருவருமே ஒப்புக் கொண்டார்கள். சுதா ரொம்ப சென்டிமென்ட் பார்ப்பவர். ரகுநாதன் ரொம்பவும் பிராக்டிகலாக யோசிப்பவர். உதாரணத்திற்கு ஒரு சம்பவத்தைக் குறிப்பிட்டார்கள்.

அப்போது இவர்கள் மகன் கெளஷிக்கிற்கு ஆறு வயது.

## சுதா ரகுநாதன்

சுதா இரண்டாவது குழந்தையை வயிற்றில் சுமந்து கொண்டிருந்தார் - ஆறாவது மாதம். சுதாவின் அம்மா வீட்டில் தங்கி, படித்துக் கொண்டிருந்தான் கௌஷிக்.

"இங்கேதான் கீழே விளையாடிக் கொண்டிருந்தான் கௌஷிக். திடீரென்று காணோம். அக்கம்பக்கமெல்லாம் தேடிப் பார்த்தோம். பலன் இல்லை" என்று அம்மாவிடமிருந்து தகவல் வர, சுதா இடிந்து போய் விட்டார். உடனடியாக கச்சேரி ஒன்றுக்குக் கிளம்ப வேண்டிய அவசரம். அதேசமயம் எமோஷனலாக அப்செட் ஆனாலும் உடல்நிலை பாதிக்கப் படலாம்.

ரகுநாதன் அமைதியாக, "இப்போது நம்மால் முடிந்தது மகனைத் தேடுவது ஒன்றுதான். அதை நான் செய்கிறேன். நீ கச்சேரிக்குப் போகாமல் ரசிகர்களை ஏமாற்ற வேண்டாம். புறப்படு" என்றார். மனமில்லாமல் புறப்பட்ட சுதா, கச்சேரிக்கு நடுநடுவே வீட்டை தொலைபேசியில் தொடர்பு கொண்டிருக்கிறார். ரகுநாதன் தெருத் தெருவாக தேடிப் பார்க்க, அட்லாண்டிக் ஒட்டலிலிருந்து "உன்னே நிறைய





ரூம்ஸ் இல்லே?" என்று தன் நண்பனிடம் பேசியபடி வெளியே வந்துகொண்டிருந்தானாம் கௌஷிக்!

"அந்த ஒரு கலவரமான சூழ்நிலையிலும் என் கணவர் பதற்றப்படவில்லை என்பதால், இந்த நிகழ்ச்சி என் மனத்தில் பளிச்சென்று பதிந்து விட்டது" என்றார் சுதா.

இப்போது முதல் வகுப்பில் படிக்கும் மாளவிகாவுக்கு, அந்தப் பெயரை இவர்கள் வைத்ததற்குக் காரணம் M, L, V ஆகிய எழுத்துக்கள் அந்தப் பெயரில் இருப்பதும், கூப்பிடும் போது "எம்.எல்.வி அக்கா" என்றே தொனிப்பதும்தானாம்! கண்டிப்பில்லாத ஆசிரியையாக வருங்காலத்தில் வருவதுதான் தம் லட்சியம் என்றாள் மாளவிகா! தபால் தலைகள் சேகரிப்பதைப் பொழுதுபோக்காகக் கொண்டிருக்கும் கௌஷிக், பொது அறிவை வளர்க்கும் விதத்தில் உருவாக்கப்பட்ட "Quest" என்ற காலனி இதழ் ஒன்றுக்கு ஆசிரியராக இருந்திருக்கிறான்!

— குல்லூ

படங்கள் : யோகா

"இன்னும் ஒரு கரண்டி பாயசம்...?"

"போதும்! போதும்!" இலை மீது கவிழ்ந்து மறுத்தாள் சுகன்யா.

"எனக்காக மன்னி..." இனிமையில் முக்கியெடுத்து வசந்தி கேட்டபோது நேராக அவள் கண்களுக்குள் பார்க்கத் தோன்றியது.

'முந்தைய இரவின் நிகழ்வுகள் எல்லாம் வெறும் துர்க் கனவுதானா...?' நம்ப முடியாமல் பாயசத்தைக் கிண்ணத்தில் வாங்கிக் கொண்டாள்.

வசந்தி சிரித்துவிட்டு அடுத்த இலையை கவனிக்கப் போனாள்.

# உள்ளே வரலாமா? 20



சம்பந்தி விருந்தின் இரண்டாவது பந்தி சேகர் வீட்டில். முதல் பந்தியில் சாப்பிட்டு முடித்த வசந்தி ஏதோ ஏழெட்டு வருடமாக அங்கு புழங்கிய சுவாதீனத்துடன் சமையலறைக்குள் போனாள். வாளியைத் தூக்கி வந்து பரிமாறினாள். உண்டு முடித்தவர்களுக்கு வெந்நீர், வெற்றிலை என்று தேவை கேட்டு உபசரித்து உச்சி குளிரச் செய்தாள்.

பார்க்கப் பார்க்க சுகன்யாவுக்கு வியப்பு கொள்ளவில்லை. நாம்தான் ஏமாந்து போய்விட்டோமோ...? நினைத்தது போல் நேற்றிரவு தூக்கத்திலும் பயத்திலும் நகரவில்லையா.... விடியும்வரை முழுசாக ஆறு மணி நேரம் இருந்ததே? எந்த கணத்திலும் வசந்தியின் பயம் விலகியிருக்கலாம்; சேகரின் ஏமாற்றம் கரைந்திருக்கலாம். அப்படித்தான் ஆகியிருக்க வேண்டும்... இல்லை, அப்படித்தான் நேர்ந்திருக்கிறது. அதில் என்ன சந்தேகம்...?

'வசந்தியிடம் கேட்டு உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். வேண்டாம்... ஏதாவது கேட்கப் போய் இந்த இயல்பு நிலை குலைந்து விட்டால்...? சேகர்! சேகரிடம் கேட்கலாம். அது இன்னும் சுலபம்' என்று தோன்றியது சுகன்யாவுக்கு.

"என்ன சுகி.. சாப்பிட்டு முடிக்கற ஐடியாவே இல்லையா...? வீட்டுக்குப் போகணும். பாக் பண்ணணும். பாம்பேல இரண்டு நாள் வேலை இருக்கு. இன்னைக்கு ராத்திரியே கிளம்பணும்னு சொன்னேனே.. மறந்துட்டியா...?" பக்கத்திலிருந்த ஸ்ரீராம் இலேசாக முழங்கையால் இடித்து ஞாபகப்படுத்தினான்.

"மறக்கலை..." அவசரமாகத் தலையாட்டிவிட்டு, பாயசத்தை

விழுங்கினாள். "கிளம்பலாம்..."

# வையவன் ?

தாம்பூலம் பெற்றுக் கொண்ட போது, வசந்தி, நாத்தனார் குழந்தையை இடுப்பில் இருத்தியபடி வழியனுப்பினாள்.

"ஆன்டிக்கு 'டாட்டா' சொல்லும்மா மது.." என்று அதன் பிஞ்சுக் கையைப் பிடித்து அசைத்துக் காட்டினாள்.

'இப்பத்தான் நிம்மதியாயிருக்கு...' வசந்தியிடம் சொல்லிவிடலாம் என்று எழுந்த வார்த்தைகளை அடக்கி, சேகரைத் தேடினாள் சுகன்யா.

"ரொம்ப தாங்க்ஸ்!" என்றபடி வந்தவனுடன் இரண்டு நண்பர்கள்.

"எதுக்கு...?" ஸ்ரீராம் அவன் தோளைப் பற்றிக் கொண்டு கேட்டான்.

"எல்லாத்துக்கும்தான்! குறிப்பா இதுக்கு..." வசந்தியைப் பிடித்திழுத்துப் பக்கத்தில் நிறுத்திச் சொன்னான். அவள் கூச்சத்துடன் நெளிய, சுகன்யாவின் அத்தனை சந்தேகங்களும் பயங்களும் ஆவியாகிப் போயின.

இதைத் தவிர வேற டை கிடையாதா உன்கிட்டே...?" கருநீலப் பின்னணியில் சிவப்பு மாங்காய் வடிவங்களுடனிருந்த கழுத்து டையைக் காட்டிக் கேட்டான் சுகி.

"இன்னும் இரண்டு இருந்தது... அதை குமார் ஏதோ காலேஜ் டிராமாவுக்கு வேணும்னு கொண்டு போனான். அப்புறம் திருப்பித் தரலை...."

"ஒரு டையை வைச்சுக்கிட்டு எப்படி ஆறு வாரம் ஓட்டுவே...?"

"நான் என்ன ஃபாஷன் ஷோவுக்கா போறேன்...? சாஃப்ட்வேர் விக்கணும்! அவ்வளவு தானே? அது விக்கும்..."

"இதோ பாரு! இந்தப் பேச்செல்லாம் உன் பாஸ் ராஜுகிட்டே வைச்சுக்கோ... என் புருஷன் ஸ்மார்ட்டா இருந்தாதான் எனக்குப் பிடிக்கும்... உனக்கு இன்னும் இரண்டு டையாவது தேவை. இப்ப போய் வாங்கலாம்."

இரண்டு சூட்கேஸ்களில் ஸ்ரீராமின் உடைகளையும் அலுவலகக் காகிதங்களையும் அடுக்கி முடித்தவன் எழுந்தான்.

"வா, போகலாம்..."

"எங்க...?"

"டை வாங்க..."

"சுகி ப்ளீஸ்! உனக்கு கருணையே இல்லையா? இன்னும் ஆறு மணி நேரத்துல நான் ஏர்போர்ட்டுக்குக் கிளம்பணும்! போனா திரும்பி வர ஆறு வாரம் ஆகும். நீயானா ஆறு நிமிஷம்கூட என் பக்கத்துல உட்கார மாட்டேங்கற..."

"டை...!"

"பாம்பே ஆபிஸ்ல வனிதா, ரேணுன்னு இரண்டு அழகான மார்கெடிங் எக்ஸிகியூடிவ்ஸ் இருக்காங்க... அங்க இருக்கிற இரண்டு நாள்ல அவங்களைக் கூட்டிட்டுப் போய் அரை டஜன் டை வாங்கிக்கிறேன்... ஓ...கே...?"

"ஸ்ரீராம் எனக்குப் பொறாமை ஏற்படுத்தணும்னு பார்க்கறியா...? ஸ்டுப்பிட்! யூ ஆர் கிரேஸி..."

"யூ ஆர் ஜெலஸ்...! இல்லைன்னு சொல்லேன் பார்க்கலாம்..."

"அமெரிக்கா போறதுனாலே பெரிய கொம்பு முளைச்சதா நினைப்போ... சும்மா உளறாதே..." - உச்ச ஸ்தாயியில் கத்திவிட்டு விசித்து விசித்து அழுதாள் சுகன்யா.

பதறிப் போய் அவளருகே உட்கார்ந்தான் ஸ்ரீராம். அவன் மடியில் முகம் புதைத்துக் கொண்டு கடக் கட கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தாள் சுகி.

சிதைந்து போன குழந்தைக் கனவு. மீண்டும் உடனே கருவுறக் கூடாது என்ற டாக்டரின் எச்சரிக்கை. வசந்தியின் கல்யாணப் பொறுப்பு. அதன் காரணமாக விழுந்த ஸ்பரிச இடைவெளி... இப்போது இருவரையுமே எதிர்நோக்கியிருக்கும் ஆறு வாரப் பிரிவின் பயமுறுத்தல்...

பிறர் சுமைகளையும் பிரச்னைகளையும் சேர்த்துத் தாங்கித் தளர்ந்த தோள்கள் துவண்டே போயின. உறுதியும் உத்வேகமும் படைத்த இளம் மனங்கள் இளகி வசமிழந்த நிலையில் வார்த்தைகள் விகாரமாய் வெளிப்பட்டன. நிகழப்போகும் பிரிவுக்கு யாரையும் குற்றம் சொல்ல முடியாத நிலையில் ஒருத்தரை ஒருத்தர் குழந்தைத்தனமாய்க் காயப்படுத்திக் கொண்டு தவித்தார்கள். பின்னர் அதற்குக் களிம்பும் தேடிக் கொண்டார்கள்.

"சுகி சுகி... ப்ளீஸ் என்னைப் பாரு..." கெஞ்சிக் கெஞ்சி அவள் முகத்தை நிமிர்த்தினான். ஈர இமைகளை முத்தமிட்டு அவளை அணைத்தபோது புடைவைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டாள்.

"என்னாச்சு... புதுப்பொண்ணு மாதிரி... வெட்கப்படறே..."

"இல்ல, டாக்டர்... வேண்டாம் ஸ்ரீராம்" என்று குரல் நடுங்க அவனிடம் ஒண்டிக் கொண்டாள்.

"டு ஹெல் வித் எவ்ரிதிங்..." அவள் பதிலுக்காக அவன் காத்திருக்கவில்லை.

பௌர்ணமி அலையாகப் பொங்கிய மோகம் தணிந்து அடங்கிய பின்னும் சந்தோஷச் சிற்றலைகளால் அந்த அறையே ஆக்கிரமிக்கப்பட்டுக் கிடந்தது.

சுகன்யாவின் ஒவ்வொரு விரலாக நீட்டி மடக்கியபடி கணக்கு போட்டான் ஸ்ரீராம்.

"முதல் வாரம் கஷ்டமா இருக்கும். இரண்டாவது வாரம் அதைவிட கஷ்டமா இருக்கும், மூன்றாவது வாரம் அதைவிட கஷ்டமா இருக்கும்; நாலாவது வாரம்..."

"பழகிப் போயிடும்..." அவன் வெற்று மார்பில் ஒரு முட்டு முட்டி அவள் சொல்ல.

"என்ன சொன்னே...?" பொய்க் கோபத்

## தங்க நகை பரிசு!

இந்த இருபத்தாறு வாரத் தொடர், ஒவ்வொரு வாரமும் ஒவ்வொரு கதாசிரியர் பெயரில் வெளியாகி வருகிறது. ஆனால் அவர்களுள் ஒரே ஒரு நபர்தான் இதை எழுதி வருகிறார். தொடரை எழுதியவர்

துடன் அவன் கூந்தலைப் பற்றி அவன் உலுக்க...

வாசல் மணி பெரிதாக அடித்தது.

அவசரமாக புடைவையை சரி செய்து கொண்டு போனாள் சுகன்யா.

பக்கத்து வீட்டு சரோஜா... "உங்களுக்குப் போன் வந்திருக்கு சுகன்யா! சேகர்னு ஒருத்தர் பேசறார்..."

"இதோ வரேன்... ஒரு நிமிஷம் லைன்ல இருக்கச் சொல்லுங்க..."

ஸ்ரீராமிடம் சொல்லிவிட்டு, செருப்பை மாட்டிக் கொண்டு ஓடினாள்.

"ஸாரி சுகன்யா! தொந்தரவு பண்றேனா...?" என்றான் சேகர்.

"நோ நோ! அப்படியெல்லாம் ஒண்ணுமில்லை..." அடுத்து என்ன சொல்வது என்று புரியாமல் அவன் பேசக் காத்திருந்தாள்.

"நான் வெளில போன் பூத்லேயிருந்து பேசறேன், சுகன்யா... வந்து... வசந்தி விஷயம்தான்..."

"உம்..." என்பதற்கு மேலாக எதுவும் சொல்ல முடியாமல் காத்திருந்தாள் சுகன்யா.

"நேத்து ராத்திரி அவ தூங்கவேயில்லை... நானும் தூங்கலை. ஆனா ஒரு வார்த்தைகூட பேசிக்கலை. காலைல எழுந்தப்பறம் வேற வசந்தியா மாறிட்டா. எல்லார் முன்னாலயும் ரொம்ப இயல்பா சாதாரணமா இருக்கா. எனக்கு ஒண்ணுமே புரியலையே சுகன்யா...?"

"கவலைப்படாதே சேகர்..." காலையில் உதித்த புதிய நம்பிக்கைகள் தகர்ந்துபோன ஏமாற்றத்தை வெளிக்காட்டாமல் சொன்னாள் சுகன்யா.

"நான் என்ன செய்யணும்னே தெரியலையே... உடனே ஏதாவது டாக்டர் உதவி கேட்கணுமா? பேசாம விட்டுப் பிடிக்கணுமா...?"

"சேகர்! இது பக்கத்து வீட்டு நம்பர்..."

"எனக்குத் தெரியும் சுகன்யா. அங்கேயிருந்து நீங்க பதில் பேச முடியாதுன்னு தெரியும். ஆனா யார்கிட்டேயாவது பேசலைன்னா பயமாக இருக்கு... உங்களைத் தவிர வேறு யார்கிட்டே நான் இதைப் பத்திப் பேசறது... ஸ்ரீராம்கிட்டே சொல்லலாம்... ஆனா அவர் வெளிநாடு போற மும்முரத்துல இருப்பார்... இந்த நேரத்துல அவருக்குக் கவலை தரக்

யார் என்பதைக் கண்டுபிடிப்பது உங்கள் சாமர்த்தியம். கடைசி வாரம் வரை காத்திருந்து, அந்த இதழில் வெளியாகும் கூப்பனில் விடை எழுதி அனுப்புங்கள். சரியான விடைக்கு, தங்க நகை பரிசு! பலர் சரியாக எழுதினால் குலுக்கலில் ஒருவரே பரிசு பெறுவார். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

கூடாது..."

"ரொம்ப தாங்க்ஸ் சேகர். உன் முடிவு சரியானது..."

"நீங்க ஸ்ரீராமை வழியனுப்ப ஏர்போர்ட்டுக்குப் போகலை...?"

"இல்லை. டாக்ஸி ஏற்பாடு பண்ணியிருக்கு..."

"எத்தனை மணிக்கு வரும்...?"

"சாயந்திரம் ஆறு மணிக்கு..."

"அதை கான்ஸல் பண்ணிடலாம். நான் வந்து உங்க இரண்டு பேரையும் ஏர்போர்ட்டுக்கு அழைச்சுட்டுப் போறேன்."

"உனக்கெதுக்கு சிரமம் சேகர்... மேலும் இனிமே டாக்ஸியை கான்ஸல் பண்றதுன்னா நேரம் இல்லையே..."

"கவலைப்படாதீங்க! அதை நான் பார்த்துக்கறேன். ஏர்போர்ட்லேயிருந்து திரும்பி வரும்போது உங்ககூட பேச எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்கும்..."

"சரி..."

சரோஜாவுக்கு நன்றி சொல்லிவிட்டுத் திரும்பியபோது ஸ்ரீராம் கேட்டான்.

"யார் போன் பண்ணது...?"

"சேகர்..." என்றதும் ஒரு கேள்விக்குறியுடன் அவளைப் பார்த்தான்.

"உன்னை ஏர்போர்ட்டுக்கு அழைச்சுட்டுப் போக அவனே வரானாம்..."

"ஓ! டாக்ஸி...?"

"பரவாயில்லை. கான்ஸல் பண்ணிடலாம்ங்கறான். இங்க வந்த பிறகு காசு கொடுத்துதான் அனுப்பணும்! வேற வழியில்லை..."

"ஒரு விதத்துல நல்லதாப் போச்சு..." என்றான் ஸ்ரீராம்.

"கல்யாணம் ஆனப்புறம் நான் வசந்திகிட்டே சரியாவே பேசலை. அவளைப் பார்த்துப் பேசி, கொஞ்சம் பொழுது அவளோட இருந்த மாதிரியும் இருக்கும்..."

"வசந்தி வரப்போறதில்லை..." என்று சொல்லும் தைரியம் சுகன்யாவுக்கு எழவில்லை.

சேகர் மட்டுமே காரில் வந்து இறங்கும்போது என்ன விளக்கம் கொடுக்கப் போகிறான்? புதுப் பொண்டாட்டியை வீட்டில் விட்டுவிட்டு, கல்யாணமான மறுநாள் மாலையே ஒரு மாப்பிள்ளை என்ன தலை போகிற காரியத்துக்குத் தனியாகப் போகிறான் என்கிற கேள்வி அவன் வீட்டில் எழாதா... வசந்தியிடம் என்ன பொய் சொல்லிவிட்டு வரப் போகிறான்?

எல்லா பொய்களும் முன் கூட்டியே தெரிந்திருந்தால் சமாளிப்பது எவ்வளவு சௌகரியம்...!

ஸ்ரீராமின் பெட்டிகளைப் பூட்டி, சாவிக் கொத்தை அவன் பர்ஸ் அருகே வைத்து விட்டு சமையலறைக்குப் போனபோது மீண்டும் வாசல் மணி அடித்தது.

"அப்பா வந்திருக்கார்." கதவைத் திறந்த ஸ்ரீராம் அறிவித்தான்.

கல்யாணக் களைப்பில் இருப்பார்கள் என்பதால் காலையிலேயே அனைவரிடமும் விடைபெற்று வந்து விட்டான் ஸ்ரீராம். ஆனாலும் மனசு கேட்காமல் அவனை வழியனுப்ப வந்திருக்கிறார்.

சேகர் வருவதற்கு முன்பாக இவரை இங்கேயிருந்து ஏறக்கட்டியாக வேண்டும். எப்படி...? ஆனால் ராமநாதன் சாவகாசமாய் இருந்தார்.

"ஸ்ரீராமா! பாக்கிங் எல்லாம் முடிச்சிருப்பேன்னு தெரியும். உங்கிட்டே கொஞ்சம் தனியா பேசணும்னுதான் வந்தேன்."

காப்பியைக் கொண்டு வந்த சுகன்யாவுக்குத் தலை சுற்றியது!

'கடவுளே! இது என்ன தனியாகப் பேசும் சிறப்பு தினமாக விடிந்ததா... இன்னும் என்ன புதுக் குழப்பமோ...'

இங்கிதமாக அகன்று போக இருந்தவளைத் தடுத்து நிறுத்தினார் மாமனார். "நீயும் இரும்மா... ஒண்ணும் பெரிய ரகசியமில்ல..."

"ஏதோ ஒரு வேகத்துல பணம் வேண்டாம்னு சொல்லிவிட்டேன், ஸ்ரீராம்! இப்ப அது தேவையா இருக்கு... ஊருக்குக் கிளம்பற நேரத்துல தொந்தரவு பண்றேன்னு கஷ்டமா இருக்கு... ஆனா நான் வேற யாரைப் போய்க் கேட்பேன்?"

"நீங்க யாரையும் கேட்க வேணாம்பா... நானே தயாரா வைச்சிருக்கேன். அதுவும் சுகிதான் முன் யோசனையா சொல்லிக் கொடுத்தா... எதுக்கும் லோன் அப்ளை பண்ணி ஷார்ட்டெர்ம் டெபாஸிட்ல போட்டு வைக்கலாம்னு... ஜாயின்ட் அகவுன்ட்தான். நாளைக்கு அவளே கையெழுத்துப் போட்டுக் கொடுத்துடுவா... நீங்க டிரா பண்ணிக்குங்க... அம்பதாயிரம் வரைக்கும் எடுத்துக்கலாம்..."

"எனக்கு முப்பதாயிரம் போதும்பா... நான் உனக்கு நன்றி சொன்னா நல்லாயிருக்காது... ஆனா இப்படி ஒரு புத்திசாலி மருமகளை எனக்கு அனுப்பி வைச்ச ஆண்டவனுக்கு நன்றி சொல்றேன்..." என்றார் ராமநாதன்.

பிரமிக்கவோ, நெகிழவோ சுகன்யாவுக்கு அவகாசம் தராமல் சேகரின் கார் வாசல் கேட் அருகே வந்து நின்றது.

(தொடரும்)

# ஆஹ்ஹாஹ்ஹா...

"எஃப்.ஐ.ஆர். பதிவு பண்ணணுமா...? முதல்வர், பிரதமர், மத்திய அமைச்சர்னு யாராவது சிபாரிசு பண்ணியிருந்தா வாங்க..."







"என் பிரச்னையை இவர் தீர்த்து வைப்பாருங்கறீங்க...? என் கஷ்டங்களைச் சொல்லி முடிக்கிறதுக்குள்ளேயே தூங்கிட்டாரே...!"

"என் சொத்துக்கள் பட்டியலை நான் கொடுக்கத் தயார். என் மனைவி, மகன்கள், பெண்கள், மாமியார் மாமனார், வேலைக்காரர்கள், என் நாய்.... இவங்க சொத்து விவரத்தை மட்டும் கேட்காதீங்க..."







"ஏன் பயப்படறீங்க? ஆவணங்களை எரிக்கவும், ஃபைலையெல்லாம் கலைக்கவும், தடயங்களை அழிக்கவும் போதுமான அவகாசம் கொடுத்துட்டுத்தானே நாங்க வந்திருக்கோம்...."

— இந்தியன் ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்



• ஈடுபாடு எங்கே?





• மகிழ்ச்சியே!

# சோனியாவால் காங்கிரஸ் புத்துயிர் பெறுமா?

● பழங்கூர் மீரா முருகன்,
திருக்கோவிலூர்.

*? சினிமா கட்டணச் சீரமைப்புத் தொடர்பாக...?*

! முன்பெல்லாம் சில சமூக விரோதிகள்தாம் கவுண்டரில் டிக்கெட் வாங்கி பிளாக்கில் விற்றுக் கொண்டிருந்தார்கள். ஆனால் இப்போதோ, தியேட்டர்காரர்களே பிளாக்கிலும் டிக்கெட் விற்கிற காலம்! மக்கள் பிளாக்கில் வாங்க மறுத்தால்தான் உண்டு! ஒருநாள் மறுத்தாலே போதும். மறுநாளே கறுப்பு டிக்கெட் வியாபாரம் படுத்துவிடும்!

● எஸ்.கே. மூர்த்தி,
கும்பகோணம்.

*? பெட்ரோல் விலை ஏறும் என்று சிதம்பரம் கூறியிருக்கிறாரே...?*

! ப்பூ! இதென்ன பெரிய அதிசயம்...? இறங்கும் என்று சொன்னால்தான் அதிசயம்.

● வி. சத்தியப்ரியன், சென்னை – 15.

*? 'சினிமா வில்லனைப் போல செயல்படுகிறார் ஜெயலலிதா – தோழி சசியைக் காப்பாற்றத் துடிக்கிறார்' என எஸ்.டி.எஸ். கூறியுள்ளது பற்றி...?*

! உவமையே தவறு. வில்லன்கள் யாரையும் காப்பாற்றத் துடிப்பதில்லை; கவிழ்க்கத்தான் முயற்சி செய்வார்கள்.

● ச. தேவி, விருதுநகர்.

*? சோனியா காந்தியின் வரவால் காங்கிரஸ் கட்சி புத்துயிர் பெற்றுவிடுமா?*

! கட்சி புத்துயிர் பெறலாம்... ஆனால் மக்கள் ஏற்றுக் கொள்வார்களா என்பது சந்தேகமே... ஒருவேளை ராகுல் அல்லது ப்ரியங்கா வந்தால் மக்கள் ஏற்றுக் கொள்ளக்கூடும்.

● தி. மனோகரன், நெற்குப்பை.

*? பெட்ரோல் மூலிகை சாத்தியப்பட்டால் இந்தியாவின் எதிர்காலம்...?*

! மூலிகைப் பெட்ரோல் என்பதே வெறும் ஏமாற்று என்று உறுதிசெய்து விட்டார்களே...! அனைவரையும் ஏமாற்றிய குற்றத்துக்காக ராமர் பிள்ளையும் 'உள்ளே' போக வேண்டியிருக்கலாம். அவருக்குத் தரப்பட்ட சலுகைகளை யாவது தமிழக அரசு உடனடியாக ரத்து செய்ய வேண்டும்.

● என். விஷ்ணுசந்திரன், இலந்தப்பட்டி.

*? 'காங்கிரஸுடன் ஒருபோதும் மோத மாட்டேன்' என்கிறாரே பிரதமர்?*

! மோதினால் உடைவது எந்தப் பக்கம் என்பது அவருக்குத் தெரியும்!

● அ. கிருஷ்ணகுமார், பு. புளியம்பட்டி.

*? ரயில் பயணம் தாமதமாகிறது; விமானப் பயணம் விபத்துக்குள்ளாகிறது – எதில் பயணம் செய்வது நல்லது?*

! ரயில்கள் தாமதமாவது மட்டுமல்ல; குண்டு வேறு வெடிக்கிறது. பிளாட்பாரத்தில் நடக்கும் போது கூட ஏதேனும் வாகனம் வந்து இடித்து விட்டுப் போகலாம்... அதற்காக பயந்து கொண்டே செயல்படாமல் இருக்க முடியுமா?

● வேடப்பட்டி கத்துவேல், விளாத்திகுளம்.

## நீங்கள் கேட்டவை – தராசு



• சென்ட் தயாரிப்பாளர் கவனிக்க!

? இந்திய கிரிக்கெட் அணியில் அடிக்கடி வீரர்களை மாற்றிக் கொண்டே இருப்பதால், அணிக்கு பலமா? பலவீனமா?

! இப்படிப்பட்ட மாற்றங்கள் ஒரு தன்னம்பிக்கையின்மையை உணர்த்தத்தான் செய்கின்றன. அதே சமயம், ராபின் சிங், ராமன் போன்ற தமிழக ஆட்டக்காரர்களுக்கு வாய்ப்பு கிடைப்பதில் சந்தோஷம்.



• உவமைக் குழப்பம்

● எஸ். விஜயலதா, தூத்துக்குடி – 1.

? நூறு சதவிகிதம் மதிப்பெண் பெறச் செய்வதில் கவனம் செலுத்தும் கல்வி நிறுவனங்கள், மாணவர்களிடையே ஒழுக்கத்தை வளர்ப்பதில் தவறி விடுகின்றனவே?



• மோதமாட்டார்!

! ஒழுக்கத்தைத் தனியாக வளர்க்க முடியாது. கல்வி என்பதே மதிப்பீடுகளை உள்ளடக்கியதாக, சிந்தனையைத் தூண்டுவதாக அமைய வேண்டும். அப்படியிருந்தால், கட்டுப்பாடும் ஒழுக்கமும் தானாக வளரும்.

● எஸ். எஸ். வாசன், தென்எலப்பாக்கம்.

? தமிழகத்தில் அ.தி.மு.க. – காங். கூட்டணி ஏற்பட்டால் ஆட்சி அமைக்க முடியுமா?

! எந்த அ.தி.மு.க.? எந்த காங்கிரஸ்?

● நீடா. சி. இளஞ்செழியன், சாலியமங்கலம்.

? மைக்கேல் ஜாக்சன் என்னைத் தொட்டுவிட்டதால், இனி குளிக்கப்போவதில்லை என்று ஒரு பெண் ரசிகை முடிவெடுத்திருப்பது பற்றி...?

! சந்தோஷம்! 'சென்ட்' உற்பத்தியாளர்கள் அவரைத் தங்கள் மாடலாக இருக்க அனுமதிக்கலாமே!

● ஆர். முருகானந்தம், எஸ். மாரியூர்.

? இளமையில் கஷ்டப்படுவது முன்னேற்றத்திற்கு அறிகுறியா...?

! 'இறைவன் விதித்த விதி இது!' என்று முடங்கிக் கிடக்காமல், 'நம்மால் இதிலிருந்து மீள முடியுமா? என்று இறைவன் சோதிக்கிறான்' என எண்ணம் கொண்டு முயற்சி செய்பவர்களுக்கு, நிச்சயம் அது முன்னேற்றத்துக்கான அறிகுறிதான்.

● டி. இரமேஷ், சென்னை – 79.

? கோடிகள் கேடிகளிடம் தஞ்சம் புக ஆரம்பித்திருப்பது குறித்து...?

! நாடு முழுவதையும் ஒரு கலாசார சீரழிவும் தார்மீகச் சீரழிவும் ஆக்கிரமித்து இருப்பதுதான் காரணம். பீஹாரில் கால்நடைத் தீவன ஊழலை விஞ்சும் அளவில் இன்னொரு பெரிய ஊழல் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. எந்தப் பொருளும் சப்ளை செய்யாமலே கோடிக் கணக்கில் கணக்கு எழுதி ஏப்பம் விட்டிருக்கிறார்கள். பல்வேறு துறைகளில் இப்படி நடந்துள்ள மோசடியில் எண்ணூறு கோடி வரை கொள்ளை போயிருக்கிறதாம்!

● வி. கே. ராஜசுந்தரம், சென்னை – 55. ❐

? சூயென் லாய் என்கிற சீன அதிபர் நேருஜி காலத்தில் இந்தியாவுக்கு விஜயம் செய்த கையோடு இந்தோ–சீன யுத்தம் மூண்டது. இப்போது சீன அதிபர் வந்து போயிருக்கிறாரே... என்ன ஆகும் என்று நினைக்கிறீர்கள்?

! சூயென் லாய் செய்த மோசடி இன்றும் தொடரும் என்று எண்ண வேண்டியதில்லை. ஆனால், எச்சரிக்கையாக இருக்க வேண்டியதும் அவசியம் – இல்லாவிட்டால் 'முன் அனுபவம் கற்றுத் தந்த பாடத்தைக் கூட 'மதிக்கவில்லை' என்கிற அவப்பெயர் வந்து சேரும். நேருவுக்கு ஏற்பட்டதை விடப் பெரிய தலைகுனிவாகிவிடும்.

• புத்துயிர்...?

● செ. சரோஜா, நாட்டரசன்கோட்டை.

? 'தெண்டுல்' குட்டனின் மட்டையடி மந்தமாகிப் போனதன் காரணம் என்ன...?

! முதல் இன்னிங்ஸில் அஷாரும் கும்ளேயும் ஃபாலோ ஆன் தவிர்க்க உதவும் அளவுக்குச் சிறப்பாகத்தான் ஆடினார்கள். ஆனால் இரண்டாம் இன்னிங்ஸில் மகத்தான சரிவு! தோல்விக்குக் காரணம் – 'மோசமான ஃபீல்டிங்; கோட்டை விடப்பட்ட காட்சுகள்' என்கிறார் டெண்டுல்கர். காப்டன் உள்பட யாருமே நிஜ ஈடுபாட்டுடன் ஆடவில்லை என்பதுதான் உண்மை. பாக்கி இருக்கும் ஒரு டெஸ்டில் இழந்த பெருமையை மீட்க முடியுமா பார்ப்போம்...

❐ ரூ. 25 பரிசு பெறுபவர் :
வி.கே. ராஜசுந்தரம்,
Clerk Platoon,
O.D. Avadi, Avadi IAF. P.O.
சென்னை – 600 055.



# ஜெ.கைது!

• லாயிட்ஸ்ரோடு அலுவலகத்தில்....

ஜெயலலிதாவின் முன்ஜாமீன் மனுக்களைத் தள்ளுபடி செய்ததோடு, 'ஜெயலிதாவைக் கைது செய்து விசாரிக்கலாம்' என்ற உயர்நீதி மன்றத் தீர்ப்பு வெளியான 6-ந் தேதி மாலையிலிருந்தே போயஸ் தோட்ட வட்டாரம் மிகவும் உன்னிப்பாகக் கண்காணிக்கப்பட்டது. அதே போல் திருநாவுக்கரசு, பி.எச். பாண்டியன், சேடப்பட்டி ஆகியோர் என்ன செய்கிறார்கள் என்பதையும் கவனிக்க ஆரம்பித்து விட்டனர்.

ஆறாம் தேதி நள்ளிரவிலிருந்து போலீஸாரின் நடமாட்டம் அதிகமானதால் போயஸ் தோட்ட வட்டாரம் பரபரப்பாகி விட்டது. ஆனாலும் 7ம் தேதி காலை ஆறு மணிக்கு மேல்தான் பி.எச். பாண்டியன், சேடப்பட்டி முத்தையா, திருநாவுக்கரசு போன்றோர் தனித்தனியாக ஜெ. வீட்டுக்கு வர ஆரம்பித்தார்கள். ஏழு மணிக்கு மேல்தான் தொண்டர்கள் சிலர் வந்து கூட ஆரம்பித்தனர்.

ஜெ. வீட்டுக்குள் சென்ற திருநாவுக்கரசு, சேடப்பட்டி மற்றும் சிலர், சுமார் ஏழு மணி வாக்கில் வெளியே வந்தனர்.

"நீங்கள் இங்கே எதற்காக இருக்கிறீர்கள்? என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று போலீஸாரைப் பார்த்து திருநாவுக்கரசு கேட்டார்.

"ஜெயலலிதாவைக் கைது செய்யப் போகிறோம்!" என்று சொன்னார் போலீஸ் உயர் அதிகாரி ஒருவர்.

"அப்படியானால் வாரண்டைக் காட்டி, கைது செய்ய வேண்டியதுதானே! எதற்காக இங்கே நின்றுகொண்டு பிரச்னை செய்கிறீர்கள்?" என்றார் திருநாவுக்கரசு.

உடனடியாகச் செயல்பட ஆரம்பித்தனர் போலீஸார். அங்கே கூடியிருந்த தொண்டர்களை இரண்டு போலீஸ் வேன்களில் ஏற்றினார்கள். திருநாவுக்கரசு, சேடப்பட்டி, பா. வளர்மதி போன்றோரையும் ஒரு வேனில் ஏற்றினார்கள். அப்படி ஏற்றும் போது திருநாவுக்கரசின் கார் டிரைவரையும் தெரியாத்தனமாகப் போலீஸார் ஏற்றிவிட, "எனது டிரைவரையும் எதற்காகக் கைது செய்கிறீர்கள்?" என்று திருநாவுக்கரசு கேட்க, டிரைவரை விட்டுவிட்டு, மற்றவர்களை அண்ணா நகர் காவல் நிலையத்துக்கு அழைத்துச் சென்றார்கள்.

ஏழரை மணிவாக்கில் குற்றப் புலனாய்வுத் துறை டி.ஐ.ஜி. ராதாகிருஷ்ண ராஜாவும் மற்றும் சில உயரதிகாரிகளும் ஜெ. வீட்டுக்கு வந்தார்கள். வீட்டுக்குள்ளிருந்த பி.எச். பாண்டியனிடம் ஜெ.வைக் கைது செய்வதற்கான வாரண்டைக் காட்ட, ஜெ.வுக்குத் தகவல் சொல்லப்பட்டது.

8.10 மணிக்கு வருவதாக ஜெ.விடமிருந்து தகவல் வந்தது. பிறகு சிறிது நேரம் கழித்து, 8.45 மணிக்கு வருவதாகச் சொல்லியனுப்பினார்கள்.

ஜெ.வைக் கைது செய்து அழைத்துச் செல்வதற்காக, "வேனை வீட்டுக்குள் கொண்டு வர வேண்டுமா அல்லது வெளியிலேயே இருக்கலாமா?'' என்று போலீஸார் பாண்

# பழைய நினைப்பில் தொ(கு)ண்டர் படை!



• கைதாகி வருகிறார்...

டியனிடம் கேட்டபோது, 'அம்மா வைக் கேட்டுச் சொல்கிறேன்!" என்றார் அவர். நேரமாகிக் கொண்டிருந்த போதும் ஜெ. வராததால் டென்ஷனானார்கள் போலீஸார்.

இதற்குள் 9.45 மணியாகி விட்டது. அப்போதுதான் ஜெ. மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தார். போலீஸ் வேனை உள்ளே கொண்டு வரும்படி சொன்னார்.

உடனே வெளி கேட் திறக்கப்பட்டு வேன் உள்ளே சென்றது. கூடவே பத்திரிகை போட்டோகிராபர்களும் நிருபர்களும் உள்ளே சென்றார்கள். உள்ளே சென்றவர்களை வெளியே செல்லும்படி போலீஸார் தள்ள, இவர்கள் அவர்களைத் தள்ளி விட்டுப் படமெடுக்க ஆரம்பிக்க... ஜெ. வீட்டுத் தோட்டத்திலிருந்த சில பூந்தொட்டிகள் உடைந்து போய் விட்டன! ஜெ.வை வாழ்த்தியும் கருணாநிதிக்கு எதிராகவும் சிலர் கோஷமிட ஆரம்பித்தனர்!

**வெ**ளியில் வந்த ஜெ.வைக் கைது செய்வதாக டி.ஐ.ஜி. ராதாகிருஷ்ண ராஜா தெரிவித்தார். "அதற்குத்தான் வந்திருக்கிறேன்!" என்ற ஜெ, வெராந்தாவில் வைக்கப்பட்டிருந்த அம்மன் படத்தை வழிபட்ட பிறகு போலீஸ் வேனில் ஏறத் தயாரானார்.

அப்போது, "நான் படிப்பதற்குப் புத்தகங்கள் எடுத்துச் செல்லலாமா?" என்று போலீஸாரிடம் கேட்டார் ஜெ.

"எடுத்துச் செல்லலாம்!" என்றார்கள்.

கைது செய்யப்பட்டிருப்பது பற்றி நிருபர்கள் கேட்டபோது, "பழிவாங்கும் படலம் தொடருகிறது!" என்றார் ஜெ. தொண்டர்களைப் பார்த்து, "தைரியமாக இருங்கள்!" என்றார்.

9.50 மணிக்கு ஜெ. வேனில் ஏற்றப்பட்டு, கமிஷனர் அலுவலகத்துக்குக் கொண்டு செல்லப்பட்டார். அங்கு ஒரு மணிநேரம் விசாரணை. பின்னர் முதன்மை செஷன்ஸ் நீதிபதி ராமமூர்த்தி இல்லத்துக்குக் கொண்டு செல்லப்பட்டார். அங்கு ஜெ.வைப் பதினைந்து நாள் காவலில் வைக்கும்படி நீதிபதி உத்தரவிட, பின்னர் மத்திய சிறைக்குக் கொண்டு செல்லப்பட்டார்!

**ஜெ** சிறைக் காவலில் வைக்கப்பட்ட பிறகு போயஸ் தோட்டம் எப்படியிருக்கிறது? தொண்டர்களின் ரியாக்ஷன் என்ன?

மறுபடியும் மதியத்துக்கு மேல் போயஸ் தோட்டத்துக்குச் சென்றபோது, எந்தவிதமான நிகழ்ச்சியும் நடக்காததுபோல் மிகவும் அமைதியாக இருந்தது. ஜெ.கைதுக்குப் பிறகு ஊழல் தடுப்பு மற்றும் கண்காணிப்பு அதிகாரிகள் ஜெ.வீட்டில் சோதனையிட்டுக் கொண்டிருந்த

தால், அவர்களைச் சந்திப்பதற்காகப் பத்திரிகையாளர்களும் போட்டோகிராபர்களும் தான் வாசலில் காத்திருந்தார்கள்.

லாயிட்ஸ் ரோட்டிலுள்ள தலைமைக்கழகத்துக்குச் சென்ற போது, சுமார் முப்பது நாற்பது பேர்தான் இருந்தார்கள்.

"ஜெ. கைது பற்றி ஏதாவது அறிக்கைகள் தயாரித்திருக்கிறீர்களா?" என்று விசாரித்த போது, "எல்லாத் தலைவர்களையும் முன்னெச்சரிக்கையாகக் கைது செய்து, அறிக்கைகள் விடக் கூட சரியான நபர்கள் இல்லாதபடி செய்து விட்டார்களே!" என்று புலம்பாத குறையாகச் சொன்னார்கள்.

தலைமைக் கழக அலுவலகத்தையும் அங்கே கூடியிருந்தவர்களையும் படமெடுத்த போது, "எவண்டா அவன் படமெடுக்கிறது..." என்று அந்தத் தொ(கு?)ண்டர்கள் கத்திக் கொண்டு ஓடி வந்தது இன்னமும் அவர்கள் 'பழைய நினைப்பு' லேயே இருப்பதைத்தான் காட்டியது.

**க**டைசியாக கே.ஏ. கிருஷ்ணசாமியைச் சந்தித்தோம்.

"வாருங்கள். பார்த்து எத்தனை நாளாகி விட்டது!" என்று அவர் கேஷுவலாகப் பேசினார்.

"ரோமானியர்கள் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மகானின் வாழ்க்கையைப் படித்து விட்டு வேலைகளைத் தொடங்குவார்கள்.

"அதற்காக ஒரு புத்தகம். 'Saints of the Roman Calender' என்று பெயர். இதுதான் அது. இதில் இன்றைய டிசம்பர் ஏழாந்தேதிக்கான மகானின் வாழ்க்கையைப் படித்தேன். அவர் பெயர் அம்ரோஸ்.

"ஏழாயிரம் பேரைக் கொன்ற ஒரு சக்கரவர்த்தி சர்ச்சுக்கு வருகிறான். அவனை சர்ச்சுக்குள்ளே விட மறுக்கிறார் அம்ரோஸ். 'நான் சக்கரவர்த்தி!' என்கிறான் அவன். 'யாராக இருந்தாலும் மனந்திருந்தி வருகிறவர்கள்தான் சர்ச்சுக்குள் அனுமதிக்கப்படுவார்கள். மன்னிக்கப்படுவார்கள்!' என்கிறார் அம்ரோஸ்.

"நான் சக்கரவர்த்தி. சர்ச்சுக்கும் மேலானவன்!" என்று அகம்பாவத்தோடு கூறுகிறான் அவன். 'யாராக இருந்தாலும் மற்றவர்களைப் போல அவரும் சர்ச்சில் ஒரு மெம்பர்தானே தவிர, சர்ச்சுக்கு மேலானவர் அல்ல!' (The emperor is a member of the Church, but he is not over the Church) என்கிறார் அம்ரோஸ்.

"நான் படித்த இந்த விஷயத்துக்கும் இன்றைய நிகழ்ச்சிகளுக்கும் எத்தனை பொருத்தமாக இருக்கிறது பார்த்தீர்களா! இதோ நீங்களே பாருங்கள்..." என்று அந்தப் பகுதியை எடுத்துக் காட்டினார் கே.ஏ.கே.

**-பிரின்ஸ்**

படங்கள்: **யோகா**

# ஜாலி போட்டி - 20

# பரிசு ரூ. 5000/-

கீழே உள்ள கட்டங்களில் சிதறிக் கிடக்கும் எழுத்துக்களைத் தேர்ந்தெடுத்துத் தொகுத்துப் பாருங்கள். பத்து இசையமைப்பாளர்களின் பெயர்கள் கிடைக்கும்! கூப்பனில் சரியாக எழுதி எங்களுக்கு அனுப்பினால் ரூ.5000 பரிசு கிடைக்கும்! பலர் சரியாக எழுதிவிட்டால் குலுக்கலில் ஒருவருக்கு அப்பரிசு. கடைசி தேதி **23.12.96.** ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| க | வே | வ | ம் | வி | அ | ன் | ன் | பி | தே |
| ப் | ர் | ஜு | அ | வா | கா | ன் | ன் | லா | ர |
| ர | ரி | க | யு | ஸ் | வ | தே | ர | ஹ | மா |
| ச | வா | ல | நா | ச | த | லே | கி | கு | ப |
| ட | ந் | ணி | க் | ங் | சா | லி | தி | க | மா |

## ஜாலி போட்டி - 20

10 இசையமைப்பாளர்கள்:

1)
2)
3)
4)
5)
6)
7)
8)
9)
10)

பெயர்: ........................................

முகவரி: ........................................

........................................

........................................

........................................

# “ஐ மேக் நியூஸ்!”

**நாம் சென்றபோது சென்னை கிண்டி கவர்னர் மாளிகை களையிழந்து கிடந்தது. டாக்டர் சென்னாரெட்டியின் பல்வேறு இயல்புகளை அவரோடு பழகியவர்களிடமிருந்து சேகரித்தோம்.**



● முழுக்க முழுக்க அவர் ஒரு ‘ஃபாமிலி மேன்’. குடும்பப் பாசம் நிறைய. இரவு சாப்பாடு எல்லோரும் சேர்ந்துதான் சாப்பிடுவார்கள். கவர்னர் வெளியே போய் லேட்டாக வந்தாலும் குடும்பத்தினர் காத்திருப்பார்கள். மனைவி சாவித்திரிதான் அவருக்கு சமையல் செய்து பரிமாற வேண்டும். கடைசி வரை இந்தப் பழக்கம் இருந்தது.

● கையில் எப்போதும் வைத்திருக்கும் சிறிய கைத்தடிக்குப் பின்னால் எந்த ரகசியமும் இல்லை. விதவிதமாய் முப்பது தடிகள் சேர்த்து வைத்திருந்தார். தினமும் மாற்றி மாற்றி எடுத்துக் கொண்டு போவார். 1952-ம் வருடத்திலிருந்து இந்தப் பழக்கம்.

● அசைவப் பிரியர். காலையில் தினமும் டிபனில் பப்பாளிப்பழம் இருந்தாக வேண்டும்.

● கூட சாப்பிடுபவர்கள் தட்டில் ஏதேனும் குறைகிறதா என்று கண்கொத்திப் பாம்பாக கவனித்துக் கொண்டே இருப்பார். பரிமாறுபவரிடம் உடனே சைகை காட்டி அந்தத் தட்டை நிரப்பச் சொல்வார். விருந்தோம்பலின் இலக்கணமாய்த் திகழ்ந்தவர்.

● ‘பளிச்’சென்று வினாடியில் ஜோக் அடிப்பார். ஒருதரம் குடியரசு நாளுக்கு முந்தைய தினம் நியூஸிலாந்து நாட்டு தூதர் நிக் பிரிட்ஜ் கவர்னரைப் பார்க்க ராஜ்பவன் வந்திருந்தார். அப்போதைய முதல்வருக்கும் அவருக்கும் பனிப்போர் உச்ச கட்டத்தில் இருந்த நாட்கள் அவை. பேசிக் கொண்டிருந்த போது, “நாளைக்கு உங்களை கொடியேற்றும் இடத்துக்கு அனுமதிக்கப் போவதில்லை என்று வெளியே பேசிக் கொள்கிறார்களே’ என்றார் நிக். சென்னாரெட்டி சட்டென்று சொன்னார் : “கொடியேற்றும் விழாவுக்குத் தேவையானது இரண்டு. ஒன்று கொடி. இன்னொன்று கவர்னர். இரண்டும் நாளை காலை மெரீனாவில் இருக்கும்.”

● ஒருதரம் ஊழியர் ஒருவர் கேஷுவலாக அவரிடம், “இன்னிக்கு நியூஸ் படிச்சீங்களா ஸார்?” என்று கேட்க, பட்டென்று கிடைத்த

பதில் :"ஐ டோன்ட் ரீட் நியூஸ். ஐ மேக் நியூஸ்."

● தவறு நடந்தால் கோபம் பொத்துக் கொண்டு வரும். வேலூரில் ஒரு விழா. கவர்னர் விழாவுக்குப் போகுமுன்பாக அங்கே பயணிகள் மாளிகையில் தங்கியிருந்தார். விழா அமைப்பாளர்கள் கவர்னர் வரும்போது மாவட்ட கலெக்டரும் தானே வந்து விடுவார் என்று கலெக்டரை உரிய முறைப்படி அழைக்காமல் விட்டு விட்ட விவரம் கவர்னர் காதில் விழுந்தது. கொதித்துப் போய் விட்டார். அமைப்பாளர்களை அழைத்து வாங்கு வாங்கு என்று வாங்கி விட்டார். "உரிய முறையில் கலெக்டரை அழையுங்கள். அதற்கு முன்பு அவரிடம் மன்னிப்புக் கேளுங்கள். நீங்கள் அப்படி கேட்டதை கலெக்டர் வந்து என்னிடம் உறுதிப்படுத்தினால்தான் விழா மேடையில் என்னைப் பார்க்க முடியும்" என்றார் கண்டிப்பாக. கலெக்டர் நெகிழ்ந்து போனார்.

● உருது மீடியத்தில் எம்.பி.பி.எஸ். படித்து பட்டம் பெற்றவர் சென்னாரெட்டி. அவர் பேசும் உருது கேட்டு இங்கே உள்ளூர் உருது விற்பன்னர்களே மூக்கில் விரல் வைத்திருக்கிறார்கள்.

● உதவிச் செயலாளர் குலாம் என்பவர் இறந்தபோது இரண்டு தரம் அவர் வீட்டுக்குப் போய் துக்கம் விசாரித்தார். அவர் பெயரில் நெல்லை மனோன்மணி பல்கலைக்கழகத்தில் ஒரு ஸ்காலர்ஷிப்பை அமைத்தார்.

சமீபத்தில் தன் பேத்தி திருமண வேலைகளில் மும்முரமாக இருந்தபோதும், நாவரக கொலையுண்ட செய்தி கேட்டதும், அவரது பெற்றோரை விசாரிக்கவென்றே சென்னை வந்து துணைவேந்தர் பொன்னுசாமி வீட்டுக்குப் போய் கண்கலங்க விசாரித்து விட்டு, உடனே ஹைதராபாத் போனார். "மகனை இழக்கும் வேதனை எனக்குத் தெரியும். 21 வயதான என் மூத்த மகன் கிருஷ்ணாவை இழந்தவன் நான்" என்று அப்போது துணை வேந்தரிடம் சொன்னார்.

● காந்தி மண்டபம் இவர் வந்த பிறகுதான் பல்வேறு நல்ல காரியங்களுக்குப் பயன்பட ஆரம்பித்தது. பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவை அங்கே நடத்தி பிள்ளையார் சுழி போட்டார்.

● கிரிக்கெட் என்றால் உயிர். ஏதாவது மேட்ச் நடந்து கொண்டிருக்கும்போது அவர் விமானத்தில் வந்து சென்னை இறங்குகிறார் என்றால் வெளியே வந்ததும் 'என்ன ஸ்கோர்? யார் பேட்டிங்?' என்றுதான் முதலில் கேட்பார். அதற்காகவே அதிகாரிகள் தயாராக விவரங்களை சேகரித்துக் கொண்டு போவார்கள்.

● சாய்பாபாவின் தீவிர பக்தர். தனக்குப் போடப்பட்ட சால்வைகளையெல்லாம் உடனுக்குடன் சாயிபாபா ஆஸ்ரமத்துக்கு அனுப்பி விடுவார்.

● சென்னாரெட்டியின் அகராதியில் இல்லாத ஒரு வார்த்தை : 'பயம்'. ஆர்.எஸ்.எஸ். அலுவலகத்தில் குண்டு வெடித்த செய்தி கிடைத்த மறுகணம் அங்கே போக ஆயத்தமானார். 'வேண்டாம். இன்னும் சில குண்டுகள் அங்கே வெடிக்கக்கூடிய அபாயம் இருக்கிறது' என்று அதிகாரிகள் எச்சரித்தார்கள். 'ஸோ வாட்?' என்று சொல்லிக் கொண்டே கிளம்பி விட்டார்.

● அபார தெய்வ நம்பிக்கை. ஆகஸ்டு 15, ஜனவரி 26 மட்டுமே கொண்டாடப்பட்டு வந்த ராஜ்பவனில் ரம்ஸானுக்குப் பிரமுகர்களை அழைத்து பிரியாணி போடும் வழக்கத்தையும், கிறிஸ்துமஸ் பண்டிகையை 'கரோல் பிரேயர்' ஏற்பாடு செய்து கொண்டாடும் வழக்கத்தையும் ஆரம்பித்து வைத்தார்.

● சென்னாரெட்டி அவர்கள் பார்த்த சினிமா - சிறைச்சாலை.

தொகுப்பு : **ராணிமைந்தன்**

---

*"சே! தலைவர் வீட்டை விட்டுக் கிளம்பும் போது, குறுக்கே பூனை போனபோதே நினைச்சேன்; அதே மாதிரி ஆயிட்டுது!"*

*"என்ன அபசகுனமாயிடுச்சா!"*

*"ஆமா; அந்தப் பூனை ரோட்டிலே அடிபட்டு செத்திடுச்சு!"*

*-வி. ரெங்கநாதன்*



# இரண்டெழுத்தில் என் மூச்சிருக்கும்

அப்புசாமி எங்கு போனாலும் கூடவே நிழல் போல அவர் தோழன் ரசகுண்டு சென்று கொண்டிருந்தான். ஒரு வித்தியாசம். அவர் நிழல் மெல்லிசாக இருந்தது. அவனுடையது செந்தில் சைஸ்.

"தாத்தாவ்! போரடிக்குது" என்றான் ரசகுண்டு. "பீச்சாங் கரையிலே போய்க் கொஞ்சம் உட்காரலாமா தாத்தா?"

இதைச் சொல்லும்போது அப்புசாமி மட்டும் அவன் முகத்தைக் கொஞ்சம் ஆழமாகப் பார்த்திருந்தாரானால் – காலை வாரி விடுவதற்காகக் கூடிய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தை அவன் முகத்தில் கண்டிருக்கலாம்.

அவரை அவன் கடற்கரைக்குக் கூட்டிப் போனது காற்று வாங்குவதற்கு அல்ல. அவரது காற்றைப் பிடுங்குவதற்கு. சீதாப்பாட்டியிடம் போட்ட பந்தயத்தில் மணலை அவர் கவ்வ வேண்டும் என்பதற்காக.

மரீனா பீச் சிரஞ்சீவி அழுக்குடன் மாலைச் சூரிய ஒளியில் தகதகத்துக் கொண்டிருந்தது.

சக்கரமிருந்தும் நடமாடாத பாவ் பாஜி, பானிபூரி, பேல் பூரி கடைகளிலிருந்து கிளம்பும் மணம், கொள்ளோ புல்லோ கண்டு வருடக்கணக்கான எலும்புப் பிராணிகள் (குதிரைகள் என்ற புனை

"ஒண்ணுமில்லே தாத்தா. வந்து... வந்து... வந்து..." புது நியூஸ் ரீடர் மாதிரி ரசகுண்டு தடுமாறினான். "ஒண்ணுமில்லே தாத்தா," என்று பனியனுக்குள் கைவிட்டு அங்கே மறைத்து வைத்திருந்த பாக்கெட் சைஸ் டேப் ரிகார்டரின் ஸ்விட்சைத் தட்டி விட்டான்.

அப்பாவியாக அப்புசாமி, "ஏண்டா கண்ணா, அரிக்கிறதா? சொரிஞ்சி விடட்டுமா?" என்று அன்பைச் சொரிந்தார்.

"இல்லே தாத்தா. ஒரே போரடிக்குது. காலையிலிருந்து உங்ககூடவே சுத்திக்கிட்டிருக்கிறேன். நீங்க தப்பே செய்யலையே."

''ஹஹ!'' சிரித்தார் அப்புசாமி. ''அடேய்! நான் அவ்வளவு க்கிரம் ஏமாந்துடமாட்டேண்டா."

ஒன்றுமறியாத பாலகன் போல் ரசகுண்டு, "அவ்வளவு க்கிரமா? என்ன தாத்தா சொல்றீங்க?"

"அட மடக் கழு! நான்தான் அவள் பெயரிலுள்ள இரண்டு எழுத்துக்களைச் சொல்லக்கூடா."

ரசகுண்டு வியந்தான். ''நீங்க மெகா உஷார்ப் பேர்வழியாயிருந்தீர்களே. காலையிலிருந்து இதோ சாயந்தரம் வரை சமாளிச்சிட்டீங்க. நாளைக்குக் காலையில் பத்து மணியோடு பந்தயம் முடிகிறது. பத்தாயிரம் ரூபா நிச்சயம் பாட்டிகிட்டேயிருந்து தட்டி விடுவீங்கன்னு தோணுது. ஆனால் உங்களுக்குக் கஷ்டமாக இல்லையா? வாய்க்கு வாய் 'சீதே! சீதே'ன்னு பாட்டியைக் கூப்பிட்டுக் கொண்டிருப்பீங்க. சில விர



### பாக்கியம் ராமசாமி

பெயரில்) அற்ப சிறுவர்களின் அடி தாங்காமல் ஓடும் ஓட்டம், மர்மமாக உட்கார்ந்திருக்கும் பல ஆண் – பெண் ஜோடி, சடுகுடு விளையாடும் தடியர்கள், ஓர் ஒட்டகம் – இத்தனை அமர்க்களத்தில் தனி இடம் பிடித்து அவர்கள் அமர்ந்தனர்.

''ரசகுண்டு!'' என்றார் தாத்தா. "ஏண்டா கண்ணா, ஒரு மாதிரியாக இருக்கே?"

லைக் கட்டி விட்டு டைப் அடிக்கிறதுன்னு போட்டி வைப்பாங்க. அந்த மாதிரி உங்களுக்கு அதிசயப் போட்டி வைத்தான் பாட்டி. நீங்களும் இதுவரை சமாளிச்சிட்டீங்க. முன்கூட்டி என் பாராட்டுக்கள் தாத்தா."

"அவசரப்படா" என்றார் அப்புசாமி. ''காலை வரையில் பொறு. கடைசி நிமிஷத்திலே மூக்கை நீட்டி சில குதிரைங்க ஜெயிக்கிற மாதிரி கிழவி ஜெயித்தாலும் ஜெயித்து விடுவாள்."

''ஹிஹி'' பாட்டியைக் குதிரை

## மறக்க முடியவில்லை – சம்பவம் – 2

"சுமார் பனிரெண்டு வருடங்களுக்கு முன் வளைகுடா நாடுகளுக்குச் சென்றிருந்தேன். மகாராஜபுரம் சந்தானம், ரமணி, வேலூரர் ராமபத்ரன், நான் ஆகியோர் அங்குள்ள நாடுகளில் கச்சேரிகள் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. கடைசி கச்சேரி தோஹா என்ற ஊரில். அங்கே எங்களுக்கு ஒரு சிக்கல் காத்திருந்தது.

எங்கள் நிகழ்ச்சிக்கு சில மாதங்களுக்கு முன் ஒரு பிரபல இந்துஸ்தானி பாடகரின் இசை நிகழ்ச்சி அங்கே நடந்திருக்கிறது. அரங்கில் கூடிய ரசிகர்கள் நிகழ்ச்சியை மிகவும் சந்தோஷமாக அனுபவித்தனர். உற்சாகம் பொங்க அந்தப் பாடகர், "ராம் அவுர் ஷ்யாம் துனியா மே ஏக் ஹை" என்ற பாடலைப் பாடத் தொடங்கியிருக்கிறார். "ராமனும் கண்ணனும் ஒருவரே. இருவருமேதான் உண்மையான தெய்வங்கள்" என்ற பொருள்படும் அந்தப் பாடலை, கேட்டுக்கொண்டிருந்த முஸ்லிம்களில் பெரும்பாலோர் ரசிக்காமல், அரங்கை விட்டு வெளியேறி விட்டார்கள்!

அதிலிருந்து அந்த நாட்டு அரசு ஒரு சட்டத்தை கடைப்பிடிக்கத் தொடங்கி விட்டது. இந்தியப் பாடகர்களின் நிகழ்ச்சிகளில் எந்த இந்துக் கடவுளின் பெயரும் இருக்கக்கூடாதாம்.

ஹோட்டலில் தங்கியிருந்த எங்களிடம் வந்த அரசுப் பிரதிநிதி, "நிகழ்ச்சியில் என்னென்ன பாடல்கள் பாடப் போகிறீர்கள்? என்ன ராகத்தில்? கடவுளின் பெயர் வருகிறதா?" என்றெல்லாம் கேட்டார். இந்தப் பட்டியலை அரசு நிர்வாகிகள் பரிசீலித்து, அனுமதித்தால்தான் நிகழ்ச்சிக்கு ஒப்புதல் கிடைக்கும் என்றார். நாங்கள் எல்லாரும் உட்கார்ந்து கொண்டு வெவ்வேறு கிருதிகளை ஆராய்ந்து ராமர், கிருஷ்ணர் போன்ற பெயர்கள் இடம்பெறாத பாடல்களைத் தேர்ந்தெடுத்து அவற்றையே பாட வேண்டியதாகி விட்டது! கச்சேரியை, ஷேக்குகள் எல்லாம் தலையசைத்து ரசிக்க, பல சி.ஐ.டி.க்கள் எங்கள் நிகழ்ச்சியை வேவு பார்க்க, மறக்க முடியாதபடி அமைந்து விட்டது அந்த இசைப் பயணம்."

– லால்குடி ஜெயராமன்

என்கறீங்க."

"குதிரையாடா அவள்? கழு! கழு....! சதிகாரக் கழு! அதிகாரக் கழு!"

இரண்டு தினங்களுக்கு முன்.

பாட்டிகள் முன்னேற்றக் கழகத்தின் அவசர மீட்டிங் ஒன்று சீதாப்பாட்டியின் வீட்டில் நடந்தது. அகில உலக அழகிப் போட்டியில் வென்ற உலக மகா அழகி ஸ்கீலாவாவுக்கு பா.மு.க.வினர் வரவேற்பு தருவதா, அல்லது பிரிட்டன் மாதிரி, பி.பி.ஸி. மாதிரி அவளைப் புறக்கணிப்பதா?

"சீதே! சீதே! சீதே!" என்று ஏலம் விட்டுக்கொண்டு ஹாலுக்கு வந்தார் அப்புசாமி.

சீதாப்பாட்டி பல தடவை சொல்லி வைத்திருந்தாள். மீட்டிங்கில் அவள் இருக்கும்போது அவர் அங்கு வருவதோ, அவள் பெயரை 'சீதே சீதே சீதே' என்று கொட்டை எழுத்தில் கூப்பிடுவதோ கூடாது என்று.

பால் வாங்கி வரும் கடமையைச் செய்ய அப்புசாமி துடித்த துடிப்பிலும், புதுக் கார்டைத் தேடி அவர் தவித்த தவிப்பிலும் நியாயமிருந்தாலும் கட்டுப்பாட்டை மீறியதை சீதாப்பாட்டி மன்னிக்கவில்லை.

கிழவிகளெல்லாம் கலைந்தபின் அவரைக் கூப்பிட்டு வைத்துக் கடும் எச்சரிக்கை செய்தாள். " 'சீதே!' என்று இனிமேல் உங்கள் வாயிலேயிருந்து வந்தால் உங்கள் பாக்கெட் மணி ஹண்ட்ரட் பர்சண்ட் கட்!"

"சரிதான் போடிக் கியவி!" என்றார் அப்புசாமி. "சீதேன்னா, நீதானாடி சீதே? இந்த உலகத்திலே. 'சீ... தே...' என்கிறது தமிழ்லே இரண்டு எழுத்து! அதை நான் பத்தாயிரம் தடவை கூட உச்சரிப்பேன். அதைக் கேட்க நீ யாரு?"

"நான் யாரா? உங்களுக்கு எவ்ரி மன்த் எய்ட் ஹண்ட்ரட் ருபீஸ் பாக்கெட் மணி என்கிற பேரிலே தண்டம் அழுகிறவள். ப்ளஸ் ஜிப்பா வேட்டி அலவன்ஸ், ஷேவிங் அலவன்ஸ், கடைக்குப் போய்விட்டு வந்தால் பேட்டா, புடைவை அயர்ன் செய்து தர ஸ்பெஷல் அலவன்ஸ், இது தவிர டிராவலிங் அலவன்ஸ். இப்படி எத்தனை பெர்க்ஸ்... இதெல்லாம் இல்லாமல் ஃபெஸ்டிவல் போனஸ்... உங்க பர்த்டேன்னா கேக் வாங்கி அழுறேன். நான் யாருன்னு தெரிகிறதா?"

அப்புசாமியும் படு ரோஷ மூடில் இருந்தார். "அட சரித்தான் போடி. என்னை விட்டால் எந்தக் கழுதேடி உன்னை 'சீதே' 'சீதே'ன்னு கூப்பிடப் போகுது. இப்போ ஒரு சபதம் போடறேன். கேட்டுக்கடி..." என்றார்.

"ஐ யம் ஃபெட் அப் வித் யுவர் சபதங்கள்," என்று சீதாப்பாட்டி காதை மூடிக் கொண்டாள்.

அப்புசாமி சபதமிட்டார். "அடியே கிழவி! இனிமேல் இந்த அப்புசாமி வாய் சீதேன்னு கனவிலே கூட உளறாது. 'சீ' என்கிற எழுத்தும் 'தே' என்கிற எழுத்தும் என்னைப் பொறுத்த வரை தமிழிலிருந்தே தொலைந்து போயிட்டுது. இனிமேல் நான் பேசற பேச்சிலோ, எழுத்திலோ 'சீ' இருக்காது; ஏதாவது கட்டி இட்டி வந்தால் ஒருகால் இருக்குமோ என்னவோ... அதே மாதிரி 'தே'யும் இருக்காது. இது சவால்டி சபதம்டி."

சீதாப்பாட்டி தொப் என்று பத்தாயிரம் ரூபாய் நோட்டுக் கற்றை ஒன்றை மேஜை மீது வைத்தாள். "சாலஞ்ச் அக்ஸெப்டட்! அடுத்த ட்வென்ட்டி ஃபோர் அவர்ஸில் உங்கள் வாயி லிருந்து ஒரு தரம் கூட 'சீ'ன்னோ, 'தே'ன்னோ வரக்கூடாது. அதற்கென்று டோட்டல் ஸைலன்ஸ் அப்ஸர்வ் பண்ணக் கூடாது. பேசறது என்னவோ பேசிக் கொண்டிருக் கணும்."

"என் வாழ்க்கையிலிருந்து தொலைஞ்சுதுடி அந்த இரண்டு எழுத்தும். வாழ்க்கையிலே யிருந்து மட்டுமல்ல, தமிழிலிருந், தமிழ் கூறும் நல்லுலகத்திலிருந், இந்த உலகத்திலிருந்... ஒழித்துக் கட்ட மறியல் பண்ணப் போறேண்டி" கொதித்தார், குமுறினார். நோட் டுக் கற்றையைப் பார்த்து ஜொள்ளினார்.

"மை டியர் சார்," என்றாள் சீதாப்பாட்டி. முதலில் ட்வென்ட்டி ஃபோர் அவர்ஸுக்கு ட்ரை பண்ணிப் பாருங்க. பைதவே... இஃப் யூ லூஸ்... தினத்துக்கும் முப்பது தோப்புக்கரணம் என் எதிரே போடணும்."

சபத வீரர் சவாலை ஏற்றார். சீதாப்பாட்டி ரசகுண்டுவைத் தன் ஸ்பெஷல் ஏஜெண்ட்டாக நியமித்து விட்டாள். ஒரு பாக்கெட் சைஸ் டேப்ரிகார்டரை வாங்கிக் கொடுத்து நாள் பூரா அப்புசாமியுடன் திரிந்து அவர் பேச்சுக்களை ரகசியமாகப் பதிவுசெய்வது மட்டுமல்ல, அவர் வாயிலிருந்து மேற்படி எழுத்துக்களை எப்படியாவது வரவழைக்கவும் அவன் முயற்சி செய்ய வேண்டும் என்று கட்டளையிட்டு விட்டாள்.

ரசகுண்டு தன் பங்குக்குப் பலவித தந்திரங் கள் செய்து பார்த்து விட்டான்.

ஒரு மளிகைக் கடை அருகே சென்றபோது திடீரென்று வயிற்றைப் பிடித்துக் கொண்டு துடித்தான். "தாத்தா! தாத்தா! ஐயோ வயிற்று வலி! கடையில் கொஞ்சம் சீரகம் வாங்குங் களேன். வாயிலே போட்டு மென்றால் சரி யாகிவிடும் என்பார்களே..." என்றான்.

அப்புசாமி கடைக்காரனிடம், "ரகம் ஒரு ரூபாய்க்குக் குடுப்பா...." என்றார் அவசரமாக.

"ரகமா? என்ன ரகம்?" என்று கடைக்காரர்



குழம்பினார்.

"அதுதான்ப்பா, கஷாயமெல்லாம் போடு வாங்களே."

கடைக்காரர் புரிந்துகொண்ட மகிழ்ச்சியுடன், "ஓ! சுக்குங்களா?" என்றார்.

"சரியான மக்குய்யா, நீர்" என்று கடிந்து கொண்ட அப்புசாமி, "உமக்குக் கக்கா கிகீ தெரியுமா?" என்றார்.

கடைக்காரர் மிரண்டார். 'காலங்காத்தாலே இப்படி ஒரு பைத்தியக் கிராக்கியா?' ஆனால் சில பைத்தியங்களுக்கு ராசி உண்டு. அதுகள் வந்து கடையில் போணி பண்ணினாலோ சரக்கில் கை வைத்தாலோ அன்றைக்கு வியாபாரம் பிய்த்துக் கொண்டு போகும்.

ஆகவே கடைக்காரர் பொறுமையுடன், "சின்ன வயசில் கொஞ்ச கொஞ்சம் தெரியும்" என்று ககாகிகீ வரிசையைச் சொன்னார்.

"சபாஷ்" என்ற அப்புசாமி "சரி... ச, சா, சி வரிசை சொல்லுங்க பார்ப்போம்."

"சசாசிசீசெசேசை...."

"சை!" என்றார் அப்புசாமி. "ரொம்ப முன்னே வந்துட்டீங்க. அப்படியே பின்னாலே போங்க."

"பின்னாலே எண்ணெய் டின்னுல்லே இருக்கு..." என்றார் கடைக்காரர்.

"சரி. சரி. சசா வரிசையில் நாலாவது எழுத்து என்ன?"

திடீர்னு ஒருத்தர் வந்து தனக்குத் தமிழ் போதிக்க வேண்டிய அவசர அவசியமென்ன என்று கடைக்காரர் மேலும் குழம்பினார். "நீங்க சொல்றது புரியலீங்களே."

அப்புசாமி பல்லை நறநறத்தார். "நரிக்கதை தெரியுமா? நரியும் திராட்சையும் கதைய்யா. நரி திராட்சைப் பழத்துக்காக எகிறி எகிறிக் குதித்தது,...."

"ஏனுங்க, நரி திராட்சைப் பழம் தின்னுங்களா?"

"அந்தக் காலத்திலே தின்னுது!"

அப்புசாமி கத்தினார். "திராட்சை எட்டவில்லைன்னதும் நரி என்ன சொல்லிட்டு ஓடிப் போனது..."

"ஓகோகோ! அந்தக் கதையைக் கேட்கறீங்களோ? 'சீ சீ! இந்தப் பழம் புளிக்கும்'னு சொல்லிகிட்டே ஓடிப்போச்சு..."

"சபாஷ்யா சபாஷ்!" என்று அப்புசாமி கடைக்காரரைக் கட்டிக் கொண்டார். "நரி எரிச்சலோடு சொன்ன அந்த முதல் எழுத்தையும் நான் கேட்ட ரகத்தையும் சேர்த்துப் பார்."

மனிசை தனது சிறு மூளை, பெருமூளை எல்லாவற்றையும் எலுமிச்சம்பழ மூடியைத் தோல் கசக்கக் கசக்கிப் பிழிவது போலப் பிழிந்தார். "ஓ! சீரகமா?"

"அப்பாடி! அதுதாண்டாப்பா!" என்றார்




அப்புசாமி, மகிழ்ச்சியுடன்.

"தாத்தா! நீங்க ரொம்பத்தான் தேறிட்டீங்க. உங்க வாயிலேயிருந்து 'சீ' எழுத்தை வரவழைக்க நானும் ட்ரிக் பண்ணிப் பார்த்தேன். முறியடிச்சிட்டீங்களே..." என்றான் ரசகுண்டு.

"தாத்தா, தாத்தா! வாய் ஊறுது. தேங்கா மாங்கா பட்டாணி சுண்டல் கூப்பிடுங்க தாத்தா! ஜம்முனு ஆளுக்கு நாலு பொட்டலம் சாப்பிடலாம். செலவு என்னோடது."

அப்புசாமி, "ஹை! செலவு உன்னுதா? அப்படியானால் உடனே கூப்பிட வேண்டியது தான்," என்றார் சற்றுத் தூரத்தில் சந்தேகாஸ்பதமாக நின்ற (விற்கப்படுவது வடையா, சுண்டலா என்ற சந்தேகம்தான்) ஒரு பயலுக்குக் குரல் கொடுத்தார்.

"ங்கா மாங்கா சுண்டல்... இங்கே வாடாப்பா!"

ரசகுண்டு அசந்தே போனான்.

இல்லாடித் தாத்தாவாக இருக்கிறாரே என்று எண்ணிக் கொண்டான்.

தேங்காமாங்கா சுண்டல் சிறுவன் பக்கத்தில் வந்து சரக்கை இறக்கினான். அப்புசாமி டேக்சாவைக் கண்ணோட்டம் விட்டார்.

"ஏண்டா பையா, சுண்டலாடா இது? ங்கா மாங்கா சுண்டல்னு பேரே தவிர ங்காவையும் காணோம், மாங்காவையும் காணோமே."

"ங்காவா?" சுண்டல் குழம்பியது.

ரசகுண்டு எரிச்சலுடன், "தேங்காவிலே தேயை முழுங்கிட்டுத் தாத்தா ங்கா என்கிறார். தேவுடன் அவர் டூ" என்று பையனுக்கு



விளக்கினான்.

"ஓ! தேயோடு டூவா?" என்ற சிறுவன், "டூங்கா மாங்கா பட்டாணி சுண்டல்!" என்று உற்சாகமாகக் கத்தியவாறு கிளம்பினான்.

இரவு பத்து மணிக்குத் தோல்வி தழுவ ரசகுண்டு முகத்தை உம் பண்ணிக் கொண்டு தாத்தாவுடன் வீடு திரும்பினான்.

"பாட்டி! தாத்தாவை ஒண்ணும் பண்ணிக்க முடியலே" என்றான்.

அப்புசாமிக்குப் பெருமையாயிருந்தது.

தான் எப்படியெல்லாமோ அவரைச் சோதித்தும் அவர் வாயிலிருந்து குறிப்பிட்ட அந்த இரண்டு எழுத்துக்களை வரவழைக்க முடியவில்லை என்று ரிப்போர்ட் சமர்ப்பித்தான்.

பாட்டி மோவாயைத் தடவிக் கொண்டாள். "மை டியர் ஸன்! டோன்ட் லூஸ் ஹார்ட்! நாளைக்குக் காலை பத்து மணி வரை டைம் இருக்கிறது!"

அப்புசாமி வியப்புடன், "அடியே கெயவி! என்னைக் கவிழ்த்துடலாம்னு மனப்பால் குடிக்கா..." என்றார்.

சீதாப்பாட்டி ரசகுண்டுவுக்குக் கண்ணால் சாடை காட்டி விட்டு, "சரி சரி. ரசம்! நேற்று கல்யாணத்துக்குப் போயிருந்தோமே. சீர் பட்சணம் கொடுத்திருக்கா. கிச்சனில் இருக்கு. கிளாஸ் ஒன் நெய்யில் பண்ணியிருக்காங்க. தாத்தாவுக்குக் கொடுத்துட்டு நீயும் எடுத்துக் கொள்," என்றாள்.

அப்புசாமிக்கு கபகப பசி. "ர் பட்சணமா? கொண்டா! கொண்டா!" என்றார்.

"பாட்டி! தாத்தாவை நீங்க ஒண்ணும் பண்ணிக்க முடியாது. எவ்வளவு ஜாக்கிரதையா 'சீர்'ஐ ர்னு மட்டும் சொன்னார் பார்த்தீங்களா? நிச்சயம் தாத்தாதான் இந்தத் தடவை ஜெயிக்கப் போகிறார்," என்றான் ரசம்.

காலை பத்து மணிக்கு இன்னும் இரண்டு நிமிஷங்களே இருந்தன.

சீதாப்பாட்டியின் முகம் எவ்வளவுக்குத் துவண்டு இருந்ததோ அத்தனைக்கு அப்புசாமியின் முகத்தில் குதூகலம் கொப்பளித்தது.

நடுவர் இருக்கையில் ரசகுண்டு அமர்ந்திருந்தான். தனது தீர்ப்பை வழங்கத் தயாரானான். மேஜை மீது சவாலுக்குரிய சம்பளம் ரூபாய் பத்தாயிரம் காத்திருந்தது.

இன்னும் ஒரே ஒரு நிமிஷம்தான் பாக்கி இருந்தது.

"பாட்டி, நீங்க தாத்தாவை ரொம்ப மட்டமாக எடை போட்டிருந்திங்க. ஆனால் அவர் பாருங்கள், நேற்றிலிருந்து இந்த நிமிஷம் வரை உங்கள் பெயரின் இரண்டு எழுத்துக்களை ஒருதரம் கூட உச்சரிக்கவில்லை. நீங்களும் நானும் எத்தனையோ சோதித்தும் அவர் அனாயாசமாகத் தாண்டி விட்..."

சொத்தென்று அப்புசாமியின் வெள்ளை ஜிப்பா மீது கறுப்பாக ஏதோ விழுந்தது! கறுப்பாக மூணு அங்குல நீளத்துக்கு ஒரு தேள்.

அப்புசாமி கத்தினார்; அலறினார் : "ன்! ன்! ஐயோ! ன்!"

"என்ன வைராக்கியம்! தேளுக்குப் பயந்து தாத்தா அலறினாலும் தேள் தேள்னு கூச்சல் போடலையே!" என்றான் ரசகுண்டு ஆச்சரியத்துடன். "அது பாட்டி தூக்கிப் போட்ட ரப்பர் தேள் தாத்தா!"

"அப்புசாமி சமாளித்துக் கொண்டு, "ஹஹஹ! அடியே கிழவி! எனக்குத் தெரியாதா? நீதான் ஒருத்தி தேள் மாதிரி கொட்டிண்டிருக்கியே; அதுக்கே நான் பயப்படலை; நீ தூக்கிப் போட்ட ரப்பர் தேளுக்குப் பயந்தா 'தேள் தேள்'னு அலறப் போறேன்?" என்றார் அப்புசாமி.

"போச்சு! போச்சு! தேள் தேள்னு இப்ப 'தே' சொல்லிட்டீங்க நாலு தடவை!" என்றான் பாட்டி.

கடைசி பந்தில் ஒரே ஒரு ரன் எடுத்திருந்தால் வெற்றி அடைந்திருக்கக்கூடிய அரிய வாய்ப்பை இழக்கச் செய்த கடைசி பாட்ஸ்மன் மாதிரி அப்புசாமி துடித்தார். "ஐயோ கடைசி நிமிடக் கர்வம் காலை வாரி விட்டுட்டதே... தே... தே... தே..."

"சரி சரி. அவரை முப்பது தோப்புக்கரணம் போடச் சொல்லு; பார்த்துட்டு நான் எங்க கழக மீட்டிங்குக்குக் கிளம்பணும்" என்றாள் சீதாபாட்டி சவு அண்ட் இரக்கம் இல்லாமல்.

# இரண்டாவது வனவாசம்!




"விரலோடு வீணை – கல்லூரியில் படிப்பவர்களுக்கிடையிலான ஈகோ மோதல்தான் கதை. வாரா வாரம் வாசகர்களிடமிருந்து மிக நல்ல வரவேற்பு. ஒரே மூச்சாய் உட்கார்ந்து பத்து அத்தியாயங்களை எழுதிக் கொடுத்த போது, தேவி பத்திரிகையின் ஆசிரியருக்கு இனிய அதிர்ச்சி. வி. வீணை முடிந்த மறு வாரத்திலிருந்தே, அடுத்து ஒரு தொடர் கதையை ஆரம்பிக்க விரும்பினார்கள், 'தேவி'யில். அது ஒரு எழுத்தாளருக்குக் கிடைக்கிற மிகப் பெரிய கௌரவம் என்று நான் கருதினாலும், என்னால் அந்த வாய்ப்பை ஏற்றுக் கொள்ள இயலாமையைத் தெரிவித்துக் கொண்டேன்.

காரணம்? அப்போது நான் ஒரு திரைப்படத்துக்கு வசனம் எழுதிக் கொடுக்கிற பணியை ஏற்றுக் கொண்டிருந்தேன்."

"உங்களை சினிமா எப்படி சர்த்துக் கொண்டது?"

"பிராமண குடும்பத்துப் பெண் ஒருத்தியை மையமாகக் கொண்ட கதையை சினிமாவாய் எடுக்கப் போகிறோம். நீங்கள் வசனம் எழுதிக் கொடுத்தால், நல்லா இருக்கும்" என்று சொல்லி என்னை அணுகினார் ஆபாவாணன். அவர் சொன்ன கதையைப் போல மாத நாவல் எழுதுவதற்காக நானும் ஒரு கதையை யோசித்து வைத்திருந்ததால், அவர் சொன்ன கதை எனக்கு ரொம்ப அப்பீல் ஆச்சு. அது மட்டுமின்றி, வெகுநாட்களாகவே ஒரு சினிமா எப்படி உருவாகிறது என்பதை ஆரம்பம் முதல் இறுதி வரை கிட்டே இருந்து தெரிந்து கொள்ள வேண்டும் என்று எனக்குள்ளே இருந்து வந்த ஆர்வமும், வந்த வாய்ப்பை ஏற்றுக் கொள்ள என்னைத் தூண்டியது.

"ஆபாவாணன் மற்றும் அவரது குழுவினர் பழக நல்லவர்களாகவும், மரியாதைக்குரியவர்களாகவும் இருந்தது நான் முடிவெடுக்க உதவியது. கதை டிஸ்கஷனுக்காக ஓட்டலுக்கு வர எனக்குப் பிடிக்காது என்று நான் சொன்னதும், ஒரு ஃபிளாட்டில் கதை டிஸ்கஷனுக்கு ஏற்பாடு செய்தார்கள்.

" 'கறுப்பு ரோஜா' என்ற அந்தத் திரைப் படத்துக்கு முதலில் நான் வசனகர்த்தாவாக மட்டுமே இருந்தேன். விசாகப் பட்டிணத்தில், பல லட்சம் பட்ஜெட்டில் செட் நிர்மாணித்து, ஷூட்டிங் நடக்கவிருந்த சமயத்தில் தயாரிப்பாளரான அயல்நாட்டில் வாழும் இந்தியர் ஒருவர் கைவிரித்து விட, நிலைமை மிக நெருக்கடியானது.

"ஆபாவாணனின், 'ஊமை விழிகள்'

படத்தில் ஒரு பாட்டு வரும். தோல்வி நிலை என நினைத்தால் மனிதன் வாழ்வை நினைக்கலாமா? வாழ்வை சுமையென நினைத்து தாயின் கனவை மிதிக்கலாமா? என்ற அந்தப் பாட்டு எனக்கு மிகவும் பிடிக்கும். ஒரு கேஸட் முழுக்க அந்தப் பாட்டை திரும்பத் திரும்ப ஒலிப்பதிவு செய்து, தொடர்ந்து நெடுநேரம் கேட்டுக் கொண்டே இருப்பேன். வீடியோவில் ஏழெட்டு முறை அந்தப் படத்தைப் பார்த்திருக்கிறேன். படத்திலும் அந்த பாடலுக்குரிய காட்சியில், எல்லாவற்றையும் இழந்து விட்ட நிலையிலும் மனோதைரியத்தையும், விடாமுயற்சியையும் விட்டு விடாமல் அந்தப் பாட்டைப் பாடுவதாய் வரும். அப்படி ஒரு பாடலை எடுத்த ஆபாவாணனுக்கு, இப்படி ஒரு நெருக்கடி ஏற்பட்டு விட்டதே என்று நான் வேதனைப்பட்டேன். அவருக்கு எப்படியாவது உதவ வேண்டும் என்று எனக்குத் தோன்றியது.

"ஆபாவாணன், என் கணவர், என் பெற்றோர் அனைவரையும் கலந்தாலோசித்து, நானே தயாரிப்பாளராக முடிவு செய்தேன். ஆரம்பத்தில் ஒரு அறுபது, எழுபது லட்சம் ரூபாய்தான் தேவைப்படும் என்று நினைத்தேன். துணிச்சலாய் இறங்கினேன்.

"படப்பிடிப்பின் போது கூடவே இருந்ததன் பயனாக நான் ஏகப்பட்ட விஷயங்களைக் கற்றுக் கொண்டேன். லைட் பாய் முதல் டெக்னீஷியன்கள், ஆர்ட்டிஸ்ட்ஸ், டைரக்டர் வரை அத்தனை பேருடைய கடுமையான உழைப்பும் என்னை பிரமிக்க வைத்தது. ஒருநாள் ஷூட்டிங்கின் போது மலை மீது ஏற நான் மிகவும் சிரமப்பட்டேன். மேலே போனபின், அடக்க முடியாமல் எனக்குப் அழுகை பீறிட்டது. யூனிட்டில் அனைவரும் பதறி விட்டனர். 'இங்கே ஒவ்வொருவரும் எவ்வளவு கடுமையாய் உழைக்கிறீர்கள். அதைப் பார்க்குபோது, எனக்கு பிறந்தது முதலே ஆண்டவனால் அளிக்கப்பட்ட மிகவும் சௌகரியமான, பாதுகாப்பான வாழ்க்கை குறித்து சந்தோஷப்படுவதா, உங்கள் எல்லோரையும் போல கடுமையான உழைப்புக்கு என்னால் ஈடுகொடுக்க முடியாததற்காக வெட்கப்படுவதா என்று புரியவில்லையே? என உணர்ச்சிவசப்பட்டேன்.

"அறுபது, எழுபது லட்சம் என்று கணக்கிட்ட தயாரிப்பு செலவு, இழுத்துக் கொண்டே போய், கடைசியில் மூணரை கோடியில் கொண்டு போய் விட்டது. சினிமா பற்றி அனுபவம் எதுவுமில்லாவிட்டாலும் கூட, ஆபாவாணன் என்ற நண்பரின் நேர்மைக்காகவே நான் எங்கள் சொத்து, எங்கள் மூதாதையர் சொத்து என்று பலவற்றையும் வைத்து பணம் புரட்டினேன். பட ரிலீசுக்கு முந்தைய நாள் கூட சில லட்சம் ரூபாய் தேவைப்பட்டது. என் அப்பா மூலமாக ஏற்பாடு செய்தேன்.

"நான் ரொம்பக் கஷ்டப்பட்டு பணம் புரட்டினேன் என்பதால், ஆபாவாணனும், எனக்கு அதிகபட்சம் லாபம் கிடைக்க வேண்டுமென்று விரும்பினார். இறுதியில் நாங்கள் போட்ட கணக்கு பிசகி விட்டது. படம் சூப்பர் ஃப்ளாப். அன்றைய தேதியில் நிகர நஷ்டம் இரண்டு கோடி. படம் பற்றி மிகக் கடுமையாய் விமர்சனம் எழுதியது கல்கிதான்! (சிரிக்கிறார்).

"பண நஷ்டமானாலும், படத்தயாரிப்பின் போது எனக்கு ஏற்பட்ட அனுபவங்கள், என்னை மிகவும் பக்குவப்படுத்தின. சட்டென்று எமோஷனலாகிவிடுகிற, திடுதிடுப்பென்று முடிவுகள் எடுக்கிற எனது குணங்கள் மாறி, எனக்கு 'மெண்டல் ஸ்டெபிலிடி' கிடைத்திருக்கிறது. அதனால்தான், இவ்வளவு பெரிய நஷ்டத்தையும ஸ்திரமான மனத்துடன் என்னால் ஏற்றுக் கொள்ள முடிகிறது. சந்தோஷம், திருப்தி என்பதெல்லாம், பெயர், புகழ், பணம் போன்ற வெளிச் சமாசாரங்களால் வருபவை அல்ல. அவை நம் உள்ளேயே இருப்பவை. தேடினால் கிடைக்கும் என்று நான் உணருகிறேன்."

"மறுபடி எழுதும் எண்ணம் இருக்கிறதா?"

"78-ல் என் மகனுக்கு உடல்நலம் மிகவும் குன்றியபோது, எழுதுவதை ஒட்டுமொத்தமாக நிறுத்திவிட்டு, என் பையனையே கவனித்துக் கொண்டிருந்தேன். ஒருநாள் மணியன், திடீரென்று என் வீட்டுக்கு வந்து விட்டார். 'உங்கள் மருமகள் எவ்வளவு நல்ல ரைட்டர்? அவர் எழுதாமல் இருப்பதை நீங்கள் எப்படி அனுமதிக்கலாம்?' என்று என மாமியாரைக் கோபித்துக் கொண்டார். 'நீங்கள் மறுபடி எழுதியே ஆகவேண்டும். தொடர்கதைக்கு உடனே ஒரு தலைப்பு சொல்லுங்கள். தலைப்பு சொல்லும் வரை நான் இங்கிருந்து போக மாட்டேன்' என்று சொல்லி என்னை மறுபடி எழுத வைத்தார். அப்படிப் பிறந்த நாவல்தான் 'அனிதா'.

"இப்போது எனது இரண்டாவது வனவாசம், கூட்டுப் புழுப் பருவம் எப்படிச் சொன்னாலும் சரி, முடிந்து விரைவிலேயே எழுத ஆரம்பிக்க வேண்டும் என்று சில பத்திரிகைகளில் வற்புறுத்துகிறார்கள். விரைவில் எழுதத்துவங்குவேன்.

"மீண்டும் சினிமா பக்கம் போகிற எண்ணமுண்டா?"

"ஏய் நாட்? தயாரிப்பாளராக இல்லாவிட்டாலும், அடுத்த ஆபாவாணம் படத்திலும் நிச்சயம் மகிழ்ச்சியுடன் பங்குகொள்ளுவேன்."

சந்திப்பு : **மௌலி**



# மானிடனைப் பாடி...

**ஆ**ட்டோ கூட நுழையாத சந்து பொந்துகளிலெல்லாம் அந்த சைக்கிள் நுழைந்து முன்னேறியது. உடலின் சக்தி முழுவதையும் கால்களுக்குச் செலுத்தி ஓட்டிக் கொண்டிருந்தான் அனுஷ். நாற்பது வயதில் சைக்கிள் ஓட்டுவது அதிசயமில்லை. ஆனால் மாதம் ஒரு முறை மட்டுமே இப்படி சைக்கிளை மிதிக்கும்போது ஏதோ அந்தரத்தில் மிதப்பது போல் இருந்தது அனுஷுக்கு.

'ஆச்சு, இன்னும் பத்து நிமிடங்களில் வங்கியை அடைந்து விடலாம். லாக்கரிலிருந்து புதையலை எடுத்துப் பார்த்து ஆனந்தப்படலாம்'.

தெருவில் சென்றவர்களில் கணிசமானவர்களின் புருவங்கள் உயர்ந்தன. அடையாளம் கண்டுகொண்டதன் அடையாளம். இவருக்கேன் சைக்கிள் சவாரியும், வேகப் பயணமும் என்ற ஆச்சரிய வெளிப்பாடுகள்.

அவர்களுக்குத் தெரியாது. அது 26 வருடங்களுக்கு முன் விசாகப்பட்டினத்தில் வாங்கிய சைக்கிள் என்பதும், தன் 'குரு'வுக்கு மரியாதை செலுத்தும் வகையில் தான் ஒவ்வொரு ஐந்தாம் தேதியும் வங்கிக்கு அதே சைக்கிளில் செல்வதில் அவனுக்கு ஓர் அலாதி திருப்தி ஏற்படுவதும்.

**வி**சாகப்பட்டினத்துக்கு அப்பாவுக்கு வேலை மாற்றல் என்றபோது அம்மாவுக்கு ஏமாற்றம். உறவினர் யாரும் அந்த ஊரில் இல்லை. இந்த இடமாற்றத்தில் அனுஷுக்குப் பெரிய வருத்தம் எதுவுமில்லை. காரணம் நெருங்கிய தோழர்கள் என்று யாரும் இல்லாதது முக்கியக் காரணம்.

விசாகப்பட்டினம். சுமாரான பள்ளிக்கூடம். வீடும் சுமார் ரகம்தான். என்றாலும் கடற்கரை யோரம் அனுஷை மயக்கியது. அதைவிட அவனை மயக்கிய மற்றொரு விஷயமும் விசாகப் பட்டினத்தில் இருந்தது. அடுத்த தெருவில் வசித்த பூர்ணிமாவின் அறிவுவீச்சு. நேர்மை. எளிமை. இன்ன பிற.

எந்தப் பாடத்தில் சந்தேகமென்றாலும் பூர்ணிமாக்காவிடம் கேட்கலாமென்றார்கள் சக மாணவர்கள். பூகோளப் பாடங்களில் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளத்தான் தனது

## அருண்சரண்யா

புத்தம்புது சைக்கிலேறி அவள் வீட்டுக்குப் போனான். வாழ்க்கையின் பல விஷயங்களில் தெளிவு தந்தாள். அவனைவிட ஐந்து வயது பெரியவள்.

ஐயப்பன் சீஸன் ஆந்திரத்தையும் விட்டு வைக்கவில்லை. துளசிமாலைகளும், கருப்பு வேட்டிகளும் அதிகம் தென்படத் தொடங்கி விட்டன. ஒருநாள் தெருவில் வாழைத் தண்டில் செய்த சின்னத் தேரில் ஐயப்பனின் படம் அலங்கார தீபங்களுக்கு நடுவே ஊர்வலம் போக, ஏதோ ஒரு வேகம். விறுவிறுவென்று ஐயப்பனைப் பற்றி ஒரு பாடலை எழுதினான். வீட்டில் காண்பித்தான். மேலோட்டமாகப் பார்வையிட்ட அப்பா, "சரி சரி, பாடத்தையும் படி" என்றார். "நல்லா இருக்கு" என்று ஒற்றை வார்த்தையில் விமர்சித்தாள் அம்மா. போதவில்லை. பூர்ணிமாவிடம் போனான்.

"அடி சக்கை, அனுஷ்"க்கு பாட்டு எழுத வருமா? கொண்டா கொண்டா." நீட்டிய அவள் கை, தயக்கத்துடன் வந்து சேர்ந்த தாளைப் பிடித்தது. படித்துவிட்டு ஒரு நிமிடம் மௌனம் சாதித்தாள். மௌனத்தைவிட ஒரு கடுமையான விமரிசனம் உண்டா? அனுஷ் மனத்தில் சித்ரவதைப்பட்டான்.

மீண்டும் ஒருமுறை அந்தப் பாடலைப் படித்தாள். அதற்குத் தானே ராகமிட்டுப் பாடினாள். அனுஷ் உருகினான். 'இதைவிட சிறந்த விமரிசனம் உண்டா?' தன் முதல் பாடல் ரத்னசிம்மாசனத்தில் ஏறிவிட்டதாக உணர்ந்தான்.

"நீ எழுதினது பாட்டு இல்லே அனுஷ், கவிதை. வழக்கமில்லாத சிந்தனைகள் கூட இதிலே இருக்கு. நிறைய எழுது. இந்தப் பாட்டை உங்க ஸ்கூலில் கொண்டு போய் காண்பி."

"சபாஷ்" என்றார் ஆசிரியர். "காந்தியைப் பற்றி ஒரு பாட்டு எழுதேன். நம்ம பள்ளி ஆண்டுமலரிலே போடலாம்" என்றார்.

அன்றிரவு முழுதும் முயற்சித்து ஒரு இருபத்து நாலு வரிக் கவிதையை எழுதினான். காலையில் சைக்கிளை மிதித்தபடி அடுத்தத் தெருவுக்கு ஓடினான். தோட்டத்தில் மலர்ந்திருந்த மல்லிகைப் பூக்களையும், இலைகளின் மீது தற்காலிகமாகப் படர்ந்திருந்த பனித்துளிகளையும் ரசனையுடன் பார்த்துக் கொண்டிருந்த பூர்ணிமாவிடம் தான் எழுதியதை நீட்டினான்.

"அடுத்த கவிதையா? பேஷ் பேஷ். வா, உள்ளே போய் ஊஞ்சலிலே ஆடிக்கிட்டே படிப்போம்." அவனையும் அழைத்துக் கொண்டு போனாள். ஊஞ்சலை மெல்ல ஆட்டிக் கொண்டே படிக்கத் தொடங்கினாள். திடீரென நின்றது அவள் வாசிப்பும், ஊஞ்சலும். "வாத்தியார் கேட்டாரா? சரி, கொடுத்திடு" என்று உயிர்ப்பில்லாமல் சொல்லிவிட்டு உள்ளே சென்று விட்டாள்.

இந்தச் செய்கை தந்த அதிர்ச்சியில் "பாட்டு அருமையாக இருக்கு. அனுஷ், நீ

### மறக்கமுடியவில்லை/ சம்பவம்-3

"எழுத்தாளர் ஆர்.கே.நாராயணன் வீட்டில் விருந்து. அப்போது தொலைக்காட்சியில் காஞ்சி பரமாச் சாரியாரின் நூறாவது பிறந்த நாள் விழா தொடர்பான நிகழ்ச்சியை ஒளிபரப்பினார்கள். நெஞ்சு நெகிழ அவருக்கு செய்யப்பட்ட கனகாபிஷேகக் காட்சியை சின்னத் திரையில் பார்த்தேன். பிறகு வீட்டுக்குத் திரும்பும்போது ஓர் உத்வேகத்தில் பரமாச்சாரியர்ரைப் பற்றி ஒரு பாட்டு இயற்றினேன். "சந்திரசேகர யதீந்த மாஸ்ரயே" என்று தொடங்கும் அப்பாடல் சங்கராபரணம் ராகத்தில் அமைந்தது. இதை அவரிடமே சென்று பாடிக் காட்ட ரொம்ப ஆசையாக இருந்தது. என்றாலும் ஏனோ ஒருவித சங்கோஜம்.

இந்த நிலையில் மேற்படி விழாவிற்காக நாற்பது வித்வான்களைக் கொண்டு நாற்பது நாட்களுக்குக் கச்சேரிகள் ஏற்பாடு செய்திருந்தார்கள். என்னுடைய இசை நிகழ்ச்சி இருபதாம் நாளன்று அமைந்திருந்தது. இதற்காக காஞ்சிபுரம் சென்றவுடன், சங்கர மடத்தைச் சேர்ந்தவர்கள் வந்து, "நிகழ்ச்சியில் பாடுவதற்கு முன், மடத்துக்கு வந்து கொஞ்சம் தனியாகப் பாடிக் காண்பிக்கச் சொன்னார் பரமாச்சார்யார்" என்றார்கள். அதோடு, "இந்த விழாவில் உங்களைத்தான் முதன்முதலாக இப்படி தனியே கூப்பிட்டு வாசிக்க விருப்பம் தெரிவித்திருக்கிறார்" என்றும் அவர்கள் சொன்னதும் ஒரே ஆனந்தம். அந்த தெய்வாம்சம் பொருந்தியவர், இந்த எளியவனின் ஆசையை அறிந்து கொண்டு, அதை நிறைவேற்றுவதற்காகவே இப்படிக் கூறியிருக்க வேண்டும் என்று எண்ணி மெய்சிலிர்த்துப் போனேன். அன்று என் தம்பி, தங்கை நான் அவர் மீது இயற்றியிருந்த பாடலைப் பாட, அதற்கு நான் சித்ரவீணை இசைக்க, மனத்துக்கு மிகவும் நிறைவாக அமைந்தது!"

— ரவிகிரண்

தொகுப்பு: ஜி.எஸ்.எஸ்.

ஒண்ணு செய். நம்ம ஹெட்மாஸ்டர் அடுத்த வாரம் ரிட்டையர் ஆகப் போறார். அவரைப் பற்றி ஒரு பாராட்டுக் கவிதை எழுதேன். அதை ஃப்ரேம் செய்து பிரிவு விழாவிலே கொடுத்தா பொருத்தமா இருக்கும்" என்ற ஆசிரியரின் ஊக்கமொழிகள் உற்சாகம் தரவில்லை.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்ட பூர்ணிமா அங்குமிங்குமாக நடந்தாள். "அனுஷ், உன்கிட்ட கவிதைத் திறமை இருக்கு. நீ நிஜமான கவிஞனாகணும். எண்ணத்தில் கலப்படம் இல்லாமல் இருக்கணும். அதனாலே இந்தப் பாராட்டுக் கவிதைகளெல்லாம் எழுதாதே."

அனுஷ் குழப்பமாகப் பார்த்தான்.

"உன் தலைமை ஆசிரியரைப் பற்றிப் பல குறைகளைத்தான் நீ சொல்லியிருக்கே. அதையெல்லாம் உன் கவிதையிலே எழுதப் போறியா?"

'அதெப்படி முடியும்?'. வேகமாக அனுஷின் தலை இடவலமாக அசைந்தது.

"அதாவது நீ அவரை இந்திரன் சந்திரன்னு புகழப் போறே. உன் மனத்தில் இருக்கும் உண்மைகள் வெளிவரப் போவதில்லே. உன்னிடமிருந்து பிறக்கப் போவது வார்த்தைத் தோரணம்தானே தவிர கவிதையில்லை. மனிதர்களைப் பற்றி எழுதினால் இப்படித்தான். பெரிய மேதைகளைப் பற்றிப் பாட்டு எழுதினால் கூட அவர்களைப் பற்றிய நல்ல விஷயங்களைத்தான் பாடல்வரிகளாக மாற்றத் தோணும்."

திரை லேசாக விலகிய மாதிரி இருந்தது. "அப்படின்னா நான் எழுதிய ஐயப்பன் பாட்டை ரசிச்சீங்களே? கடவுளைப் பற்றி மட்டும் எனக்கு முழுவதுமாகத் தெரியுமா என்ன?"

"உன் கவிதைத் திறமையை எனக்குக் காட்டின முதல் பாட்டு அதுன்றதை மறந்துடாதே. தவிர கடவுளை நீ எப்படி உருவகப்படுத்தினாலும் அப்படியே மாறக் கூடியவர் அவர். சொல்லப்போனால் கோடிக்கணக்கான உருவங்களில் அவர் நமக்குக் காட்சி தந்துக்கிட்டிருக்கார்."

வேகமாக ஓடிச் சென்று கீழே உதிர்ந்து கிடந்த ஒரு நாகலிங்கப் பூவை எடுத்துக் காண்பித்தாள். பிறகு வானத்தைச் சுட்டிக் காட்டினாள். சூரியன் மறைந்து கொண்டிருக்க, வானில் வண்ணக் கோலம். கடலை கவனிக்கச் சொன்னாள்.

"இத்தனையும் இறைவன்தானே? பார். பரவசப்படு. புல்லரிப்பை, ஆச்சரியத்தைக் கவிதையாக்கு. நரஸ்துதி வேண்டாம். அதாவது நேற்றுப் பிறந்து, நாளை மறையும் மனிதர்களைப் பற்றிப் பாடாதே."

அவன் இலக்கை நோக்கி பூர்ணிமா தெளிவானதொரு பாதையை உருவாக்கிக் கொடுத்துவிட்டாள். 'மானிடரைப் பாடுவதில்லை' என்பதை ஒரு சபதமாகவே எடுத்துக் கொண்டு வளர்ந்தான் அவன்.

அதிர்ஷ்டத்தின் கைத்தாங்கல் இல்லாமல் கூட திறமை மேலுக்கு வரத்தான் செய்யும் - என்ன கொஞ்சம் நாளாகும்! ஆனால் கவிதைத் திறமை வேகமாகக் கண்டறியப்பட்டது.

சிறு பத்திரிகைகளில் அவன் கவிதைகள் வெளியாகி அறிவுஜீவிகள் வட்டத்தில் மதிக்கப்பட்டான். பிரபல பத்திரிகைகளிலும் - வேறு காரணங்களுக்காக விவாதப் பொருளானான்.

முதல்வரின் மணிவிழா தொடர்பாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கவியரங்கில் கலந்து கொள்ள அனுஷ் மறுத்தது (அவரைப் புகழ்ந்து பாட வேண்டுமே!) ஒரு பிரச்னையாக வெடித்தது.

"மதர் தெரசாவைப் பற்றிக் கூட பாட்டு எழுத மாட்டீங்களா?" என்ற ஒரு நிருபர் கேள்விக்கு, "அதை அவரே விரும்ப மாட்டார்" என்று கூறி மறுத்தது மற்றொரு தலைப்புச் செய்தியானது.

தெருமுனைகளிலும் அலுவலகங்களிலும் அனுஷைப் பற்றிப் பட்டிமன்றங்கள்.

"கொம்பன்னு நினைப்பு. பெரிய தலைவர்களைப் பற்றியெல்லாம் பாட்டு எழுதினவங்க வெத்துவேட்டா?"

"சூரியனும் தாமரையும் பேசிக்கிறா மாதிரி இவர் ஒரு கவிதை எழுதியிருந்தாரு இல்லையா? அதை 'டைட்டில் சாங்'குக்குப் பின்னணியா வச்சுக்கிறேன்னு வாங்கிட்டுப் போய் டூயட்டுக்குப் பயன்படுத்திக்கிட்டாங்களாம். காதலனும் காதலியும் அந்த வரிகளைப் பாடறமாதிரி படமெடுத்ததுக்காக இயக்குனர் மேலே கேஸ் போட்டிருக்கிறார் கவிஞர் அனுஷ். அவனவன் டைரக்டர் மணிஷங்கர் படத்திலே தன் பாட்டு இடம் பெறணும்னு அலையறான். இவரு என்னடான்னா....?"

என்றாலும் அவனையும், அவனது கொள்கையையும் புரிந்து கொண்டவர்களின் வட்டம் பெருகியது. ஆங்கிலப் பத்திரிகைகளில் அவன் படைப்புக்கள் மொழி பெயர்க்கப்பட்டன. வங்காள, கேரள, மராத்தியக்

"நதி நீர் பங்கீட்டு பேச்சுவ உடன்பாடு ஏற்பட்டுடுச்சாம்!"
"வெரிகுட்! என்ன உடன்பாடு?"
"இறுதி உடன்பாடு ஏற்படும்வரை தொடர்ந்து பேசறதுன்னு இடைக்கால உடன்பாடு!"
—ஆர்.ரகோத்தமன்



கவிஞர்கள் அனுஷுக்கு அறிமுகமானார்கள்.

எதிர்பாராது கிடைத்த ஞானபீடப் பரிசு அவனை உயரத் தூக்கி வைத்தது. ஸ்வீடனிலிருந்து அளிக்கப்படும் சர்வதேச இலக்கியப் பரிசுக்குக் கூட அவன் பெயர் பரிந்துரைக்கப் பட்டிருக்கிறது என்றது ஓர் ஆங்கில வார இதழ்.

'பூர்ணிமா, நீங்க காட்டிய பாதையிலேயிருந்து நான் மாறாததுதான் இந்த வெற்றிக்குக் காரணம். உங்கள் ஆலோசனையை நான் மீறியது ஒரே ஒருமுறைதான். அந்த மீறல்தான் இன்று வங்கி லாக்கரில். அதைப் பார்க்கத்தான் அனுஷின் இந்த மாதாந்திரப் பயணம்.'

"என்ன சார் வழக்கம்போல் ஐந்தாம் தேதி தவறாம வந்துட்டீங்களே." மாஸ்டர் கீயினால் லாக்கரைத் திருகிவிட்டு, வங்கி ஊழியர் புன்னகையோடு நகர்ந்தார். 'அன்றுதான் எனக்கு பூர்ணிமா ஞானஸ்நானம் செய்த தேதி' என்பதை அனுஷ் மனத்திற்குள் கூறிக்கொண்டே தன் சாவியைத் திருகினான். அத்தனை பெரிய லாக்கரில் கிடந்தது ஒரே ஒரு பெரிய தாள். பூர்ணிமாவைப் பற்றி அவன் எழுதிய பாடல். வழிகாட்டியாக, சிநேகிதியாக, குருவாக இருந்த அவளைப் பாராட்டி எழுதிய கவிதை. நரஸ்துதி! தாளின் வலதுபக்க மூலையில் என் வாழ்வில் பூரணத்துவத்தை ஏற்படுத்திய பூர்ணிமாவுக்கு' என்று எழுதியிருந்தான். இதைப் பார்க்க நேர்ந்தால் அவள் எவ்வளவு சங்கோஜப்படுவாள், திடுக்கிடுவாள், ஏன் கிழித்துக் கூடப் போட்டுவிடுவாள் என்று நினைத்துக் கொண்டான்.

விசாகப்பட்டினத்தில் வீசிய வழக்கமான தொரு புயலில் வீடு இடிந்து விழ, இறந்த அம்மா, இறக்கவிருந்த அப்பா இவர்களை கவனித்துக் கொண்டிருந்ததில் பூர்ணிமாவின் நிலையைச் சென்று பார்க்க முடியவில்லை. நான்கு நாட்கள் கழிந்த போது, அவளது பம்பாய் அத்தை வீட்டுக்கு அவளையும் அழைத்துக் கொண்டு அவளது பெற்றோர் சென்று விட்டதாகத் தெரிந்தது. இன்றுவரை தகவல் இல்லை.

தன் கவிதையை மீண்டும் ஒருமுறை ரசனையோடு படிக்க நினைத்தபோது வங்கி ஊழியரின் குரல் கேட்டது. "சார் ஒரு அம்மா அவசரமாகத் தன் லாக்கரை ஆபரேட் செய்யணுமாம். கொஞ்சம் சீக்கிரம் வெளியே வரமுடியுமா?"

'வெளியே போய் தனிமையில் படித்துப் பார்ப்போம்.' அந்த அம்மா போன பிறகு மீண்டும் இதை லாக்கரில் வைக்கலாம்.'

வெளியில் வந்தபோது ஆனந்தப் புயல். அறைக்குள் பூர்ணிமா நுழைந்து கொண்டிருந்தாள். இவனைப் பார்க்கவில்லை. அனுஷின் உடல் இயக்கமே ஒரு கணம் நின்றுபோக, அவனது கவிதைப் படைப்பு அவள் பாதத்தின் அருகில் விழுந்தது. வலது ஓரக் குறிப்பை தன்னிச்சையாக அவள் கண்கள் படிக்க, அடையாளம் புரிபட, "அனுஷ்" என்றபடி அவனை உற்று நோக்கினாள்.

"வா வா, இங்கே உட்கார்ந்து பேசலாம்'. இயல்பாக அவன் கைகளைப் பற்றியபடி சற்றுத் தள்ளியிருந்த சோபாவை நோக்கி நகர்ந்தாள்.

"பம்பாயிலிருந்து போன வாரம்தான் மெட்ராஸுக்கு வந்தேன். முதல் வேலையாக இங்கே பெரிய சைஸ் லாக்கர் ஓப்பன் செய்துட்டேன். பெரிய தொழிலதிபரின் மனைவின்னா சும்மாவா? எத்தனை காஸ்ட்லி சாமான்கள்? எத்தனை நகைகள்? நீ பிரபலமானதுமே உன்னை சந்திக்கணும்னு நினைச்சேன். ஏனோ தட்டிக்கிட்டே வந்துடுச்சு" என்றாள். தன் கூடையில் தயார் நிலையில் வைத்திருந்த ஒரு ஃபைலை எடுத்தாள். அதில் ஒவ்வொரு தாளாக அவனுக்குப் பிரித்துக் காட்டினாள்.

"நான் வி.ஐ.பி. பெண்மணின்றதாலே பம்பாயிலே பல மாதர் சங்கங்களிலேயும், சமூக நிறுவனங்களிலும் எனக்கு முக்கியப் பதவிகள். அப்பப்போ எனக்குப் பாராட்டு விழாவெல்லாம் எடுப்பாங்க. அந்தப் பாராட்டுக் கடிதங்களையும், கவிதைகளையும் இதிலே அடுக்கி வச்சிருக்கேன். படிக்கும்போது சுகமாத்தான் இருக்குது. அது கிடக்கட்டும், மற்ற எந்த மனிதரையும் பாடாத நீ என்னைப் பற்றி கவிதை எழுதியிருக்கேன்னா அது எவ்வளவு பெரிய விஷயம்! தேங்க் யூ. நாளைக்கு ஒரு பிரபல பத்திரிகையிலிருந்து என்னைப் பேட்டி எடுக்க வரப்போறாங்க. அவங்க கிட்டே இந்தக் கவிதையைக் கொடுத்துப் பிரசுரிக்கச் சொல்லப் போறேன்."

வேகமாகத் தன் கவிதையைப் பிடுங்கிக் கொண்ட அனுஷ், தள்ளாடியபடி வெளியே வந்தான். அவன் கைகள் தன்னிச்சையாக அந்தக் கவிதையைக் கிழித்துப் போட்டன.

வாசல் அருகில் இருந்த வங்கி மேனேஜர் "என்ன சார் இனி அடுத்து எப்போ லாக்கரை ஆபரேட் செய்ய வருவீங்க?" என்றார்.

"இனி வர மாட்டேன்" என்ற அனுஷ், தன் சைக்கிளை வெறித்து நோக்கினான்.

# கருணாநிதி இரண்டு; மூப்பனார் இரண்டு; டி.என்.சேஷன் மூன்று...



என்ன கணக்கு என்று குழம்ப வேண்டாம் - இந்தப் பிரமுகர்கள் கலந்து கொள்ளும் இசை விழாத் துவக்க-நிறைவு நாள் நிகழ்ச்சிகளின் எண்ணிக்கைதான்!

மற்றவர்களை முந்திக் கொண்டு, சேஷன் டிசம்பர் ஒன்றாம் தேதியே கைங்கர்யத்தை ஆரம்பித்து விட்டார். அன்று கே.வி. நாராயணசாமியின் அறுபதாண்டு இசைச் சேவைக்கான பாராட்டு விழாவில் அவர் பேசியபோது 'ஐயோ பாவம்!' என்று எண்ணத் தோன்றியது. இந்தியாவில் ஊழல் புகாத ஒரே இடம் கலைத் துறை தானாம்...!

சங்கீத மெக்காவாகக் கருதப்படும் ஒரு சபையில் போன வருஷம் சீனியராக பிரமோஷன் கொடுத்த ஒரு கலைஞருக்கு இந்த வருஷம் கல்தா என்பது தெரியவந்தால் சேஷன் 'சிவ சிவா!' என்று தம் அறிக்கையை வாபஸ் வாங்க மாட்டாரோ! அதுதான் தெரிந்திருக்க நியாயமில்லை என்றால், சேஷன் பங்கேற்ற அந்த விழாவில் சிறப்பு அறிவிப்பு : கே.வி. என். மீண்டும் அகாடமியில் பாடுவார். இத்தனை வருட இடைவெளி ஏன் என்று யோசிக்கட்டுமே எலக்‌ஷன் கமிஷனர்.

சீஃப் எலக்‌ஷன் கமிஷனர் போல் சீஃப் செலக்‌ஷன் கமிஷனர் ஒருவர் கலைத் துறையைத் தூய்மைப்படுத்தி நியாயமாக வாய்ப்புகள் தர வழி செய்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!

கே.வி.என். விழாவில் நெகிழ்த்திய டயலாக்: "இந்தப் பாராட்டுக்கெல்லாம் நான் தகுதியுடையவனா, தெரியல்லை"- இது கே.வி.என்.

"சந்தேகமே வேண்டாம்!" என்று ரசிகர் கூட்டத்திலிருந்து ஒருவர் கூவ... அதுவே அன்றைக்கு அவருக்குக் கிடைத்த மிகப் பெரிய பாராட்டு!



• ரமணி

விருதுகள் வரிசையில் பார்த்தால், புல்லாங்குழல் ரமணியின் பெயருக்கு முன்னால் 'சங்கீத கலாநிதி' இனி சேர்ந்து கொள்ளும்.

• எம்.எஸ்.

இந்த வருடம் நாரதகான சபா ரொம்பத் தகுதியுள்ள ஒரு நபருக்கு 'நாத பிரும்மம்' விருது தருகிறது - வயலின் வி.வி. சுப்ரமண்யம் - மேடைக் கலைஞராக மட்டுமின்றி ஆராய்ச்சியாளர், ஆசிரியர் என்கிற முறையிலும் முத்திரைகள் பதித்தவர்.



• வி. வி. சுப்ரமண்யம்

எம்.எஸ்.ஸுக்கு பாரத ரத்னா மட்டுமே பாக்கி என்று நினைத்தோம். 'இல்லை' என்று ரசிக ரஞ்சனி சபாவினர் 'கலாரத்னா' பட்டத்தை அளிக்கிறார்கள். மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ்ஸில் எம்.எஸ். கையால் விருது பெறப் போகிறவர் எம்.கே! (மணி கிருஷ்ணசாமி) - 'சங்கீத கலா நிபுண' இவருடைய பிற பட்டங்களுடன் சேர்கிறது.

எம்.எஸ். குத்து விளக்கேற்ற, செம்மங்குடி வாழ்த்த, எம்.ஏ.எம்.ராமசாமி தலைமை தாங்க 'இசைப் பேரொளி' ஆகப் போகிறவர்

# இந்த வருஷம் என்ன ஸ்பெஷல்?

சௌம்யா. இந்த நிகழ்ச்சியை ஏற்பாடு செய்யும் கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் அண்ணா நகரில் தனியாக ஒரு தமிழிசை விழாவும் நடத்த விருப்பது கூடுதல் சிறப்பு. அதில் வாசிக்கப் போகும் குன்னக்குடி, 'தமிழ்க்குடிமகன்' ராகம் தயார்பண்ணிக் கொண்டிருப்பாரோ? என்று கேட்டால் இடக்கு பண்ண வேண்டாம் என்கிறது 'சங்கீத கலா சிகாமணி' என்கிற பட்டத்தை அவருக்குத் தரும் இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ்.



* மணி கிருஷ்ணசாமி

"இந்த வருஷம் ஸ்பான்ஸர்கள் கம்மி! அதுதான் ஸ்பெஷல்!" என்று கூறும் கிருஷ்ண கான சபையினர், அதற்காக நிகழ்ச்சிகள் எதையும் குறைத்ததாகத் தெரியவில்லை. இவர்களின் நாட்டிய கலை கான்பரன்ஸ் சித்ரா விஸ்வேஸ்வரன் தலைமையில். கருணாநிதி இங்கே நிருத்ய சூடாமணி வழங்க விருப்பது அனிதா ரத்னத்துக்கு. தமிழிசைச் சங்கம் டி.ஆர். பாப்பாவை 'இசைப் பேரறிஞர்' ஆக்குகிறது.




* குன்னக்குடி

நிகழ்ச்சிகளில் ஏதாவது சிறப்பு தேடி சல்லடை போட்டால் சில அதிசயங்கள் :

25 வயலின்களுடன் கன்யாகுமரி ஒரு கச்சேரி செய்யப் போகிறார்!

ஐம்பதாண்டு சுதந்தரத்தையொட்டி லக்ஷ்மி விச்வநாதன் 'சதுர்-அங்கம்' என்று ஒரு நாட்டிய நிகழ்ச்சி தயாரித்துள்ளார்.

ஒய்.ஜி. மதுவந்தி இன்னொரு நாட்டிய நாடகம் அரங்கேற்றுகிறார் : உன்னிகிருஷ்ணன், பாம்பே ஜெயஸ்ரீ என்று நட்சத்திரங்களைப் பிடித்து அதற்குப் பாட வைத்துள்ளார் (ஒலிப்பதிவு)!



* டி. ஆர். பாப்பா

நாதஸ்வர இசைக்கு நடனமாடப் போகிறார் பத்மினி ரவி!

லால்குடி விஜயலக்ஷ்மி (வயலின்) வாய்ப்பாட்டுக் கச்சேரி. (போன வருஷமே இதில் நல்ல பெயர் வாங்கியதாக ஞாபகம்) - அம்மணிக்கு ஒரு அப்பீல். பாடுவதற்குத்தான் நிறைய பேர் இருக்காங்களே, உங்களை மாதிரி நல்ல பக்கவாத்தியக்காரர்கள்தான் குறைவு - வயலின் ஸோலோவையும் சரியான விகிதாசாரத்தில் சேர்த்துக் கொள்ளுங்கள்.

இந்த வருஷம் 'டிசம்பர்' சீசன் 'அக்டோபரி'லேயே ஆரம்பித்து விட்டது! நவராத்திரி இசைவிழா என்று சென்னையின் பல்வேறு பக்தஜன சபாக்களும் தேவஸ்தானங்களும் ஸ்ரீமடங்களும் போட்டி போட்டுக் கொண்டு நடத்தித் திணறடித்து விட்டார்கள்!

அந்த அலை ஓய்வதற்குள் கந்த சஷ்டி கலை நிகழ்ச்சிகள் தொடங்கி விட்டன. தொடர்ந்து 'குருகுஹாஞ்சலி' என்று முத்துஸ்வாமி தீக்ஷிதருக்கு அஞ்சலியாக ஒரு சீரீஸ்! பாடியவர்கள் எல்லோருமே 'டாப் ராங்க்', அனுமதியும் அனேகமாக இலவசம்... கேட்க வேண்டுமா கூட்டத்துக்கு...!

இசைப் ப்ரியர்கள் இதையெல்லாம் நுகர்ந்து நிமிர்வதற்குள் டிசம்பர் விழா! நாதோபாஸனா, பிற சபைகளில் மேடை கிடைக்காத தகுதியாளர்களுக்கு மட்டும் வாய்ப்பளிக்கிறது! கலை விழா நடத்தும் அத்தனை சபாக்களுக்கும் வசூலில் ஒரு கண் இருக்க, 'அனுமதி இலவசம்' என்று அடையாறு பத்மநாப சுவாமி கோயிலில் திரிவேணி ஆர்ட்ஸ் சொஸைடி நடத்தும் ஒரு இசை விழா! காண்டீன் கேசரியில் கிடைக்கும் அபூர்வ முந்திரிப்பருப்பு மாதிரி!

**- எஸ்.வி.என்.**

பாரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - விமானத் தபால் : ரூ. 525/-.



• விச்வநாதன் வீட்டில்.... பாடுபவர் அருணா ரங்கநாதன்

# விமர்சகர் பேனாவுக்குப் பயப்பட வேண்டாம்!

வீட்டுக் கச்சேரி!

வீட்டுக் கச்சேரி...? இசை ஆர்வமும் இட வசதியும் பொருளாதார வசதியும் உடையவர்கள் தங்கள் வீடுகளுக்குக் கலைஞர்களை அழைத்துப் பாட, வாசிக்க வைக்கிறார்கள். நெருங்கிய நண்பர் வட்டத்துக்கு மட்டுமே அழைப்பு விடுக்கப்படுகிறது.

சென்னையில்தான் அனேகமாக சபா கச்சேரிகள் நடக்கின்றனவே-இப்படி தனியொரு ஏற்பாட்டுக்கு என்ன அவசியம்?

'அவசியத்துக்காக அல்ல, ஆசைக்காக நடத்துகிறோம்'

என்கிறார்கள் இந்தக் கச்சேரிகளைத் தங்கள் வீடுகளில் நடத்த முன் வரும் சிலர். வீட்டுக் கச்சேரிதானே என்று இல்லாமல் கலைஞர்களுக்கு சன்மானமும் அளித்து வருகிறார்கள்.

இந்த நிகழ்ச்சிகளில் ஆதாயமும் இருக்கத்தான் செய்கிறது:

வீட்டுத் தோட்டத்திலிருந்து மண் மணமும் மலர் மணமும் வீச, வராந்தாவிலோ கூடத்து ஜமுக்காளத்திலோ உட்கார்ந்து பாட்டு கேட்பது தனி சுகம். சிறிய இடம் என்பதால் கலைஞருக்கும், ரசிகருக்குமிடையே அணுக்கம் கலபமாக அமைந்து போகிறது. அதனாலேயே நிகழ்ச்சியின் வெற்றி ஐம்பது சதவிகித உத்தரவாதம் பெறுகிறது! தேர்ந்தெடுத்த அழைப்பாளர்களே வருவதால் அந்த சின்ன ரசிகர் கூட்டம்கூட நிரம்பிய அரங்குக்கு எந்த வகையிலும் சளைத்தல்ல...

''பெரியவர் செம்மங்குடி, எம்.எஸ்.அம்மா எல்லாருமே இங்க பாடியிருக்கிறார்கள்...'' என்கிறார் தியாகராஜன். தமது மயிலாப்பூர் வீட்டுக் கூடத்தை ஞாயிறு மாலைகளில் இசையரங்கமாக மாற்றி வருபவர். இவர் முசிறி சுப்ரமண்ய அய்யரின் பேரன். ''தாத்தாவின் சங்கீத ரசனை தொடர வேண்டும் இல்லையா...?'' என்று கேட்கிறார்.

நண்பர்கள் விலாசத்தைக் கம்ப்யூட்டரில் பதிவு செய்து, கச்சேரி தேதி உறுதியானதும் கடிதம் அனுப்புவது, மைக், நாற்காலி என்று இதர ஏற்பாடுகள் செய்வது... வீட்டுக் கச்சேரியையொட்டி சின்னதும் பெரிதுமாக வேலைகள் உண்டு. டெலிபோன் ரிசீவரை நினைவாக கீழே எடுத்து வைப்பது உள்பட.

பாடகர், கோபாலகிருஷ்ண பாரதியையும் பாபநாசம் சிவனையும் உருகி உருகிப் பாடுகிறார். அலறாத ஸ்பீக்கர்கள் இதமாக ஒலிபெருக்கி செவிகளுக்குத் தருகின்றன. நசநசவென்று கச்சேரிகளில் கேட்கும் பேச்சுக்குரல் சுத்தமாக இல்லை... சபா கச்சேரி அல்ல இது... சமீப காலமாக சென்னையில் பிரபலமாகி வரும்

பெசன்ட் நகர் பகுதியில் 'ஹவுஸ் கான்சர்ட்' நடத்துபவர் தொழிலதிபர் விச்வநாதன். ''பரம்பரையாகவே இசையில் நாட்டம் உள்ள குடும்பம் எங்களுடையது. இலங்கையில் நாங்கள் இருந்தபோது என் மனைவி ரேடியோ சிலோனில் கச்சேரிகள் செய்ததுண்டு. இங்கே வந்தபிறகு இப்படி கச்சேரிகள் நடத்தலாம் என்று யோசனை கொடுத்தவர் முன்னாள் ரயில்வே அதிகாரியும் இசை ரசிகருமான கே.எஸ்.காளிதாஸ்'' என்கிறார்.

ஐம்பது பேர் சௌகரியமாக உட்காரக்கூடிய ஹால் இன்னொரு மயிலாப்பூர் வீட்டு மாடியில்!

''புதிதாக மேடையேறுபவர்களுக்கு இருக்கக்கூடிய சபைக் கூச்சம், பயம் எல்லாம் போக்க இதைப் போன்ற வீட்டுக் கச்சேரிகள் உதவும்'' என்றார் வீட்டுச் சொந்தக்காரர் எஸ்.வி.கிருஷ்ணன். கோவையில் பல கச்சேரிகள் நடத்தியவர்.

வீட்டுக் கச்சேரிகளில் இன்னொரு முக்கிய ஆதாயமாக கிருஷ்ணன் குறிப்பிடுவது ரசிகர்- பாடகர் பிணைப்பை. பிறந்த நாள், திருமண நாள் கொண்டாட்டங்களின் ஓர் அம்சமாக இது போன்ற கச்சேரிகள் நடத்தலாம் என்கிறார்.

''வீட்டுக் கச்சேரிகளில் விமர்சகர் பற்றிய கவலை கிடையாதே!'' - இது மூன்றாவது ஆதாயம்!'' என்று கூறும் கிருஷ்ணன், மயிலை நாகேஷ்வர ராவ் பார்க் அருகே ஒரு சிறிய இசை அரங்கம் கட்டி முடித்திருக்கிறார். 350 பேர் உட்கார முடியும் அதில். இவரது வீட்டுக் கச்சேரிகள் இனி இங்கே இடம் பெறப் போகின்றன என்றும் சொல்கிறார்.

— நம்பி

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka